கழக வெளியீடு — ௪௪

உ

திருச்சிற்றம்பலம்

# ஐந்திலக்கணம்

## பகுதி ௧



௧. நன்னூல்

௨. யாப்பருங்கலம்

௩. யாப்பருங்கலக்காரிகை

௪. தண்டியலங்காரம்



:: திருநெல்வேலித் தென்னிந்திய ::
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி :: சென்னை-1.

# பதிப்புரை

தமிழ்மொழியிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்னும் ஐம்பெரும் பகுதியினையுடையது. இவ்வைந்தும் பஞ்சலட்சணம் அல்லது ஐந்திலக்கணம் என்று வழங்கப் பெறுகின்றது.

இவற்றுள் எழுத்தும், சொல்லும் கற்பார் நன்னூலும்; பொருள் கற்பார் முறையே நாற்கவிராசநம்பியகப்பொருளும், புறப்பொருள் வெண்பா மாலையும்; யாப்பு கற்பார் யாப்பருங் கலமும், யாப்பருங்கலக் காரிகையும்; அணி கற்பார் தண்டியலங்காரமும் பயின்று வருகின்றனர். ஆகலான் இவ்வைந்தனுளொன்றாய பொருளிலக்கணம் பெரிதாகலின் அதனைத் தனிப் புத்தகமாக வெளியிடக் கருதி நிறுத்திக்கொண்டு, எஞ்சிய நான்கிலக்கணங்களையும் சூத்திரமாகவே ஒரு பகுதியாக 'ஐந்திலக்கணம் பகுதி-க' என்று வெளியிட்டிருக்கின்றோம்.

இலக்கணங் கற்பார் சூத்திரங்களை நெட்டுருச் செய்து நினைவிற் பதியவைக்கவேண்டியது இன்றியமையாததாகலான் சூத்திரங்களுக்கெல்லாம் தலைப்புக் கொடுத்தும், பிழையறப் பரிசோதித்தும், கையடக்கமான சிறிய அளவில் அழகியதாகப் பதித்து வெளியிட்

டிருக்கின்றனம். இது தமிழுலகிற்குப் பெரும்பயன் விளைவிக்குமெனக் கருதுகின்றனம்.

இப்பதிப்பிற்கு, பிழைதிருத்தமுதலிய செய்துதவிய, இலக்கணப் பயிற்சி மிக்குடையரான சென்னை வித்துவான் சு. அப்பன் செட்டியாரவர்களின் மாணவரும், தமிழ் மருத்துவருமாகிய திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்களுக்கு மிகவுங் கடமைப்பட்டுள்ளோம்.

# பொருளடக்கம்

## ௩. யாப்பு



## ௪. அணி





உ

திருச்சிற்றம்பலம்

# பவணந்திமுனிவர் வரலாறு



இவர் தொண்டைமண்டலத்தில் சனகாபுரத்தில் இற்றைக்கு எழுநூறு ஆண்டுகளுக்குமுன் சன்மதி முனிவருக்கு மைந்தனாய்த் தோன்றி, தமது இளமையிலேயே பண்டைச் செந்தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பிய நூலுரைகளிலும், வடமொழி வியாகரண முதலியவற்றிலும் வல்லுநராய், தாம் பிறந்த அருக சமயத்தின் அரிதி னுணர்தற் பாலனவாகிய அருங் கருத்துக்களை யெல்லாங் கற்றுத் தெளிந்து, நல்லியல்பிற் சிறந்தவராய், துறவறம் பூண்டு ஒழுகுவாராயினர்.

அங்ஙனமிருக்கும் நாட்களில் ஒரு நாள், இராம நாதபுரத்திற்கும் மதுரைக்கும் இடையிலுள்ள பகுதியில் அரசு செய்துகொண்டிருந்த சீயகங்கன் என்னும் செங்கோல் மன்னன், ஆசிரியர் பவணந்திமுனிவரை நோக்கி, தொல்காப்பிய முதலிய பழைய இலக்கண நூல்கள் தமிழாராய்ச்சி மிக்குடையார்க்கே பயன்படுந் தன்மை யுடையவாயிருத்தலின் எத்திறத்தவருக்கும் எளிதில் விளங்கும்படி ஓர் இலக்கண நூலை இயற்றித்

தருமாறு வேண்ட, ஆசிரியர் அவ்வேண்டுகோட்கிணங்கித் தாம் கற்ற இலக்கிய இலக்கணங்களிலுள்ள அரிய விதிகளையெல்லாந் திரட்டி 'நன்னூல்' என்னும் ஓர் அரிய நூல் இயற்றினர்.

இந்நூல் நூற்பா அகவல்களால் ஆக்கப்பெற்றுள்ளது. தொல்காப்பிய முதலியவற்றிற்கு வழிநூலாகவும், அகத்தியத்திற்குச் சார்புநூலாகவும் கருதப்படுகின்றது. இந்நூலின் பெருமையை 'நன்னூல்' என்னும் இதன் பெயரே இனிது விளக்குகின்றது. தொல்காப்பியத்திற்குப் பின்னெழுந்த இலக்கண நூல்களில் இதைவிடச் சிறந்தது வேறொன்றில்லை என்பது அறிஞர் கருத்து. இதற்குச் சங்கர நமச்சிவாயப்புலவர், சிவஞானசுவாமிகள், விசாகப் பெருமாளையர், மயிலைநாதர், இராமாநுசக் கவிராயர் முதலியோர் உரை இயற்றிருக்கின்றனர். இஃது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி முதலிய ஐந்திலக்கணங்களில் இப்போது முதலிரண்டினையுமே கொண்டு திகழ்கின்றது.

இவர் சைனமதத்தின ரென்பதும், இந்நூலில் வடமொழிவழக்கை ஆங்காங்கு தழுவியுள்ளாரென்பதும் இதனை ஆராய்வார்க்கு இனிது விளங்கும்.



உ

திருச்சிற்றம்பலம்

# சிறப்புப்பாயிரம்

மலர்தலை உலகின் மல்கிருள் அகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியின் ஒருதா னாகி முதலில்
வெறுப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
அற்புத மூர்த்திதன் அலர்தரு தன்மையின்
மனவிருள் இரிய மாண்பொருள் முழுவதும்
முனிவற அருளிய மூவறு மொழியுளும்
குணகடல் குமரி குடகம் வேங்கடம்
எனுநான் கெல்லையின் இருந்தமிழ்க் கடலுள்
அரும்பொருள் ஐந்தையும் யாவரும் உணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னார்
இகலற நூறி இருநில முழுவதும்
தனதெனக் கோலித் தன்மத வாரணம்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்கன்

## சிறப்புப்பாயிரம்

அருங்கலை விநோதன் அமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
என்னு நாமத் திருந்தவத் தோனே.

உ

திருச்சிற்றம்பலம்

# நன்னூல்



## பொதுப்பாயிரம்

### பாயிரத்தின் பெயர்கள்

முகவுரை பதிகம் அணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம். ௧

### பாயிர வகை

பாயிரம் பொதுச்சிறப் பெனஇரு பாற்றே. ௨

### பொதுப்பாயிரம் இன்னதென்பது

நூலே நுவல்வோன் நுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றாம் ஐந்தும்
எல்லா நூற்கும் இவைபொதுப் பாயிரம். ௩

## ௧. நூலினது வரலாறு

### நூல் இன்னதென்பது

*நூலின் இயல்பே நுவலின் ஓரிரு*
*பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்*
*நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி*
*ஐயிரு குற்றமும் அகற்றிஅம் மாட்சியோ*
*டெண்ணான் குத்தியின் ஓத்துப் படலம்*
*என்னும் உறுப்பினிற் சூத்திரங் காண்டிகை*
*விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.* ௪

### மூவகை நூல்

*முதல்வழி சார்பென நூல்மூன் றாகும்.* ௫

### முதனூல் இன்னதென்பது

*அவற்றுள்,*
*வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதனூ லாகும்.* ௬

### வழிநூல் இன்னதென்பது

*முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்*
*பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி*
*அழியா மரபினது வழிநூ லாகும்.* ௭

## சார்புநூல் இன்னதென்பது

இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும். அ

## வழிநூலுக்குஞ் சார்புநூலுக்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி

முன்னோர் மொழிபொருளே அன்றி அவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவம் என்பதற்கும்-முன்னோரின்
வேறுநூல் செய்துமெனும் மேற்கோள் இல் என்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள். க

## நூற்பொருட் பயன்

அறம்பொருள் இன்பம்வீ டடைதல்நூற் பயனே. கO

## எழுமதம்

எழுவகை மதமே உடன்படல் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோள் ஒருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்டல் ஏனைப்
பிறிதொடு படாஅன் தன்மதம் கொளலே. கக

## பத்துக்குற்றம்

குன்றக் கூறல் மிகைபடக் கூறல்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்

வழூஉச்சொற் புணர்த்தல் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுதல் நின்றுபயன் இன்மை
என்றிவை ஈரைங் குற்றம் நூற்கே. கஉ

## பத்தழகு

சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல்
ஓசை யுடைமை ஆழமுடைத் தாதல்
முறையின் வைப்பே உலகமலை யாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுதல் நூலிற் கழகெனும் பத்தே. கங

## முப்பத்திரண்டுத்தி

நுதலிப் புகுதல் ஓத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்தல் தொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்தல்
ஒப்பின் முடித்தல் மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் முடிந்தது முடித்தல்

உரைத்து மென்றல் உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிதல் எடுத்துக் காட்டல்
எடுத்த மொழியின் எய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிறநூல் முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்
ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல்
உய்த்துணர வைப்பென உத்திஎண் ணான்கே. கச

## உத்தி இன்னதென்பது

நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
ஏற்புழி அறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துதல் தந்திர உத்தி. கரு

## ஒத்து இன்னதென்பது

நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்ப
தோத்தென மொழிப உயர்மொழிப் புலவர். கசு

## படலம் இன்னதென்பது

ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரின் அதுபடலம் ஆகும். கஎ

### சூத்திரம் இன்னதென்பது

சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வன் ஆடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம். ௧௮

### சூத்திர நிலை

ஆற்றொழுக் கரிமா நோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின்வீழ் வன்னசூத் திரநிலை. ௧௯

### சூத்திரங்களுக்குக் காரணவகையால் வரும் பெயர் வேறுபாடு

பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம். ௨0

### உரையினது பொதுவிலக்கணம்

பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை உதாரணம் வினாவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனோ
டாசிரிய வசனமென் றீரே ழுரையே. ௨௧

### காண்டிகையுரை இன்னதென்பது

கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினாவிடை ஆக்க லானும்
சூத்திரத் துட்பொருள் தோற்றுவ காண்டிகை. ௨௨

### விருத்தியுரை இன்னதென்பது

சூத்திரத் துட்பொரு ளன்றியும் ஆண்டைக்
கின்றி யமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐயம் அகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை எஞ்சா திசைப்பது விருத்தி. ௨௫

### நூலென்னும் பெயர்க்காரணம்

பஞ்சிதன் சொல்லாப் பனுவல் இழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா-எஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நூல்முடியும் ஆறு. ௨௬

உரத்தின் வளம்பெருக்கி உள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா-மரத்தின்
கனக்கோட்டம் தீர்க்குநூல் அஃதேபோல் மாந்தர்
மனக்கோட்டம் தீர்க்குநூல் மாண்பு. ௨௭

## உ. ஆசிரியனது வரலாறு

### நல்லாசிரிய ரிலக்கணம்

குலனருள் தெய்வங் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை

நிலமலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகிய லறிவோ டுயர்குணம் இனையவும்
அமைபவன் நூலுரை ஆசிரி யன்னே. உ௬

தெரிவரும் பெருமையும் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி அளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே. உஎ

அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே. உஅ

ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே. உ௯

மங்கல மாகி இன்றி யமையா
தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே. ௩0

## ஆசிரியராகாதவ ரிலக்கணம்

மொழிகுணம் இன்மையும் இழிகுண இயல்பும்
அழுக்கா றவாவஞ்சம் அச்சம் ஆடலும்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையும்
உடையோர் இலரா சிரியரா குதலே. ௩க

பெய்த முறையன்றிப் பிறழ உடன்றரும்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே. ௩உ

தானே தரக்கொளின் அன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா இடத்தது மடற்பனை. ௩௩

அரிதிற் பெயக்கொண் டப்பொருள் தான்பிறர்க்
கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை. ௩௪

பல்வகை உதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கும் அதுமுடத் தெங்கே. ௩௫

## ௩. பாடஞ்சொல்லலினது வரலாறு

ஈதல் இயல்பே இயம்புங் காலைக்
காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்
சிறந்துழி இருந்துதன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்தவன் உளங்கொளக்
கோட்டமில் மனத்தின் நூல்கொடுத்தல் என்ப. ௩௬

## ௪. மாணாக்கனது வரலாறு

### மாணாக்க ரிலக்கணம்

தன்மகன் ஆசான் மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே. ௩௭

அன்னம் ஆவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடம்ஆ டெருமை நெய்யரி
அன்னர் தலைஇடை கடைமா ணாக்கர். ௩அ

மாணாக்கராகாதவ ரிலக்கணம்

களிமடி மானி காமி கள்வன்
பிணியன் ஏழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் தறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே. ௩௯

## ரு. பாடங்கேட்டலின் வரலாறு

கோடல் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்
திருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவன் அன்னஆர் வத்த னாகிச்
சித்திரப் பாவையின் அத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போதல் என்மனார் புலவர். ௪0

நூல்பயில் இயல்பே நுவலின்வழக் கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை அமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினாதல் வினாயவை விடுத்தல் என்றிவை
கடனாக் கொளினே மடம்நனி இகக்கும். ௪௧

ஒருகுறி கேட்போன் இருகாற் கேட்பிற்
பெருக நூலிற் பிழைபா டிலனே. ௪௨

முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும். ௪௩

ஆசான் உரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றலன் ஆகும். ௪௪

அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்
செவ்விதின் உரைப்ப அவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும். ௪௫

அழலின் நீங்கான் அணுகான் அஞ்சி
நிழலின் நீங்கான் நிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசான் உவக்கும் அத்திறம்
அறத்தின் திரியாப் படர்ச்சி வழிபாடே. ௪௬



# சிறப்புப்பாயிரத் திலக்கணம்

## சிறப்புப் பாயிரத்துக்குப் பொதுவிதி

ஆக்கியோன் பெயரே வழியே எல்லை
நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாய்எண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே. சஎ

காலங் களனே காரணம் என்றிம்
மூவகை யேற்றி மொழிநரும் உளரே. சஅ

## நூற்பெயருக்குச் சிறப்புவிதி

முதனூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் தன்மைமுதல் நிமித்தினும்
இடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே. சகூ

## வழியின்வகையாகிய நூல்யாப்புக்குச் சிறப்புவிதி

தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப. ருo

## சிறப்புப்பாயிரஞ் செய்தற்குரியார் இவரென்பது

தன்ஆ சிரியன் தன்னொடு கற்றோன்
தன்மா ணாக்கன் தகும்உரை காரனென்
றின்னோர் பாயிரம் இயம்புதல் கடனே. ருக

## சிறப்புப்பாயிரம் பிறர்செய்தற்குக் காரணம்

தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தற் புகழ்தல் தகுதி அன்றே. ௫௨

## தற்புகழ்ச்சி குற்றமாகாத இடங்கள்

மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினும்
தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்
மன்னிய அவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையும்
தன்னைப் புகழ்தலும் தகும்புல வோர்க்கே. ௫௩

## பாயிரம் நூலுக்கு இன்றியமையாச் சிறப்பினைத் தெரிப்பது

ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே. ௫௪

மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோள் நல்லார்க் கணியும்போல்—நாடிமுன்
ஐதுரையா நின்ற அணிந்துரையை எந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது. ௫௫



# க. எழுத்ததிகாரம்

## க. எழுத்தியல்

### கடவுள் வணக்கமும் அதிகாரமும்

பூமலி அசோகின் புனைநிழல் அமர்ந்த
நான்முகற் றொழுது நன்கியம் புவன் எழுத்தே. ருஎ

### எழுத்திலக்கணத்தின் பகுதி

எண்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை
முதலீ றிடைநிலை போலி என்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே. ருஅ

## க. எண்

### எழுத்து இன்னதென்பதும் அதன் வகையும்

மொழிமுதற் காரண மாம்அணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனஇரு வகைத்தே. ருகூ

### முதலெழுத்தின் விரி

உயிரும் உடம்புமாம் முப்பது முதலே. ௫௯

### சார்பெழுத்தின் வகை

உயிர்மெய் ஆய்தம் உயிரள பொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத் தாகும். ௬0

### சார்பெழுத்தின் விரி

உயிர்மெய் இரட்டுநூற் றெட்டுயர் ஆய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறேழ் அஃகும் இம்முப் பானேழ்
உகரம் ஆறா றைகான் மூன்றே
ஔகான் ஒன்றே மஃகான் மூன்றே
ஆய்தம் இரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபான் என்ப. ௬௧

## ௨. பெயர்

### பெயர்க்கெல்லாம் பொதுவிலக்கணம்

இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின. ௬௨

## எழுத்தின் பெயர்

அம்முதல் ஈரா றாவி கம்முதல்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர். ௬௩

அவற்றுள்,
அ இ உ எ ஒக்குறில் ஐந்தே. ௬௪

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔநெடில். ௬௫

அ இ உம்முதல் தனிவரின் சுட்டே. ௬௬

எ யா முதலும் ஆ ஓ ஈற்றும்
ஏ இரு வழியும் வினவா கும்மே. ௬௭

வல்லினம் கசடதபறவென வாறே. ௬௮

மெல்லினம் ஙஞணநமனவென வாறே. ௬௯

இடையினம் யரலவழளவென வாறே. ௭௦

## இனவெழுத்து

ஐஔ இஉச் செறிய முதலெழுத்
திவ்விரண் டோரினம் ஆய்வரல் முறையே. ௭௧

## இனமென்றதற்குக் காரணம்

தான முயற்சி அளவு பொருள்வடி
வானவொன் றாதியோர் புடையொப் பினமே. ௭௨

### ௩. முறை

சிறப்பினும் இனத்தினும் செறிந்தீண் டம்முதல்
நடத்தல் தானே முறைஆ கும்மே. ௭௩

## ௪. பிறப்பு

### பிறப்பின் பொதுவிதி

நிறைஉயிர் முயற்சியின் உள்வளி துரப்ப
எழும்அணுத் திரள்உரம் கண்டம் உச்சி
மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்
வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே. ௭௪

### முதலெழுத்துக்களுக்கு இடப்பிறப்பு

அவ்வழி,
ஆவி இடைமை இடமிட றாகும்
மேவு மென்மைமூக் குரம்பெறும் வன்மை. ௭௫

### முதலெழுத்துக்களுக்கு முயற்சிப்பிறப்பு

அவற்றுள்,
முயற்சியுள் அ ஆ அங்காப் புடைய. ௭௬

இ ஈ எ ஏ ஐ அங் காப்போ
டண்பல் முதல்நா விளிம்புற வருமே. ௭௭

உ ஊ ஒ ஓ ஔ இதழ் குவிவே. ௭௮

கஙவும் சஞவும் டணவும் முதலிடை
நுனிநா அண்ணம் உறமுறை வருமே. எக

அண்பல் அடிநா முடியுறத் தநவரும். அ0

மீகீழ் இதழுறப் பம்மப் பிறக்கும். அக

அடிநா அடியணம் உறயத் தோன்றும். அஉ

அண்ணம் நுனிநா வருட ரழவரும். அங

அண்பல் முதலும் அண்ணமும் முறையின்
நாவிளிம்பு வீங்கி ஒற்றவும் வருடவும்
லகார ளகாரமாய் இரண்டும் பிறக்கும். அச

மேற்பல் இதழுற மேவிடும் வவ்வே. அரு

அண்ணம் நுனிநா நனியுறின் றனவரும். அசு

## சார்பெழுத்துக்கு இடமுயற்சி

ஆய்தக் கிடந்தலை அங்கா முயற்சி
சார்பெழுத் தேனவும் தம்முதல் அனைய. அஎ

## பிறப்புக்குப் புறனடை

எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பில்
திரிபும் தத்தமில் சிறிதுள ஆகும். அஅ

## உயிர்மெய்

புள்ளிவிட் டவ்வொடு முன்உரு வாகியும்
ஏனை உயிரோ டுருவு திரிந்தும்

உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய். ௮௯

## முற்றாய்தம்

குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே. ௯௰

## உயிரளபெடை

இசைகெடின் மொழிமுதல் இடைகடை நிலைநெடில்
அளபெழும் அவற்றவற் றினக்குறில் குறியே. ௯௧

## ஒற்றளபெடை

ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீழ் இடைகடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே. ௯௨

## குற்றியலிகரம்

யகரம் வரக்குறள் உத்திரி இகரமும்
அசைச்சொல் மியாவின் இகரமும் குறிய. ௯௩

## குற்றியலுகரம்

நெடிலோ டாய்தம் உயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி இறுதி வன்மையூர் உகரம்
அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே. ௯௪

### ஐகார ஔகாரக் குறுக்கங்கள்

தற்சுட் டளபொழி ஐம்மூ வழியும்
நையும் ஔவும் முதல்அற் றாகும். கரு

### மகரக் குறுக்கம்

ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும். கசு

### ஆய்தக் குறுக்கம்

லளவீற் றியைபினும் ஆய்தம் அஃகும். கஎ

---

## ரு. உருவம்

தொல்லை வடிவின எல்லா எழுத்தும்ஆண்
டெய்தும் எகர ஒகரமெய் புள்ளி. கஅ

---

## சா. மாத்திரை

### எழுத்துக்களின் மாத்திரை

மூன்றுயிர் அளபிரண் டாநெடில் ஒன்றே
குறிலோ டையௌக் குறுக்கம் ஒற்றளை
பரையொற் றிஉக் குறுக்கம் ஆய்தம்
**கால்குறள் மஃகான் ஆய்த மாத்திரை.** கக

### மாத்திரை இன்னதென்பது

இயல்பெழு மாந்தர் இமைநொடி மாத்திரை. கo௦

### மாத்திரைக்குப் புறனடை

ஆவியும் ஒற்றும் அளவிறந் திசைத்தலும்
மேவும் இசைவிளி பண்டமாற் றாதியின். கoக

---

## ௭. முதனிலை

### மொழிக்கு முதலில் வரும் எழுத்துக்கள்

பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞஙஈ ரைந்துயிர் மெய்யும் மொழிமுதல். கoஉ

### பொதுவிதியுட் சிறப்புவிதி

உஊ ஒஓ அலவொடு வம்முதல். கoரு

அஆ உஊ ஓஔ யம்முதல். கoச

அ ஆ எ ஒவ்வோ டாகு ஞம்முதல். கoரு

சுட்டியா எகர வினாவழி யவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே. கoசு

---

## அ. இறுதிநிலை

### மொழிக்கிறுதியில் வரும் எழுத்துக்கள்

ஆவி ஞணநமன யரலவ ழளமெய்
சாயும் உகரநா லாறும் ஈறே. 　　கடுஎ

### சிலவற்றிற்குச் சிறப்புவிதி

குற்றுயிர் அளபின் ஈறாம் எகரம்
மெய்யோ டேலாதொந் நவ்வொ டாமௌக்
ககர வகரமோ டாகு மென்ப. 　　கடுஅ

### எழுத்தினது முதலும் ஈறும்

நின்றநெறி யேஉயிர் மெய்முதல் ஈறே. 　　கடுகூ

---

## கூ. இடைநிலை மெய்ம் மயக்கம்

கசதப ஒழித்த ஈரேழன் கூட்டம்
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகுமிவ் இருபால் மயக்கும் மொழியிடை
மேவும் உயிர்மெய் மயக்கள வின்றே. 　　ககம

### வேற்றுநிலை மெய்ம்மயக்கத்திற்குச் சிறப்புவிதி

ஙம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே 　　கக௧

ஞநமுன் தம்மினம் யகரமொ டாகும். 　　ககஉ

டறமுன் கசப மெய்யுடன் மயங்கும். ககங

ணனமுன் இனங்கச ஞபமய வவ்வரும். ககச

மம்முன் பயவ மயங்கும் என்ப. ககரு

யரழ முன்னர் மொழிமுதல் மெய்வரும். ககசா

லளமுன் கசப வயவொன் றும்மே. ககஎ

## உடனிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்பு விதி

ரழவல்லன தம்முன் தாம் உடன் நிலையும். ககஅ

## தனிமெய்யுடன் தனிமெய்யாய் மயங்குவன இவை மொழிக்கு உறுப்பாக மயங்காதன இவை

யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றும்ரழத் தனிக்குறில் அணையா. கககூ

## செய்யுளில் ஈரொற்றாய் நிற்கும் எழுத்துக்கள்

லளமெய் திரிந்த னணமுன் மகாரம்
நைந்தீ ரொற்றாஞ் செய்யுள் உள்ளே. கஉ0

## முதனிலை இறுதிநிலை இடைநிலைகளுக்குப் புறனடை

தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியும் இயலும் என்ப. கஉக

## க௦. போலி

### மொழியிறுதிப்போலி

*மகர இறுதி அஃறிணைப் பெயரின்*
*னகரமோ டுறழா நடப்பன உளவே.*　　க௦. உ

### மொழிமுதற்[போலியும் மொழியிடைப் போலியும்

*அ ஐ முதலிடை ஒக்கும் சஞயமுன்.*　　க௦. ங

### மொழியிடைப்போலி

*ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி*
*ஞஃகான் உறழும் என்மரும் உளரே.*　　க௦. ச

---

### சந்தியக்கரம்

*அம்முன் இகரம் யகரம் என்றிவை*
*எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோ*
*டுவ்வும் வவ்வும் ஔவோ ரன்ன.*　　க௦. ரு

---

### எழுத்தின் சாரியைகள்

*மெய்கள் அகரமும் நெட்டுயிர் காரமும்*
*ஐயௌக் கானும் இருமைக் குறிலிவ்*
*இரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.*　　க௦. சு

---

## இவ்வியலுக்குப் புறனடை

*மொழியாய்த் தொடரினும் முன்னனைத் தெழுத்தே.*



# உ. பதவியல்

## பதம்

### பதம் இன்னதென்பதும் அதன்வகையும்

*எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின்*
*பதமாம் அதுபகாப் பதம்பகு பதம்என*
*இருபா லாகி இயலும் என்ப.* கஉ அ

### ஓரெழுத்தொருமொழி

*உயிர்மவில் ஆறும் தபநவில் ஐந்தும்*
*கவசவில் நாலும் யவ்வில் ஒன்றும்*
*ஆகு நெடில்நொது ஆங்குறில் இரண்டோ*
*டோரெழுத் தியல்பதம் ஆறேழ் சிறப்பின.* கஉகூ

### தொடரெழுத்தொருமொழி

*பகாப்பதம் ஏழும் பகுபதம் ஒன்பதும்*
*எழுத்தீ றாகத் தொடரும் என்ப.* கங0

### பகாப்பதம்

பகுப்பால் பயனற் றிடுகுறி ஆகி
முன்னே ஒன்ருய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை இடைஉரி நான்கும் பகாப்பதம். ௧௩௧

### பகுபதம்

பொருள் இடம்காலஞ் சினைகுணம் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைபகு பதமே. ௧௩௨

### பகுபதவுறுப்புக்கள்

பகுதி விகுதி இடைநிலை சாரியை
சந்தி விகாரம் ஆறினும் ஏற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும். ௧௩௩

## பகுதி

### பகுதி இன்னதென்பது

தத்தம்
பகாப்ப தங்களே பகுதி ஆகும். ௧௩௪

### பண்புப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை

திண்மை உண்மை நுண்மை இவற்றெதிர்
இன்னவும் பண்பின் பகாநிலைப் பதமே. ௧௩௫

ஈறு போதல் இடைஉகரம் இய்யாதல்
ஆதி நீடல் அடியகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டல்முன் னின்றமெய் திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே. ௧௩௬

## தெரிநிலைவினைப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வெளவுரிஞ் உண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகென்
றெய்திய இருபான் மூன்றாம் ஈற்றவும்
செய்யென் ஏவல் வினைப்பகாப் பதமே. ௧௩௭

## ஏவற்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

செய்யென் வினைவழி விப்பி தனிவரின்
செய்வியென் ஏவல் இணையின் ஈரேவல். ௧௩௮

## வினைப்பகுதிக்குப் புறனடை

விளம்பிய பகுதிவே றாதலும் விதியே. ௧௩௯

### விகுதி

அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம் எம்ஏம் ஓமொ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவும் என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினும் சிலவே. ௧௪௰

---

## இடைநிலை

### பெயரிடைநிலை

இலக்கியம் கண்டதற் கிலக்கணம் இயம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை யெனலே. ௧௪௧

### இறந்தகாலவினையிடைநிலை

தடறவொற் றின்னே ஐம்பால் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழில் இடைநிலை. ௧௪௨

### நிகழ்காலவிடைநிலை

ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை இடைநிலை. ௧௪௩

### எதிர்காலவிடைநிலை

பவ்வ மூவிடத் தைம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலை யாமிவை சிலஇல. ௧௪௪

### காலங்காட்டும்விகுதி

றவ்வொ டுகர உம்மைநிகழ் பல்லவுந்
தவ்வொ டிறப்பும் எதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வோ டெதிர்வுமின் னேவல்
வியங்கோள் இம்மார் எதிர்வும் பாந்தஞ்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்
எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே. ௧௪௫

---

## வடமொழியாக்கம்

### ஆரியமொழி தமிழில் வடமொழியாதல்

இடையில் நான்கும் ஈற்றில் இரண்டும்
அல்லா அச்சை வருக்கமுத லீறு
யவ்வாதி நான்மை ளவ்வாகும் ஐயைம்
பொதுவெழுத் தொழிந்தநா லேழும் திரியும். ௧௪௬

### ஆரியமொழி வடமொழியாதற்குச் சிறப்புவிதி

அவற்றுள்
ஏழாமுயி ரிய்யும் இருவுமை வருக்கத்
திடையில் மூன்றும் அவ்வம் முதலும்

எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேல்ஒன் று சடவும் இரண்டு சதவும்
மூன்றே அகவும் ஐந்திரு கவ்வும்
ஆஈ றையும் ஈயீ றிகரமும்.　　௧௭

ரவ்விற் கம்முதல் ஆமுக் குறிலும்
லவ்விற் கிம்முதல் இரண்டும் யவ்விற்கு
இய்யு மொழிமுத லாகிமுன் வருமே.　　௧௮

இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி உவ்வும் ஆம்பிற.　　௧௯

## தமிழெழுத்திற் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்

றனழஎ ஒவ்வும் உயிர்மெய்யும் உயிரளபு
அல்லாச் சார்பும் தமிழ்பிற பொதுவே.　　௨௦



# ௩. உயிரீற்றுப்புணரியல்

## புணர்ச்சி

### புணர்ச்சி இன்னதென்பது

மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களும்
தன்னொடும் பிறிதொடும் அல்வழி வேற்றுமைப்
பொருளின் பொருந்துழி நிலைவரு மொழிகள்
இயல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே. ௧௫௧

### அல்வழி வேற்றுமை இவையென்பது

வேற்றுமை ஐம்முதல் ஆறாம் அல்வழி
தொழில்பண் புவமை உம்மை அன்மொழி
எழுவாய் விளிஈ ரெச்சமுற் றிடைஉரி
தழுவு தொடரடுக் கெனஈ ரேழே. ௧௫௨

### இயல்புப் புணர்ச்சி

விகாரம் அனைத்தும் மேவல தியல்பே. ௧௫௩

### விகாரப் புணர்ச்சி

தோன்றல் திரிதல் கெடுதல் விகாரம்
மூன்றும் மொழிமூ விடத்தும் ஆகும். ௧௫௪

### செய்யுள் விகாரம்

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.
ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.　　௧௫௬

### புணர்ச்சி விகாரத்தில் வருவதோரையம் ஒழித்தல்

ஒருபுணர்க் கிரண்டும் மூன்றும் உறப்பெறும்.　　௧௫௭

## பொதுப்புணர்ச்சி

### எல்லாவீற்றின் முன்னும் மெல்லினமும் இடையினமும் புணர்தல்

எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கும்
முன்வரு ஞநமய வக்கள் இயல்பும்
குறில்வழி யத்தனி யைந்நொது முன்மெலி
மிகலுமாம் ணளனல வழிநத் திரியும்.　　௧௫௮

### பொதுப்பெய ருயர்திணைப் பெயரீறு

பொதுப்பெய ருயர்திணைப் பெயர்கள் ஈற்றுமெய்
வலிவரின் இயல்பாம் ஆவி யரமுன்
வன்மை மிகாசில விகாரமாம் உயர்திணை.　　௧௫௯

### வினைப்பெயர் விளிப்பெயர்முன் வல்லினம்

ஈற்றியா வினாவிளிப் பெயர்முன் வலி இயல்பே. ககூ0

### முன்னிலைவினை ஏவல்வினைமுன் வல்லினம்

ஆவி யரழ இறுதிமுன் னிலைவினை
ஏவல்முன் வல்லினம் இயல்பொடு விகற்பே. ககூக

---

## உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி

### உயிர்முன் உயிர் புணர்தல்

இ ஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும். ககூஉ

### வினாச்சுட்டின்முன் நாற்கணமும் புணர்தல்

எகர வினாமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமும் எய்தின் வவ்வும்
பிறவரின் அவையும் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே. ககூ௩

### குற்றியலுகரமுன்னுஞ் சில முற்றியலுகரமுன்னும் உயிரும் யகரமும் புணர்தல்

உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரின் இய்யாம் முற்றுமற் றொரோவழி. ககூச

## உயிரீற்றுமுன் வல்லினம்

### உயிரீற்றின்முன் வல்லினம் புணர்தல்

இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
க ச த ப மிகும்வித வாதன மன்னே.  ௧௬௫

### உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வல்லினம் புணர்தல்

மரப்பெயர் முன்னர் இனமெல் லெழுத்து
வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.  ௧௬௬

## அகரவீற்றுச் சிறப்புவிதி

செய்யிய என்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரின் எச்சமுற் றாறன் உருபே
அஃறிணைப் பன்மை அம்மமுன் இயல்பே.  ௧௬௭

வாழிய என்பதன் ஈற்றின் உயிர்மெய்
ஏகலும் உரித்தஃ தேகினும் இயல்பே.  ௧௬௮

சாவஎன் மொழிஈற் றுயிர்மெய் சாதலும்விதி.  ௧௬௯

பலசில எனும்இவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும் அகரம் ஏக
லகரம் றகரம் ஆகலும் பிறவரின்
அகரம் விகற்பம் ஆகலும் உளபிற.  ௧௭0

## ஆகாரவீற்றுச் சிறப்புவிதி

அவ்வழி ஆமா மியாமுற்று முன்மிகா. கஎக

குறியதன் கீழ்ஆக் குறுகலும் அதனோ
டுகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின். கஎஉ

## இகர ஈற்றுச் சிறப்புவிதி

அன்றி இன்றிஎன் வினைஎஞ் சிகரம்
தொடர்பினுள் உகரம் ஆய்வரின் இயல்பே. கஎங

உரிவரின் நாழியின் ஈற்றுயிர் மெய்கெட
மருவும் டகரம் உரியின் வழியே
யகரவுயிர் மெய்யாம் ஏற்பன வரினே. கஎச

சுவைப்புளி முன்இன மென்மையும் தோன்றும்.

## இகர ஐகார ஈற்றுச் சிறப்புவிதி

அல்வழி இஐம் முன்னர் ஆயின்
இயல்பும் மிகலும் விகற்பமும் ஆகும். கஎரு

## ஈகார ஈற்றுச் சிறப்புவிதி

ஆமுன் பகரவீ அனைத்தும்வரக் குறுகும்
மேலன அல்வழி இயல்பா கும்மே. கஎஎ

பவ்வீ நீமீ முன்னர் அல்வழி
இயல்பாம் வலிமெலி மிகலுமாம் மீக்கே. ௧௭௮

## முற்றுகர ஈற்றுச் சிறப்புவிதி

மூன்றா றுருபெண் வினைத்தொகை சுட்டீ
றாகும் உகரம் முன்னர் இயல்பாம். ௧௭௯

அதுமுன் வருமன் றான்றாம் தூக்கின். ௧௮0

## குற்றுகர ஈற்றுச் சிறப்புவிதி

வன்தொடர் அல்லன முன்மிகா அல்வழி. ௧௮௧

இடைத்தொடர் ஆய்தத் தொடரொற் றிடையின்
மிகாநெடில் உயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே. ௧௮௩

மென்தொடர் மொழியுள் சிலவேற் றுமையில்
தம்மின வன்றொடர் ஆகா மன்னே. ௧௮௪

ஐஈற் றுடைக்குற் றுகரமும் உளவே. ௧௮௫

திசையொடு திசையும் பிறவும் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலும் ஆம்பிற. ௧௮௬

தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடும் காய்வரின். கஅஎ

எண்நிறை அளவும் பிறவும் எய்தின்
ஒன்று முதலெட் டீறும் எண்ணுள்
முதலீ ரெண்முதல் நீளும் மூன்றா
றேழ்குறு கும்மா றேழல் லவற்றின்
ஈற்றுயிர் மெய்யும் ஏழன் உயிரும்
ஏகும் ஏற்புழி என்மனார் புலவர். கஅஅ

ஒன்றன் புள்ளி ரகரம் ஆக
இரண்டன் ஒற்றுயிர் ஏகவுவ் வருமே. கஅகூ

மூன்றனுறுப் பழிவும் வந்ததும் ஆகும். ககூ0

நான்கன் மெய்யே லறவா கும்மே. ககூக

ஐந்தனொற் றடைவதும் இனமுங் கேடும். ககூஉ

எட்டன் உடம்புணவ் வாகும் என்ப. ககூங

ஒன்பா னொடுபத்து நூறும் ஒன்றின்
முன்னதின் ஏனைய முரணி ஒவ்வொடு
தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே. ககூச

முதலிரு நான்காம் எண்முனர்ப் பத்தின்
இடையொற் றேகல் ஆய்தம் ஆகல்
என இரு விதியும் ஏற்கும் என்ப. ககூரு

ஒருபஃ தாதிமுன் ஒன்றுமுதல் ஒன்பான்
எண்ணும் அவையூர் பிறவும் எய்தின்
ஆய்தம் அழியவாண் டாகுந் தவ்வே.　　கசுசு

ஒன்றுமுதல் ஈரைந் தாயிரங் கோடி
எண்நிறை அளவும் பிறவரின் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னும் இற்றும்
ஏற்ப தேற்கும் ஒன்பதும் இனைத்தே.　　கசுஎ

இரண்டு முன்வரின் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட ஒற்று னவ்வாகு மென்ப.　　கசுஅ

ஒன்ப தொழித்த எண் ஒன்பதும் இரட்டின்
முன்னதின் முன்னல ஓட உயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகல்நெறி.　　கசுகூ

---

## ஊகார ஈற்றுச் சிறப்புவிதி

பூப்பெயர் முன்இன மென்மையுந் தோன்றும்.　　உ00

---

## ஏகார ஓகார ஈற்றுச் சிறப்புவிதி

இடைச்சொல் ஏஓ முன்வரின் இயல்பே.　　உ0க

---

### ஐகார ஈற்றுச் சிறப்புவிதி

வேற்றுமை யாயின் ஐகான் இறுமொழி
ஈற்றழி வோடும்அம் ஏற்பவும் உளவே. உ0உ

பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோய் அம்மும் திரள்வரின் உறழ்வும்
அட்டுறின் ஐகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை. உ0௩



## ௪. மெய்யீற்றுப்புணரியல்

### மெய்யீற்றின்முன் உயிர்

உடல்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே. உ0௪

தனிக்குறின் முன்ஒற் றுயிர்வரின் இரட்டும். உ0௫

### மெய்யீற்றின்முன் மெய்

தன்ஒழி மெய்ம்முன் யவ்வரின் இகரந்
துன்னும் என்று துணிநரும் உளரே. உ0௬

ஞணநம லவளன ஒற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வல் மெய்வரின்
உவ்வுறும் ஏவல் உறுசில சில்வழி. ௨0௭

நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை. ௨0௮

## ணகர னகர ஈறு

ணனவல் லினம்வரட் டறவும் பிறவரின்
இயல்பும் ஆகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினும் இயல்பா கும்மே. ௨0௯

குறிலணை வில்லா ணனக்கள் வந்து
நகரந் திரிந்துழி நண்ணும் கேடே. ௨௧0

சாதி குழூஉப்பரண் கவண்பெயர் இறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமாம் அல்வழி யும்மே. ௨௧௧

னஃகான் கிளைப்பெயர் இயல்பும் அஃகான்
அடைவும் ஆகும் வேற்றுமைப் பொருட்கே. ௨௧௨

மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே. ௨௧௩

தேன்மொழி மெய்வரின் இயல்பும் மென்மை
மேவின் இறுதி யழிவும் வலிவரின்
ஈறுபோய் வலிமெலி மிகலுமாம் இருவழி. ௨௧௪

மரமல் எகின்மொழி இயல்பும் அகரம்
மருவ வலிமெலி மிகலும் ஆகும். ௨௧௫

குயினூன் வேற்றுமைக் கண்ணும் இயல்பே. ௨௧௬

மின்பின் பன்கன் தொழிற்பெயர் அனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும். ௨௧௭

தன்னென் என்பவற் றீற்றனவ் வன்மையோ
டுறழு நின்னீ றியல்பாம் உறவே. ௨௧௮

## மகர ஈறு

மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவும் ஆகும். ௨௧௯

வேற்றுமை மப்போய் வலிமெலி உறழ்வும்
அல்வழி உயிரிடை வரின்இயல் பும்முள. ௨௨௦

நுந்தம்,
எம்நம் ஈறு மவ்வரு ஞநவே. ௨௨௧

அகமுனர்ச் செவிகை வரின்இடை யனகெடும். ௨௨௨

ஈமும்,
கம்மும் உருமும் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே. ௨௨௩

### யரழ ஈறு

யரழ முன்னர்க் கசதப அல்வழி
இயல்பு மிகலும் ஆகும் வேற்றுமை
மிகலும் இனத்தோ டுறழ்தலும் விதிமேல். ௨௨௪

தமிழ்அவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமேல் அற்றே. ௨௨௫

கீழின்முன் வன்மை விகற்பமும் ஆகும். ௨௨௬

---

### லகர ளகர ஈறு

லளவேற் றுமையிற் றடவும் அல்வழி
அவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவும் இடைவரின் இயல்பும்
ஆகும் இருவழி யானும் என்ப. ௨௨௭

குறில்வழி லளத்தவ் வணையின் ஆய்தம்
ஆகவும் பெறூஉம் அல்வழி யானே. ௨௨௮

குறில்செறி யாலள அல்வழி வந்த
தகரம் திரிந்தபின் கேடும் ஈரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரின்
இயல்பும் திரிபும் ஆவன உளபிற. ௨௨௯

லளவிறு தொழிற்பெயர் ஈரிடத்தும் உவ்வுறு
வலிவரின் அல்வழி இயல்புமா வனஉள. ௨௩0

வல்லே தொழிற்பெயர் அற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம். உநக

நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்
அல்வழி யானும் றகரம் ஆகும். உநஉ

இல்லென் இன்மைச் சொற்கை அடைய
வன்மை விகற்பமும் ஆகா ரத்தொடு
வன்மை யாகலும் இயல்பும் ஆகும். உநந

புள்ளும் வள்ளும் தொழிற்பெயரு மாலும். உநச

வகர ஈறு

சுட்டு வகரமூ வினமுற முறையே
ஆய்தமும் மென்மையும் இயல்பும் ஆகும். உநரு

தெவ்வென் மொழியே தொழிற்பெயர் அற்றே
மவ்வரின் வஃகான் மவ்வும் ஆகும். உநசு

## வருமொழித் தகரநகரத்திரிபு

னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தநக்கள் ஆயுங் காலே. உநஎ

**வேற்றுமைப் பொருட்புணர்ச்சியை**
**உருபுபுணர்ச்சியோடு மாட்டேறிதல்**

உருபின் முடிபவை ஒக்குமப் பொருளினும்.

புணரியல்களுக்குப் புறனடை

இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும்
போலியும் மரூஉவும் பொருந்திய ஆற்றிற்கு
இயையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறியே.    உங்கூ



## ரு. உருபுபுணரியல்

உருபுகள்

**எட்டுருபுகளுஞ் சாருமிடவகையால்**
**இத்தனையாமென்பது**

ஒருவன் ஒருத்தி பலர்ஒன்று பலஎன
வருபெயர் ஐந்தொடு பெயர்முதல் இருநான்கு
உருபும் உறழ்தர நாற்பதாம் உருபே.    உச0

### வேற்றுமையுருபுகள் வருதற்குக் காரணமும் வருமிடமும்

*பெயர்வழித் தம்பொருள் தரவரும் உருபே.* உ௪௧

### ஐம்முதலிய ஆறுருபும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறு

*ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியின்*
*ஒக்குமன் அப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.* உ௪உ

## சாரியை

### சாரியை வருமாறு

*பதமுன் விகுதியும் பதமும் உருபும்*
*புணர்வழி ஒன்றும் பலவும் சாரியை*
*வருதலுந் தவிர்தலும் விகற்பமும் ஆகும்.* உ௪௩

### சாரியைகள் இவையென்பது

*அன் ஆன் இன் அல் அற்றிற் றத்தம்*
*தம்நம் நும்ஏ அஉ ஐகுன*
*இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.* உ௪௪

## உருபுபுணர்ச்சிக்குச் சிறப்புவிதி

எல்லாம் என்ப திழிதிணை ஆயின்
அற்றோ டுருபின் மேலும் உறுமே
அன்றேல் நம்இடை அடைந்தற் றாகும். ௨௪௫

எல்லாரும் எல்லீரும் என்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லும் உருபின் பின்னர் உம்மே. ௨௪௬

தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின் நும் ஆம்பிற
குவ்வின் அவ்வரும் நான்கா றிரட்டல. ௨௪௭

ஆமா கோனவ் வணையவும் பெறுமே. ௨௪௮

ஒன்று முதலெட் டீறும் எண்ணூர்
பத்தின்முன் ஆன்வரிற் பவ்வொற் றொழியமேல்
எல்லா மோடும் ஒன்பதும் இற்றே. ௨௪௯

வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே. ௨௫௦

சுட்டின்முன் ஆய்தம் அன்வரிற் கெடுமே. ௨௫௧

அத்தின் அகரம் அகரமுனை இல்லை. ௨௫௨

## புறனடை

### சாரியைக்குப் புறனடை

இதற்கிது சாரியை எனின்அள வின்மையின்
விகுதியும் பதமும் உருபும் பகுத்திடை
நின்ற எழுத்தும் பதமும் இயற்கையும்
ஒன்ற உணர்த்தல் உரவோர் நெறியே. உருங

### நான்குபுணர்ச்சிக்கும் புறனடை

விகுதி பதஞ்சா ரியைஉரு பனைத்தினும்
உரைத்த விதியினேர்ந் தொப்பன கொளலே. உருச

### வேற்றுமைப்புணர்ச்சிக்குப் புறனடை

இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை இடத்து விரிந்துந் தொக்கும்
விரவுப் பெயரின் விரிந்து நின்றும்
அன்ன பிறவும் ஆகும்ஐ உருபே. உருரு

புள்ளியும் உயிரும் ஆயிறு சொல்முன்
தம்மின் ஆகிய தொழில்மொழி வரினே
வல்லினம் விகற்பமும் இயல்பும் ஆகும். உருசா

### எழுத்ததிகாரத்துக்குப் புறனடை

இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பளவு இன்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே. உருஎ

# உ. சொல்லதிகாரம்

---

## க. பெயரியல்

### கடவுள்வணக்கமும் அதிகாரமும்

முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுதன் அடிதொழு தறைகுவன் சொல்லே. உருஅ

---

### சொல்லின் பொதுவிலக்கணம்

### சொல் இன்னதென்பது

ஒருமொழி தொடர்மொழி பொதுமொழி என்றா
இருதிணை ஐம்பாற் பொருளையுந் தன்னையும்
மூவகை இடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே. உருகூ

### மூவகை மொழி

ஒருமொழி ஒருபொரு ளனவாம் தொடர்மொழி
பலபொரு ளனபொது இருமையும் ஏற்பன. உசூ0

## இருதிணை

மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை. உசுக

## ஐம்பால்

ஆண்பெண் பலர்என முப்பாற் றுயர்திணை. உசுஉ

ஒன்றே பலஎன் றிருபாற் றஃறிணை. உசுங

## திணைபால்களுக்குப் புறனடை

பெண்மைவிட் டாணவா வுவபே டாண்பால்
ஆண்மைவிட் டல்ல தவாவுவ பெண்பால்
இருமையும் அஃறிணை அன்னவும் ஆகும். உசுச

## மூன்றிடத்துஞ் சொல்தன்னையும் பொருளையும் உணர்த்துதல்

படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படுந் திணைபால் அனைத்தும் ஏனை
இடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே. உசுரு

## மூவிடம்

தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே. உசுசா

## வழக்கு இன்னதென்பது

இலக்கணம் உடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகும் மூவகை யியல்பும்

இடக்கர் அடக்கல் மங்கலம் குழூஉக்குறி
எனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.    உகூஎ

### செய்யுள் இன்னதென்பது

பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்
வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்.    உகூஅ

### குறிப்பும் வெளிப்படையும்

ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி
ஆகு பெயர்அன் மொழிவினைக் குறிப்பே
முதல்தொகை குறிப்போ டின்ன பிறவும்
குறிப்பின் தருமொழி அல்லன வெளிப்படை.    உகூகூ

---

## சொற்பாகுபாடு

### சொல் இத்தனை வகைப்படுமென்பது

அதுவே,
இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
என இரண் டாகும் இடையுரி அடுத்து
நான்குமாம் திசைவட சொல்அணு காவழி    உஎ0

## இயற்சொல்

செந்தமிழ் ஆகித் திரியா தியார்க்கும்
தம்பொருள் விளக்குந் தன்மைய இயற்சொல்.

## திரிசொல்

ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
அரிதுணர் பொருளன திரிசொல் ஆகும்.

## திசைச்சொல்

செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற் றிரண்டினில் தமிழொழி நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப.

## வடசொல்

பொதுஎழுத் தானும் சிறப்பெழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.

---

# பெயர்ச்சொல்

## பெயரின் பொது விலக்கணம்

இடுகுறி காரண மரபோ டாக்கம்
தொடர்ந்து தொழில்அல காலந் தோற்றா
வேற்றுமைக் கிடனாய்த் திணைபால் இடத்தொன்
றேற்பவும் பொதுவும் ஆவன பெயரே.

## உயர்திணையாண்பாற்பெயர்

அவற்றுள்,

உஎக கிளையெண் குழூஉமுதல் பல்பொருள் திணைதேம்
ஊர்வா னகம்புற முதல நிலன்யாண்
டிருது மதிநாள் ஆதிக் காலம்
தோள்குழல் மார்புகண் காது முதலுறுப்
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
உஎஉ சாதி குடிசிறப் பாதிப் பல்குணம்
ஓதல் ஈதல் ஆதிப் பல்வினை
இவைஅடை சுட்டு வினாப்பிற மற்றோ
டுற்ற னவ்வீறு நம்பி ஆடூஉ
விடலை கோவேள் குரிசில் தோன்றல்
உஎங இன்னன ஆண்பெயர் ஆகும் என்ப. உஎசு

## உயர்திணைப்பெண்பாற்பெயர்

உஎச கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற ஈற்றவும்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே. உஎஎ

## உயர்திணைப்பலர்பாற்பெயர்

கிளந்த கிளைமுதல் உற்றரவ் வீற்றவும்
கள்ளென் ஈற்றின் ஏற்பவும் பிறவும்
உஎடு பல்லோர் பெயரின் பகுதி ஆகும். உஎஅ

### அஃறிணையொன்றன்பாற்பெயர்

வினைச்சுட் டுடனும் வேறும் ஆம்பொருள்
ஆதி யுறுதுச் சுட்டணை யாய்தம்
ஒன்றெனெண் இன்னன ஒன்றன் பெயரே. உஎ௯

### அஃறிணைப்பலவின்பாற்பெயர்

முன்னர் அவ்வொடு வருவை யவ்வும்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியும்
ஒன்றல் எண்ணும் உள்ள இல்ல
பல்ல சில்ல உளஇல பலசில
இன்னவும் பலவின் பெயர் ஆகும்மே. உஅ0

### அஃறிணையிருபாற்பொதுப்பெயர்

பால்பகா அஃறிணைப் பெயர்கள்பாற் பொதுமைய.

### இருதிணைப்பொதுப்பெயர்

முதற்பெயர் நான்கும் சினைப்பெயர் நான்கும்
சினைமுதற் பெயர்ஒரு நான்குமுறை யிரண்டும்
தன்மை நான்கும் முன்னிலை யைந்தும்
எல்லாந் தாம்தான் இன்னன பொதுப்பெயர். உஅஉ

### முதற்பெயர்முதலிய நான்கையும் வகுத்தல்

ஆண்மை பெண்மை ஒருமை பன்மையின்
ஆம்அந் நான்மைகள் ஆண்பெண் முறைப்பெயர். உஅ௩

## திணைப்பொதுப்பெயர் பாற்பொதுவாதல்

அவற்றுள்,
ஒன்றே இருதிணைத் தன்பால் ஏற்கும்.　　　　உ அச

## தன்மை முன்னிலை படர்க்கைப்பெயர்கள்

தன்மை யான்நான் யாம்நாம் முன்னிலை
எல்லீர் நீயிர் நீவிர் நீர்நீ
அல்லன படர்க்கை எல்லாம் எனல்பொது.　　　　உ அரு

## தொழிற்பெயருக்கும் வினையாலணையும் பெயருக்கும் இடம் வகுத்தல்

வினையின் பெயரே படர்க்கை வினையால்
அணையும் பெயரே யாண்டும் ஆகும்.　　　　உ அசு

## பன்னிரண்டு பொதுப்பெயர்

தான்யான் நான்நீ ஒருமை பன்மைதாம்
யாநாம் எலாம் எலீர் நீயிர்நீர் நீவிர்.　　　　உ அஎ

## எண்ணால் வரும் உயர்திணைப்பெயருக்குப் புறனடை

ஒருவன் ஒருத்திப் பெயர்மேல் எண்ணில.　　　　உ அஅ

ஒருவர் என்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற் றென்ப.　　　　உ அகூ

## ஆகுபெயர்

*பொருள்முத லாறோ டளவைசொல் தானி*
*கருவி காரியம் கருத்தன் ஆதியுள்*
*ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்*
*தொன்முறை உரைப்பன ஆகு பெயரே.* உசுO

## வேற்றுமை

### வேற்றுமை இனைய என்பதும் இத்துணைய என்பதும்

*ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்ப்பொருள்*
*வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை.* உசுக

### வேற்றுமையின் பெயரும் முறையும்

*பெயரே ஐஆல் குஇன் அதுகண்*
*விளியென் றாகும் அவற்றின் பெயர்முறை.* உசுஉ

### எழுவாயுருபு மற்றையுருபுகளையேற்றல்

*ஆறன் உருபும் ஏற்கும்அவ் வுருபே.* உசுங

### ஐ முதலிய உருபேலாப் பெயர்கள்

*நீயிர் நீவிர்நான் எழுவாய் அலபெறா.* உசுச

## பெயர் வேற்றுமை

*அவற்றுள்,*
*எழுவாய் உருபு திரிபில் பெயரே*
*வினைபெயர் விளக்கொளல் அதன்பய னிலையே.* ௨௯௫

## இரண்டாம் வேற்றுமை

*இரண்டா வதனுரு பையே அதன்பொருள்*
*ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்*
*ஒத்தல் உடைமை ஆதி ஆகும்.* ௨௯௬

## மூன்றம் வேற்றுமை

*மூன்ற வதனுரு பாலான் ஓடொடு*
*கருவி கருத்தா உடனிகழ் வதன்பொருள்.* ௨௯௭

## நான்காம் வேற்றுமை

*நான்கா வதற்குரு பாகுங் குவ்வே*
*கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்*
*பொருட்டுமுறை ஆதியின் இதற்கிதெனல் பொருளே.*

## ஐந்தாம் வேற்றுமை

*ஐந்தா வதனுரு பில்லு மின்னும்*
*நீங்கலொப் பெல்லை ஏதுப் பொருளே.* ௨௯௯

## ஆறம் வேற்றுமை

*ஆறன் ஒருமைக் கதுவும் ஆதுவும்*
*பன்மைக் கவ்வும் உருபாம் பண்புறுப்பு*

ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே. ௩00

## ஏழாம் வேற்றுமை

ஏழன் உருபுகண் ஆதி ஆகும்
பொருள்முதல் ஆறும் ஓர்இரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொருள் என்ப. ௩0௧

## கண்முதலிய உருபுகள்

கண்கால் கடைஇடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலம்இடம் மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதேம் உழைவழி உழிஉளி
உள்அகம் புறம்இல் இடப்பொருள் உருபே. ௩0௨

## எட்டாம் வேற்றுமை

எட்டன் உருபே எய்துபெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பயல்
திரிபும் ஆம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தான்அழைப் பதுவே. ௩0௩

## விளிக்கப்படு பெயர்கள்

இஉ ஊஓ டையோ னளரல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு

ணஃகான் ஆவீ றுகும் பொதுப்பெயர்
ஞநவொழி அனைத்தீற் றஃறிணை விளிப்பன.　　௩௦௪

## பொதுவாகிய விளியுருபு

இம்முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும்
இகர நீட்சியும் உருபா மன்னே.　　௩௦௫

## விளியுருபுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

ஐயிறு பொதுப்பெயர்க் காயும் ஆவும்
உருபாம் அல்லவற் றுயு மாகும்.　　௩௦௬

ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவயல் நீட்சி அதனோ
டீறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயல்திரிந் தேயுறல் ஈறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்.　　௩௦௭

ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்
நீட்சி இறுதி யவ்வொற் றாதல்
அயலி லகரமே யாதலும் விளித்தனு.　　௩௦௮

ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழல் ஈற்றயல்
அகரம் இஈ ஆதல் ஆண்டையா
ஈயாத லதனோ டேயுற லீற்றோ
டிக்கயல் யாக்கெட் டதனயல் நீடல்
ஈற்றின் ஈருறல் இவையும்ஈண் டுருபே.　　௩௦௯

லகாரவீற் றுயர்பெயர்க் களபயல் நீட்சியும்
யகார வீற்றிற் களபுமாம் உருபே. ௩௧௦

னவ்வீற் றுயர்திணை அல்லிரு பெயர்க்கண்
இறுதி அழிவத ளேடயல் நீட்சி. ௩௧௧

ளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றயல் நீட்சியும் உருபா கும்மே. ௩௧௨

## விளியுருபுகளுக்குப் புறனடை

அண்மையின் இயல்பும் ஈறழிவும் சேய்மையின்
அளபும் புலம்பின் ஓவு மாகும். ௩௧௩

## விளியுருபேலாப் பெயர்கள்

நுவ்வொடு வினைச்சுட் டுற்ற னளர
வைதுத் தாந்தான் இன்னன விளியா. ௩௧௪

## முதல்சினைத் தொடர்பின்கண் அவ்விரண்டினும் இரண்டனுருபு வாராதெனல்

முதலை ஐயுறிற் சினையைக் கண்ணுறும்
அதுமுதற் காயிற் சினைக்கை யாகும். ௩௧௫

## ஐயுருபு முதல் சினையிரண்டினும் வாராமைக்குக் காரணமும் மேலைச் சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலும்

முதல்இவை சினைஇவை எனவே றுளஇல
உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும். ௩௧௬

### உருபு மயக்கம்

யாத னுருபின் கூறிற் ருயினும்
பொருள்செல் மருங்கின் வேற்றுமை சாரும். ௱௭

### சில வேற்றுமையுருபு செய்யுளிடத்துத் திரிந்து வருதல்

ஐயான்குச் செய்யுட் கவ்வும் ஆகும்
ஆகா அஃறிணைக் கானல் லாதன. ௱௮

### எட்டுவேற்றுமைக்தும் முடிக்குஞ்சொல்

எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்கேழ் இருமையும்
புல்லும் பெரும்பாலும் என்மனர் புலவர். ௱௯



## உ. வினையியல்

### வினைச்சொல்

### தெரிநிலைவினைச்சொல்லின் பொதுவிலக்கணம்

செய்பவன் கருவி நிலம்செயல் காலம்
செய்பொருள் ஆறும் தருவது வினையே. ௱௨௰

### குறிப்புவினைச்சொல்லின் பொதுவிலக்கணம்

பொருள்முதல் ஆறினும் தோற்றிமுன் ஆறனுள்
வினைமுதல் மாத்திரை விளக்கல்வினைக் குறிப்பே.

### வினைச்சொற்களின் பகுப்பு

அவைதாம்,
முற்றும் பெயர்வினை எச்சமும் ஆகி
ஒன்றற் குரியவும் பொதுவும் ஆகும். ௩௨௨

---

## வினைமுற்று

### வினைமுற்று இனையவென்பது

பொதுஇயல் பாறையுந் தோற்றிப் பொருட்பெயர்
முதலறு பெயரல தேற்பில முற்றே. ௩௨௩

### தெரிநிலைவினைமுற்றின் பாகுபாடு

ஒருவன்முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்
ஒருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினும்
மூக்கா லத்தினும் மூரண முறையே
மூவைந் திருமூன் றாறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூவொன் பானாம். ௩௨௪

### ஆண்பாற்படர்க்கை வினைமுற்று

அன்ஆன் இறுமொழி ஆண்பாற் படர்க்கை. ௩௨௫

### பெண்பாற்படர்க்கை வினைமுற்று

அள் ஆள் இறுமொழி பெண்பாற் படர்க்கை.　　கூ௨௬

### பலர்பாற்படர்க்கை வினைமுற்று

அர் ஆர் பவ்வூர் அகரமார் ஈற்ற
பல்லோர் படர்க்கைமார் வினையொடு முடிமே.　　கூ௨எ

### ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்று

துறுடுக் குற்றிய லுகர ஈற்ற
ஒன்றன் படர்க்கைடுக் குறிப்பின் ஆகும்.　　கூ௨அ

### பலவின்பாற்படர்க்கை வினைமுற்று

அஆ ஈற்ற பலவின் படர்க்கை
ஆவே எதிர்மறைக் கண்ண தாகும்.　　கூ௨கூ

### இருதிணைப் பொதுவினை

தன்மை முன்னிலை வியங்கோள் வேறிலை
உண்டீ ரெச்சம் இருதிணைப் பொதுவினை.　　கூகூ0

### தன்மையொருமை வினைமுற்று

குடுதுறு என்னுங் குன்றிய லுகரமோ
டல்லன் என்னேன் ஆகும் ஈற்ற
இருதிணை முக்கூற் றொருமைத் தன்மை.　　கூகூக

### தன்மைப்பன்மை வினைமுற்று

அம்ஆம் என்பன முன்னிலை யாரையும்
எம்ஏம் ஓம்இவை படர்க்கை யாரையும்
உம்ஊர் கடதற இருபா லாரையும்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை. ௩௩௨

### வினையுடனு முடியுந் தன்மைவினைமுற்றுக்கள்

செய்கென் ஒருமையும் செய்கும்என் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே. ௩௩௩

### உளப்பாட்டுப் பன்மை முன்னிலை

முன்னிலை கூடிய படர்க்கையு முன்னிலை. ௩௩௪

### முன்னிலை யொருமை வினைமுற்று

ஐஆய் இகர ஈற்ற மூன்றும்
ஏவலின் வருஉம் எல்லா ஈற்றவும்
முப்பால் ஒருமை முன்னிலை மொழியே. ௩௩௫

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே ௩௩௬

### முன்னிலைப் பன்மைவினைமுற்று

இர்ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப்
பன்மை முன்னிலை மின்னவற் றேவல். ௩௩௭

### வியங்கோள் வினைமுற்று

கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப.　　௩௩அ

### வேறு, இல்லை, உண்டு

வேறில்லை உண்டைம் பால்மூ விடத்தன.　　௩௩௯

## பெயரெச்சம்

### பெயரெச்சம் இனையவென்பது

செய்த செய்கின்ற செய்யும்என் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.　　௩௪0

### செய்யுமென் எச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

செய்யும்என் எச்சஈற் றுயிர்மெய் சேறலுஞ்
செய்யுளுள் உம்உந் தாகலும் முற்றேல்
உயிரும் உயிர்மெய்யும் ஏகலும் உளவே.　　௩௪௧

## வினையெச்சம்

### வினையெச்சம் இனையவென்பது

தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே. ௩௪௨

### வினையெச்ச வாய்பாடுகள்

செய்து செய்பு செய்யாச் செய்யூச்
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும் ௩௪௩

### வினையெச்சங்களுக்கு முடிபு வேறுபாடு

அவற்றுள்,
முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும்
வினைமுதல் கொள்ளும் பிறவும்ஏற் கும்பிற. ௩௪௪

### வினைமுதல் கொள்ளுமென்றவற்றிற்கு ஒரு புறனடை

சினைவினை சினையொடு முதலொடும் செறியும். ௩௪௫

சொல்திரி யினும்பொருள் திரியா வினைக்குறை. ௩௪௬

## ஒழிபு

### வினைக்குறிப்பு

ஆக்க வினைக்குறிப் பாக்கம்இன் றியலா.　　௩௪எ

### செய்யுமென் முற்று

பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லா தாகுஞ் செய்யும்என் முற்றே.　　௩௪அ

### பாற்பொதுவினை

யார்என் வினாவினைக் குறிப்புயர் முப்பால்.　　௩௪௯

எவன்என் வினாவினைக் குறிப்பிழி இருபால்.　　௩௫0

### இருவகைமுற்றிற்கும் ஒரு புறனடை

வினைமுற் றேவினை எச்சம் ஆகலும்
குறிப்புமுற் றீரெச்ச மாகலும் உளவே.　　௩௫க



# ௩. பொதுவியல்

## இது முன்வந்த பெயருக்கும் வினைக்கும் பின்வரும் இடைக்கும் உரிக்கும் பொதுவிலக்கணங்களைக் கூறுவது

### பாற்பொதுமை நீங்குநெறி

*இருதிணை ஆண்பெணுள் ஒன்றனை ஒழிக்கும்*
*பெயரும் வினையும் குறிப்பி னானே.* ௩௫௨

### பெயர் வினையிடத்து ஈற்றயல் திரிதல்

*பெயர்வினை இடத்து னளரய ஈற்றயல்*
*ஆஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே.* ௩௫௩

### உருபும் வினையீறும் எதிர்மறையினுந் திரியாமை

*உருபும் வினையும் எதிர்மறுத் துரைப்பினுந்*
*திரியா தத்தம்ஈற் றுருபின் என்ப.* ௩௫௪

### உருபும் வினையும் அடுக்கி முடிதல்

*உருபுபல அடுக்கினும் வினைவே றடுக்கினும்*
*ஒருதம் எச்சம் ஈறுற முடியும்.* ௩௫௫

### இடைப் பிறவரல்

*உருபு முற்றீ றெச்சங் கொள்ளும்*
*பெயர்வினை இடைப்பிற வரலுமாம் ஏற்பன.* ௩௫௬

### முடிக்குஞ் சொன்னிற்குமிடம்

எச்சப் பெயர்வினை எய்தும் ஈற்றினும். ௩௫எ

### ஒருமொழி வேறென்றை யமைத்தல்

ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே. ௩௫அ

### திணைபாலிடப் பொதுமை நீங்குநெறி

பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கும்
மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை தாமே. ௩௫௯

### எச்சங்களின் முடிபு

பெயர்வினை உம்மைசொற் பிரிப்பென ஒழியிசை
எதிர்மறை இசையெனுஞ் சொல்லொழி பொன்பதுங்
குறிப்புந் தத்தம் எச்சங் கொள்ளும் ௩௬0

## தொகைநிலைத் தொடர்மொழி

### தொகைநிலைத் தொடர்மொழி இனையதென்பது

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபிடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்தொரு
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்ச்சொல்.

## தொகைநிலைத் தொடர்ப் பாதபாடு

*வேற்றுமை வினைபண் புவமை உம்மை*
*அன்மொழி எனஅத் தொகை ஆறாகும்.* ௩௬௨

## வேற்றுமைத்தொகை

*இரண்டு முதலாம் இடையா றுருபும்*
*வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.*

## வினைத்தொகை

*காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.* ௩௬௪

## பண்புத்தொகை

*பண்பை விளக்கு மொழிதொக் கனவும்*
*ஒருபொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை.*

## உவமைத்தொகை

*உவம உருபில துவமத் தொகையே.* ௩௬௬

## உவமவுருபுகள்

*போலப் புரைய ஒப்ப உறழ*
*மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப*
*நேர நிகர அன்ன இன்ன*
*என்பவும் பிறவும் உவமத் துருபே.* ௩௬௭

### உம்மைத்தொகை

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனுநான் களவையுள் உம்இல தத்தொகை.　௩௬௮

### அன்மொழித்தொகை

ஐந்தொகை மொழிமேற் பிறதொகல் அன்மொழி.

### தொகைநிலைத் தொடர்மொழிகளிற் பொருள்சிறக்கும் இடங்கள்

முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்தும் சிறக்கும் தொகைப்பொருள்.

### இடத்தொகை பெயர்த்தொகைகட்கு வேறுபாடறிகுறி

வல்லொற்று வரினே இடத்தொகை ஆகும்
மெல்லொற்று வரினே பெயர்த்தொகை ஆகும்.

### உம்மைத்தொகைக்குப் புறனடை

உயர்திணை உம்மைத் தொகைபலர் ஈறே.　௩௭௨

### தொகைநிலைத் தொடர்மொழிகள் பலபொருள் படுதல்

தொக்குழி மயங்குந இரண்டு முதலேழ்
எல்லைப் பொருளில் மயங்குமென்ப.　௩௭௩

## தொகாநிலைத் தொடர்மொழி

*முற்றீ ரெச்சம் எழுவாய் விளிப்பொருள்*
*ஆறுரு பிடையுரி அடுக்கிவை தொகாநிலை.* ௩௱௭௪

---

## வழாநிலை வழுவமைதி

### வழு விகற்பங்கள்

*திணையே பால்இடம் பொழுது வினாஇறை*
*மரபாம் ஏழும் மயங்கின் ஆம் வழுவே.* ௩௱௭௫

### திணையோடு வினாவிடையும் பாலோடு வினாவிடையும் வழுவாமற் காத்தல்

*ஐயம் திணைபால் அவ்வப் பொதுவினும்*
*மெய்தெரி பொருள்மேல் அன்மையும் விளம்புப.*

### திணைவழுவமைதி

*உயர்திணை தொடர்ந்த பொருள்முதல் ஆறும்*
*அதனொடு சார்த்தின் அத்திணை முடிபின.* ௩௱௭௭

### திணைபால்மரபு வழுவமைதி

*திணைபால் பொருள்பல விரவின சிறப்பினும்*
*மிகவினும் இழிபினும் ஒருமுடி பினவே.* ௩௱௭௮

### திணைபால் வழுவமைதி

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே. ந-எக

### பாலிட வழுவமைதி

ஒருமையின் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறஇடந் தழுவலும் உளவே. ந-அ௦

### இடம் வழுவாமற் காத்தல்

தரல்வரல் கொடைசெலல் சாரும் படர்க்கை
எழுவாய் இரண்டும் எஞ்சிய ஏற்கும். ந-அக

### காலம்

இறப்பெதிர்வு நிகழ்வெனக் காலம் மூன்றே. ந-அ௨

### கால வழுவமைதி

முக்கா லத்தினும் ஒத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே. ந-அங

விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉமுக் காலமும் ஏற்புழி. ந-அச

### அறுவகை வினா

அறிவறி யாமை ஐயுறல் கொளல்கொடை
ஏவல் தரும்வினா ஆறும் இழுக்கார். ந-அரு

### எண்வகை விடை

சுட்டு மறைநேர் ஏவல் வினாதல்
உற்ற துரைத்தல் உறுவது கூறல்
இனமொழி எனும்எண் இறையுள் இறுதி
நிலவிய ஐந்தும்அப் பொருண்மையின் நேர்ப. ருஅசு

### வினாவிடைகளின் முதல் சினை வழுவாமை

வினாவினும் செப்பினும் விரவா சினைமுதல். ருஅஎ

### மரபு

எப்பொருள் எச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்
செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே. ருஅஅ

### மரபு வழாநிலை

வேறுவினைப் பல்பொருள் தழுவிய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணும்ஓர் பொதுவினை வேண்டும்.

வினைசார் பினமிடம் மேவி விளங்காப்
பலபொருள் ஒருசொற் பணிப்பர் சிறப்பெடுத்தே.

எழுத்தியல் திரியாப் பொருள்திரி புணர்மொழி
இசைத்திரி பால்தெளி வெய்தும் என்ப. ருகூக

### மரபுவழாநிலையும் வழுவமைதியும்

ஒருபொருள் மேற்பல பெயர்வரின் இறுதி
ஒருவினை கொடுப்ப தனியும் ஒரோவழி. ருகூஉ

திணைநிலம் சாதி குடியே உடைமை
குணம்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ
டியற்பெயர் ஏற்றிடின் பின்வரல் சிறப்பே. ௩௯௩

படர்க்கை முப்பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை எனின்பெயர்க் கெங்கும்
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி. ௩௯௪

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக் கொருசொல்
இரண்டு மூன்றுநான் கெல்லைமுறை அடுக்கும்.

## மரபு வழாநிலை

இரட்டைக் கிளவி இரட்டிற்பிரிந் திசையா. ௩௯௬

ஒருபொருட் பல்பெயர் பிரிவில வரையார். ௩௯௭

## மரபு வழுவமைதி

ஒருபொருட் பன்மொழி சிறப்பி னின்வழா. ௩௯௮

## மரபு வழுவாமற் காத்தல்

இனைத்தென் றறிபொருள் உலகி னிலாப்பொருள்
வினைப்படுத் துரைப்பின் உம்மை வேண்டும். ௩௯௯

## மரபு வழுவமைதி

செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கினுள் உரித்தே.

### மரபுவழுவாமற் காத்தலும் மரபுவழுவமைதியும்

பொருள்முதல் ஆறாம் அடைசேர் மொழியினம்
உள்ளவும் இல்லவும் ஆம்இரு வழக்கினும். ௪0௧

### மரபு வழுவாமற் காத்தல்

அடைமொழி இனம்அல் லதுந்தரும் ஆண்டுறின். ௪0௨

### மரபு வழுவாமற்காத்தலும் மரபு வழுவமைதியும்

அடைசினை முதல்முறை அடைதலும் ஈரடை
முதலோ டாதலும் வழக்கியல் ஈரடை
சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே. ௪0௩

### மரபு வழுவமைதி

இயற்கைப் பொருளை இற்றெனக் கிளத்தல். ௪0௪

### மரபு வழுவாமற் காத்தலும் வழுவமைதியும்

காரண முதலா ஆக்கம் பெற்றும்
காரணம் இன்றி ஆக்கம் பெற்றும்
ஆக்கம் இன்றிக் காரணம் அடுத்தும்
இருமையும் இன்றியும் இயலுஞ் செயும்பொருள். ௪0௫

### மரபு வழுவாமற் காத்தல்

தம்பால் இல்ல தில்லெனின் இனன்ஆய்
உள்ளது கூறி மாற்றியும் உள்ளது
சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே. ௪0௬

ஈதா கொடுஎனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை.　　சா0எ

### மரபு வழுவமைதி

முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே.　　சா0அ

கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே.　　சா0கூ

உருவக உவமையில் திணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே.　　சாக0

## பொருள் கோள்

### பொருள்கோளின் பெயருந் தொகையும்

யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே.　　சாகக

### யாற்றுநீர்ப் பொருள்கோள்

மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொருள்
அற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.　　சாக2

## மொழிமாற்றுப் பொருள்கோள்

ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றி ஓர் அடியுள் வழங்கல்மொழி மாற்றே. ௪௧௩

## நிரனிறைப் பொருள்கோள்

பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரனிறை நெறியே. ௪௧௪

## பூட்டுவிற் பொருள்கோள்

எழுவாய் இறுதி நிலைமொழி தம்முள்
பொருள்நோக் குடையது பூட்டுவில் ஆகும். ௪௧௫

## தாப்பிசைப் பொருள்கோள்

இடைநிலை மொழியே ஏனை ஈரிடத்தும்
நடந்து பொருளை நண்ணுதல் தாப்பிசை. ௪௧௬

## அளைமறிபாப்புப் பொருள்கோள்

செய்யுள் இறுதி மொழியிடை முதலினும்
எய்திய பொருள்கோள் அளைமறி பாப்பே. ௪௧௭

## கொண்டுகூட்டுப் பொருள்கோள்

யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே. ௪௧௮

### அடிமறிமாற்றுப் பொருள்கோள்

ஏற்புழி எடுத்துடன் கூட்டுறும் அடியவும்
யாப்பீ றிடைமுதல் ஆக்கினும் பொருள்இசை
மாட்சியு மாறு அடியவும் அடிமறி. ௪கக



## ௪. இடையியல்

### இடைச்சொல்லின் பொதுவிலக்கணம்

வேற்றுமை வினைசா ரியையொப் புருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்பெனெண் பகுதியில் தனித்தியல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஞோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.

### இடைச்சொற் பொருள்கள்

தெரிநிலை தேற்றம் ஐயமுற் றெண்சிறப்
பெதிர்மறை எச்சம் வினவிழை வொழியிசை
பிரிப்புக் கழிவாக்கம் இன்னன இடைப்பொருள்.

### ஏகார இடைச்சொல்

*பிரிநிலை வினாஎண் ணீற்றசை தேற்றம்*
*இசைநிறை எனஆ றேகா ரம்மே.* ௪௨௨

### ஓகார இடைச்சொல்

*ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை*
*கழிவசை நிலைபிரிப் பெனஎட் டோவே.* ௪௨௩

### என, என்று இடைச்சொற்கள்

*வினைபெயர் குறிப்பிசை எண்பண் பாறினும்*
*எனவெனும் மொழிவரும் என்றும் அற்றே.* ௪௨௪

### உம்மை இடைச்சொல்

*எதிர்மறை சிறப்பையம் எச்சமுற் றளவை*
*தெரிநிலை ஆக்கமோ டும்மை எட்டே.* ௪௨௫

### முற்றும்மைக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

*முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்.* ௪௨௬

### எச்சவும்மைக்காவதோர் விதி

*செவ்வெண் ணீற்றதாம் எச்ச உம்மை.* ௪௨௭

### சில எண்ணிடைச் சொற்களுக்காவதோர் இலக்கணம்

பெயர்ச்செவ் வெண்ணே என்று எனாஎண்
நான்குந் தொகைபெறும் உம்மையென் றெனவோ
டிந்நான் கெண்ணும்அஃ தின்றியும் இயலும். ௨௨அ

### சில எண்ணிடைச் சொற்களுக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி

என்றும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்தெண் பொருள்தொறும் நேரும். ௨௨௯

### பெயரோடு வரும் இடைச்சொற்கள் வினையோடும் வருமாறு

வினையொடு வரினும்எண் இனைய ஏற்பன. ௨௩0

### தில்லிடைச்சொல்

விழைவே காலம் ஒழியிசை தில்லே. ௨௩௧

### மன்னிடைச்சொல்

மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கங்
கழிவு மிகுதி நிலைபே றாகும். ௨௩௨

### மற்றென்னும் இடைச்சொல்

வினைமாற் றசைநிலை பிறிதெனும் மற்றே. ௨௩௩

### முன்னதற்கோர் புறனடை

மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

### கொல்லிடைச்சொல்

கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.

### ஒடு, தெய்ய

ஒடுவும் தெய்யவும் இசைநிறை மொழியே.

### அந்தில், ஆங்கு

அந்தில்ஆங் கசைநிலை இடப்பொரு ளவ்வே.

### அம்ம இடைச்சொல்

அம்ம உரையசை கேண்மினென் றாகும்.

### வியங்கோளசை

மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

### முன்னிலையசைச்சொல்

மியாஇக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளவீ யாழமுன் னிலைஅசை.

### எல்லாவிடத்தும் வரும் அசைச்சொல்

யாகா பிறபிறக் கரோபோ மாதிகும்
சின்குரை ஓரும் போலும் இருந்திட்
டன்றாந் தாந்தான் கின்றுநின் றசைமொழி.

# ரு. உரியியல்

௩௫௪

## உரிச்சொல்லின் பொதுவிலக்கணம்

பல்வகைப் பண்பும் பகர்பெயர் ஆகி
௩௫௫　ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை
ஒருவா செய்யுட் குரியன உரிச்சொல்.　௩௩௨

௩௫௬

## பண்பிது வென்பது

உயிருயிர் அல்லதாம் பொருட்குணம் பண்பே.　௩௩௩

௩௫௭

## உயிர்ப்பொருள்

மெய்ந்நா மூக்கு நாட்டம் செவிகளின்
ஒன்றுமுத லாக்கீழ்க் கொண்டுமேல் உணர்தலின்
௩௫௮　ஓர்அறி வாதியா உயிர் ஐந்தாகும்.　௩௩௪

## ஓரறிவுயிர்

௩௫௯　புல்மரம் முதலஉற் றறியும்ஓர் அறிவுயிர்.　௩௩௫

## ஈரறிவுயிர்

முரள்நந் தாதிநா வறிவொடீ ரறிவுயிர்.　௩௩௬

௩௬௦

## மூவறிவுயிர்

சிதலெறும் பாதிமூக் கறிவின்மூ வறிவுயிர்.　௩௩௭

## நாலறிவுயிர்

௩௬௧　தும்பிவண் டாதிகண் அறிவின்நா லறிவுயிர்.　௩௩௮

### ஐயறிவுயிர்

வானவர் மக்கள் நரகர் விலங்குபுள்
ஆதிசெவி அறிவோ டையறி வுயிரே. ௪௪௯

### உயிரல்லாத பொருள்

உணர்விய லாம்உயிர் ஒன்றும் ஒழித்த
உடல்முத லனைத்தும் உயிரல் பொருளே. ௪௫0

### முன்னதற்கு ஒரு புறனடை

ஒற்றுமை நயத்தின் ஒன்றெனத் தோன்றினும்
வேற்றுமை நயத்தின் வேறே உடல்உயிர். ௪௫௧

### உயிர்ப்பொருள்களின் குணப்பண்பு

அறிவருள் ஆசை அச்சம் மானம்
நிறைபொறை ஓர்ப்புக் கடைப்பிடி மையல்
நினைவு வெறுப்புவப் பிரக்கநாண் வெகுளி
துணிவழுக் காறன் பெளிமை எய்த்தல்
துன்பம் இன்பம் இளமை மூப்பிகல்
வென்றி பொச்சாப் பூக்கம் மறமதம்
மறவி இனைய உடல்கொள் உயிர்க்குணம். ௪௫௨

### உயிர்ப்பொருள்களின் தொழிற்பண்பு

துய்த்தல் துஞ்சல் தொழுதல் அணிதல்
உய்த்தல் ஆதி உடலுயிர்த் தொழிற்குணம். ௪௫௩

## உயிரல் பொருள்களின் குணப்பண்பு

பல்வகை வடிவிரு நாற்றம்ஐ வண்ணம்
அறுசுவை ஊறெட் டுயிரல் பொருட்குணம். ௪௫௪

## இருபொருள்களுக்கும் பொதுவாகிய தொழிற்பண்பு

தோன்றல் மறைதல் வளர்தல் சுருங்கல்
நீங்கல் அடைதல் நடுங்கல் இசைத்தல்
ஈதல் இன்னன இருபொருள் தொழிற்குணம். ௪௫௫

## ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

சால உறுதவ நனிகூர் கழிமிகல். ௪௫௬

## பலகுணந் தழுவிய உரிச்சொல்

கடிஎன் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் ஆகும். ௪௫௭

## ஒருகுணந் தழுவிய உரிச்சொல்

மாற்றம் நுவற்சிசெப் புரைகரை நொடிஇசை
கூற்றுப் புகறன் மொழிகிளவி விளம்பறை
பாட்டுப் பகர்ச்சி இயம்பல் சொல்லே. ௪௫௮

முழக்கிரட் டொலிகலி இசைதுவை பிளிறிரை
இரக்கழுங் கியம்பல் இமிழ்குளி றதிர்குரை
கனைசிலை சும்மை கௌவை கம்பலை
அரவம் ஆர்ப்போ டின்னன ஓசை. ௪௫௯

## இவ்வியலுக்குப் புறனடை

இன்ன தின்னுழி இன்னணம் இயலும்
என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்
சொல்லாம் பரத்தலிற் பிங்கல முதலா
நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே. ௪௬0

## இவ்வதிகாரத்திற்குப் புறனடை

சொற்றொறும் இற்றிதன் பெற்றியென் றனைத்தும்
முற்ற மொழிகுறின் முடிவில ஆதலின்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவும்
தெற்றென உணர்தல் தெள்ளியோர் திறனே. ௪௬௧

## இந்நூலிற்குப் புறனடை

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே. ௪௬௨

நன்னூல்

முற்றும்.

# யாப்பருங்கலம்



அமிர்தசாகரனார்

:: இயற்றியது ::

# முன்னுரை

செந்தமிழ்ப் பாக்கள் பாவினங்களின் இயல்புகள் முதலியவற்றைத் தெளிவுபட விளக்குவது பழந்தமிழ் நூலாகிய ஒல்காப் புகழுடைத் தொல்காப்பிய மொன்றே யாம். இதன்பின் வடமொழி யிலக்கணத்திலிருந்து சில புதிய யாப்புக்கள் தென்மொழி யிலக்கணங்களோடு கலப்புறுவனவாயின. இதனாலன்றோ புராணேதிகாசங்கள் முதலிய நூல்களெல்லாம் விருத்தம், கலித்துறை முதலிய யாப்புக்களானாக்கப்பெற்றுள்ளன. ஆகவே பழமையான செந்தமிழ்ப்பா விலக்கணங்களையும் வடமொழியினின்று வந்த புதிய விலக்கணங்களையும் முற்ற எடுத்து முடிய விளக்குவது யாப்பருங்கலமே. இதனினும் இவ்விலக்கணங்களைச் சுருக்கமாகக் கூறுவது யாப்பருங்கலக் காரிகையாம்.

யாப்பருங்கலமென்னும் இந்நூல் தொண்ணூற்றாறு சூத்திரங்களையுடையது. இது சொற்சுருக்கமும் பொருட் பெருக்கமுங் கொண்டு திகழுகின்றதென்பது,

"சொல்லிற் சுருங்கிப் பொருள்பெருகித் தொன்ஞானம்
எல்லாம் விளக்கி இருளகற்றும்-நல்யாப்
பருங்கலம் வல்லவர் தாமன்றே கேள்வி
ஒருங்கறிய வல்லா ருணர்ந்து"

என்ற ஆன்ரேரர் வாக்கால் விளங்கப் பெறுகின்றது. இஃது ஓர் அரிய பெரிய விருத்தியுரை யுடையது.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த இந்நூலாசிரியர் பெயர் இதன் பாயிரத்தா னினிது விளங்கவில்லை. எனினும், யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியர் குணசாகரர் உரைத்த உரையானும், யாப்பருங்கலத்திற்கு விருத்தியுரை கண்ட ஆசிரியர் இந்நூல் 15-ம் சூத்திரத்திற்கு உரைத்த உரையானும் யாப்பருங்கலக்காரிகை ஆசிரியர் அமிதசாகரனுரே யாப்பருங்கல மியற்றினுரெனப் பெறப்படுகின்றது. இனி வீரசோழிய உரைகாரர் பெருந்தேவனுர் உரைத்த வீரசோழிய அலங்காரப் படலம் 39-ம் செய்யுளுரையான் யாப்பருங்கல ஆசிரியர் அமிதசாகரனுரேயாவர் என்பது தெளிவாகின்றது.

உ

திருச்சிற்றம்பலம்

# யாப்பருங்கலம்



## பாயிரம்

முழுதுல கிறைஞ்ச முற்றொருங் குணர்ந்தோன்
செழுமலர்ச் சேவடி செவ்விதின் வணங்கிப்
பாற்படு தென்மிழ்ப் பரவையின் வாங்கி
யாப்பருங் கலநனி யாப்புற வகுத்தோன்
தனக்கு வரம்பாகிய தவத்தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கறு கேள்வித் துகள்தீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே.

## கடவுள் வணக்கம்

வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய
அறிவனை வணங்கி அறைகுவன் யாப்பே.



# க. உறுப்பியல்

## க. எழுத்தோத்து

### யாப்பு

எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோ
டிழுக்கா நடைய தியாப்பெனப் படுமே. க

### அசைக் குறுப்பாம் எழுத்தின் வகை

உயிரே மெய்யே உயிர்மெய் என்று
குறிலே நெடிலே அளபெடை என்று
வன்மை மென்மை இடைமை என்று
சார்பில் தோன்றுந் தன்மைய என்று
ஐ ஔ மகரக் குறுக்கம் என்றுங்
கைம்மூ வெழுத்தும் ஆம்அசைக் குறுப்பே. உ

### ஆய்தத்திற்கும் ஒற்றிற்குஞ் சிறப்புவிதி

தனிநிலை யொற்றிவை தாம்அல கிலவே
அளபெடை அல்லாக் காலை யான. ந

### இகரவுகரக் குறுக்கத்திற்கும் உயிரளபிற்குஞ் சிறப்புவிதி

தளைசீர் வண்ணம் தாங்கெட வரினே
குறுகிய இகரமுங் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே. ச

## உ. அசையோத்து

### அசையின் வகை

நேரசை என்று நிரையசை என்று
ஆயிரண் டாகி அடங்குமன் அசையே.　　ரு

### நேரசை

நெடில்குறில் தனியாய் நின்றும்ஒற் றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே.　　சு

### தனிக்குறில்

குறிப்பே ஏவல் தற்சுட் டல்வழி
தனிக்குறில் மொழிமுதல் தனியசை இலவே.　　எ

### நிரையசை

குறிலிணை குறில்நெடில் தனித்தும்ஒற் றடுத்தும்
நெறிமையின் நான்காய் வருநிரை யசையே.　　அ

### ஐகாரக் குறுக்கம் இரண் டிணைந்து நிரையசையாவது

ஈறும் இடையும் இணைந்தும் இணையசை
ஆகுமை என்ப அறிந்திசி னோரே.　　கூ

---

## ௩. சீரோத்து

### சீர்களது பெயர் வேறுபாடு

*இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று*
*மயக்கற வகுத்த சீர்மூன் றாகும்.* ௧0

### இயற்சீரின் திறமும் தொகையும் உணர்த்துவது

*ஈரசை கூடிய சீர்இயற் சீர்அவை*
*ஈரிரண் டென்ப இயல்புணர்ந் தோரே.* ௧௧

### உரிச்சீரின் திறமும் தொகையும் உணர்த்துவது

*மூவசைச் சீர்உரிச் சீர்இரு நான்கினும்*
*நேர்இரு நான்கும் வெள்ளை அல்லன*
*பாவினுள் வஞ்சியின் பாற்பட் டனவே.* ௧௨

*நாலசைச் சீர்பொதுச் சீர்பதி னாறே.* ௧௩

### ஓரசைச்சீரின் பெயரும் வகையு முணர்த்துவது

*ஓரசைச் சீரும்அஃ தோர்இரு வகைத்தே.* ௧௪

### முற்கூறப்பட்ட சீர்கள் செய்யுளகத்து நிற்கும் முறைமை

*விரவியும் அருகியும் வேறும் ஒரோவழி*
*மருவியும் பெறுநும் வழங்குமன் னவையே.* ௧௫

நேர்நடுவாகிய வஞ்சி யுரிச்சீர் கலியுள்ளும்
ஆசிரியத்துள்ளும் வருமெனல்

*நிரைநடு வியலா வஞ்சி உரிச்சீர்*
*கலியினோ டகவலிற் கடிவரை இலவே.*　　கசு

## ச. தளையோத்து

தளை இன்னதென்பதும் அதன் தொகையும்
உணர்த்துவது

*சீரொடு சீர்தலைப் பெய்வது தளைஅவை*
*ஏழென மொழிப இயல்புணர்ந் தோரே.*　　கஎ

### வெண்டளை

*வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்*
*என்றிரண் டென்ப வெண்டளைக் கியல்பே.*　　கஅ

### ஆசிரியத்தளை

*ஈரசைச் சீர்நின் றினிவருஞ் சீரொடு*
*நேரசை ஒன்றல் நிரையசை ஒன்றலென்*
*றுயிரு வகைத்தே ஆசிரி யத்தளை.*　　கசு

### கலித்தளை

*நிரைஈ றில்லா உரிச்சீர் முன்னர்*
*நிரைவரு காலைக் கலித்தளை ஆகும்.*　　உ0

### வஞ்சித்தளை

தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித் தளையின் வகைஇரண் டாகும். உக

### தளைகள் மயங்குமா றுணர்த்துவது

வெள்ளையுள் பிறதளை விரவா அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும். உஉ

## ரு. அடியோத்து

### அடிவகை

குறளடி சிந்தடி அளவடி நெடிலடி
கழிநெடில் அடியெனக் கட்டுரைத் தனரே. உங

### அடிகளைந்தனுள் முதல் நாலடிக ளாமாறு

குறளடி சிந்தடி இருசீர் முச்சீர்
அளவடி நெடிலடி நாற்சீர் ஐஞ்சீர்
நிரல்நிறை வகையான் நிறுத்தனர் கொளலே. உச

### கழிநெடிலடி

கழிநெடில் அடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிரண் டிறுஉ
வருவன பிறவும் வகுத்தனர் கொளலே. உரு

### வஞ்சிப்பாவிற்குரிய அடிகள்

*சிந்தடி குறளடி என்றிரண் டடியான்*
*வஞ்சி நடக்கும் என்மனார் புலவர்.*　　உசு

### கலிப்பாவிற்கும் வெண்பாவிற்குமுரிய அடிகள்

*கலியொடு வெண்பா அகவல் கூறிய*
*அளவடி தன்னால் நடக்குமன் னவையே.*　　உஎ

### பாவினங்களில் வழங்கும் அடிகள்

*பாவினம் எல்லா அடியினும் நடக்கும்.*　　உஅ

### ஆசிரியப்பாவில் பிறபாக்களுக்குரிய அடிகள் வந்து மயங்குமாறு

*இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடியிவை*
*அகப்பட வரூஉம் அகவலும் உளவே.*　　உகூ

### கலிப்பாவில் பிறபாவுக்குரிய அடிகள் வந்து மயங்குமாறு

*வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே.*　　௩0

### வஞ்சிப்பாவில் பிறபாவிற்குரிய அடிகள் வந்து மயங்குமாறு

*வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்.*　　௩க

### ஒவ்வொருவகைப் பாவுக்கும் அடிச்சிறுமை ஆமாறு

ஈரடி வெண்பாச் சிறுமை மூவடி
ஆசிரி யத்தொடு வஞ்சி எஞ்சிய
சீரிரண் டடியே இழிபெனா மொழிப. ௩௨

## ௬. தொடையோத்து

### தொடை தோன்றுமாறு

தொடையே அடியிரண் டியையத் தோன்றும். ௩௩

### தொடையின் வகை

மோனை எதுகை முரணியை பளபெடை
பாதம் இணையே பொழிப்போ டொரூஉத்தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்
சீரியல் முற்றொடு சிவணுமா ரவையே. ௩௪

### அடிமோனைத் தொடை

ஆதி எழுத்தே அடிதொறும் வரின்அடி
மோனைத் தொடையென மொழிமனார் புலவர். ௩௫

### அடியெதுகை

இரண்டாம் எழுத்தொன் றியைவதே எதுகை. ௩௬

### வருக்க நெடில் இன மோனையும் எதுகையும்

வருக்க நெடிலினம் வரையார் ஆண்டே. ௩எ

### முரண் தொடை

மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே. ௩அ

### இதுவுமது

கடைஇணை பின்முரண் இடைப்புணர் முரண்என
இவையும் கூறுப ஒருசா ரோரே. ௩௯

### அடியியைபுத் தொடை

இறுவாய் ஒப்பின் அஃ தியைபெனப் படுமே. ௪0

### அடி அளபெடைத் தொடை

அளபெடை ஒன்றுவ தளபெடைத் தொடையே. ௪க

### இணைமோனைத் தொடை

இருசீர் மிசைவரத் தொடுப்பதை இணையே. ௪உ

### பொழிப்பு மோனை

முதலொடு மூன்றாஞ் சீர்த்தொடை பொழிப்பே. ௪௩

### ஒரூஉத் தொடை

சீர்இரண் டிடைவிடத் தொடுப்ப தொரூஉத்தொடை.

### கூழை

மூவொரு சீரும் முதல்வரத் தொடுப்பது
கூழை என்மனார் குறிஉணர்ந் தோரே. சரு

### மேற்கதுவாய் மோனை

முதலயற் சீரொழித் தல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கது வாயே. சசு

### கீழ்க்கதுவாய் மோனை

ஈற்றயற் சீரொழித் தெல்லாம் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமைய தாகும். சஎ

### முற்றுமோனை

சீர்தொறுந் தொடுப்பது முற்றெனப் படுமே. சஅ

### செந்தொடை இரட்டைத்தொடை அந்தாதித் தொடை

செந்தொடை இரட்டையொ டந்தாதி யெனவும்
வந்த வகையான் வழங்குமன் பெயரே. சகூ

### செந்தொடை

செந்தொடை ஒவ்வாத் திறத்தன வாகும். ருo

### இரட்டைத்தொடை

இரட்டை அடிமுழு தொருசீர் இயற்றே. ருக

### அந்தாதித் தொடை

ஈறு முதலாத் தொடுப்பதந் தாதியென்
றோதினர் மாதோ உணர்ந்திசி னோரே.　　　ருஉ

### ஒரு செய்யுளிற் பல தொடையும் பல அடிகளும் வரின் அவற்றை வழங்குமாறு

தொடைபல தொடுப்பினும் தளைபல விரவினும்
முதல்வந் ததனுன் மொழிந்திசிற் பெயரே.　　　ருங



## உ. செய்யுளியல்

### செய்யுட்களின் வகை

செய்யுள் தாமே மெய்பெற விரிப்பின்
பாவே பாவினம் என இரண் டாகும்.　　　ருச

### பாக்களின் பெயர் வேறுபாடு

வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியெனப்
பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்.　　　ருரு

### பாவினங்களது பெயரும் வழங்கு முறைமையும்

தாழிசை துறையே விருத்தம் என்றிவை
பாவினம் பாவொடு பாற்பட் டியலும்.　　　ருசு

## வெண்பா

செப்பல் இசையன வெண்பா மற்றவை
அந்தடி சிந்தடி ஆகலும் அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகலும் பெறுமே. ௫௭

## வெண்பாவின் வகை

குறள்சிந் தின்னிசை நேரிசை பஃறொடை
எனஐந் தாகும் வெண்பாத் தானே. ௫௮

## குறள்வெண்பாவும் சிந்தியல்வெண்பாவும்

ஈரடி குறள்சிந் திருதொடை இயற்றே. ௫௯

## நேரிசைவெண்பா

நாலோர் அடியாய்த் தனியிரண் டாவதன்
ஈற்றொரு வாய்மூற் றிருவிகற் பொன்றினும்
நேரிசை வெண்பா எனப்பெயர் ஆகும். ௬0

## இன்னிசைவெண்பா

விகற்பொன் றாகியும் மிக்கும் தனிச்சொல்
இயற்றப் படாதன இன்னிசை வெண்பா. ௬௧

## பஃறொடைவெண்பா

பாதம் பலவரின் பஃறொடை வெண்பா. ௬௨

## வெண்பாவி னினம்

ஒழுகிய ஓசையின் ஒத்தடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே.　　௬௨

## குறட்டாழிசை

அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே.　　௬௩

## வெண்செந்துறையும் குறட்டாழிசையும் இன்னபாவின் இனமென்பது

உரைத்தன இரண்டும் குறட்பா வினமே.　　௬௪

## வெண்டாழிசை

அடிஒரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
விடின்அது வெள்ளொத் தாழிசை யாகும்.　　௬௫

## வெண்டுறை

மூன்றடி முதலா ஏழடி காறும்வந்
தீற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்துறை யாகும்.　　௬௭

## வெளிவிருத்தம்

நான்கடி யானும் நடைபெற் றடிதொறுந்
தான்தனிச் சொற்கொளின் வெளிவிருத் தம்மே.　　௬அ

## ஆசிரியப்பா

அகவல் இசையன அகவல் மற்றவை
ஏஓ ஈஆய் என்ஐஎன் றிறுமே. ௬௯

## ஆசிரியப்பாவினது பெயர் வேறுபாடு

நேரிசை இணைக்குறள் மண்டில நிலைப்பெயர்
ஆகுமண் டிலமுமென் றகவல் நான்கே. ௭0

## நேரிசையாசிரியப்பா

அந்த அடியின் அயலடி சிந்தடி
வந்தன நேரிசை ஆசிரி யம்மே. ௭௧

## இணைக்குறளாசிரியப்பா

இணைக்குறள் இடைபல குறைந்திடின் இயல்பே. ௭௨

## அடிமறி மண்டிலவாசிரியப்பா

மனப்படி மடிமுத லாயிறின் மண்டிலம். ௭௩

## நிலைமண்டிலவாசிரியப்பா

ஒத்த அடியின தாகியும் ஒற்றிற
நிற்பவும் என்னு நிலைமண் டிலமே. ௭௪

## ஆசிரியத்தாழிசை

மூன்றடி ஒத்த முடிவின வாய்விடின்
ஆன்ற அகவல் தாழிசை ஆமே. ௭௫

## ஆசிரியத்துறை

கடையதன் அயலடி கடைதபு நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
இடையடி குறைநவும் அகவல் துறையே. எசு

## ஆசிரியவிருத்தம்

கழிநெடில் அடிநான் கொத்திறின் விருத்தமஃ
தழியா மரபின தகவல் ஆகும். எஎ

## கலிப்பா

துள்ளல் இசையன கலிப்பா மற்றவை
வெள்ளையும் அகவலும் ஆய்விளைந் திறுமே. எஅ

## கலிப்பாவின் வகை

ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே
கொச்சகக் கலியொடு கலிமூன் றாகும். எகூ

## ஒத்தாழிசைக்கலியின் வகை

நேரிசை அம்போ தரங்கம் வண்ணகமென்
றோதிய மூன்றே ஒத்தா ழிசைக்கலி. அ0

## வெண்கலிப்பா, கொச்சகக் கலிப்பா இவற்றின் வரையறை

வெண்கலி ஒன்றே கொச்சகம் பலவெனப்
பண்பறி புலவர் பகுத்துரைத் தனரே. அக

## நேரிசை யொத்தாழிசைக்கலிப்பா

தரவொன்று தாழிசை மூன்றும் சமனாய்த்
தரவிற் சுருங்கித் தனிநிலைத் தாகிச்
சுரிதகம் சொன்ன இரண்டினுள் ஒன்றாய்
நிகழ்வது நேரிசை ஒத்தா ழிசைக்கலி. ௮௨

## அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பா

முந்திய தாழிசைக் கீறாய் முறைமுறை
ஒன்றினுக் கொன்று சுருங்கும் உறுப்பின
தம்போ தரங்கஒத் தாழிசைக் கலியே. ௮௩

## வண்ணக வொத்தாழிசைக்கலிப்பா

அவற்றொடு முடுகியல் அடியுடை அராகம்
அடுப்பது வண்ணக ஒத்தா ழிசைக்கலி. ௮௪

## கலிவெண்பா

தன்தளை ஓசை தழுவிநின் றீற்றடி
வெண்பா இயலது கலிவெண் பாவே. ௮௫

## கொச்சகக்கலிப்பா

தரவே தரவிணை தாழிசை தாமும்
சிலவும் பலவும் சிறந்து மயங்கியும்
மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னுங் குறியின வாகும். ௮௬

### கலித்தாழிசை

அடிஎனைத் தாகியும் ஒத்துவந் தளவினிற்
கடைஅடி மிகுவது கலித்தா ழிசையே.　　அஎ

### கலித்துறை

நெடில்அடி நான்காய் நிகழ்வது கலித்துறை.　　அஅ

### கலிவிருத்தம்

அளவடி நான்கின கலிவிருத் தம்மே.　　அகூ

### வஞ்சிப்பா

தூங்கல் இசையன வஞ்சி மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோ டகவலின் இறுமே.　　கூ0

### வஞ்சித்தாழிசையும் வஞ்சித்துறையும்

குறள்அடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை தனிவரின்
துறைஎன மொழிப துணிந்திசி னோரே.　　கூக

### வஞ்சி விருத்தம்

சிந்தடி நான்காய் வருவது வஞ்சிய
தெஞ்சா விருத்தம் என்மனார் புலவர்.　　கூஉ

### புறநடை

மிக்குங் குறைந்தும் வரினும் ஒருபுடை
ஒப்புமை நோக்கி ஒழிந்தவும் கொளலே.



## ௯. ஒழிபியல்

### தனிச்சொல் நிற்குமிடம்

அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்ஃ
திறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.

### புறநடை

நிரல்நிறை முதலிய பொருள்கோட் பகுதியும்
அறுவகைப் பட்ட சொல்லின் விகாரமும்
எழுத்தின் இசையை அசைபெறுத் தியற்றலும்
வழுக்கா மரபின் வகையுளி சேர்தலும்
அம்மை முதலிய ஆயிரு நான்மையும்
வண்ணமும் பிறவும் மரபுளி வழாமைத்
திண்ணிதின் நடத்தல் தெள்ளியோர் கடனே.

## சித்திரக்கவி மாலை

மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்
ஏக பாதம் எழுகூற் றிருக்கை
காதை கரப்பே கரந்துறை பாட்டே
தூசங் கொளலே வாவல் நாற்றி
கூட சதுக்கங் கோமூத் திரியே
யோரெழுத் தினத்தான் உயர்ந்த பாட்டே
பாத மடக்கே பாவின் புணர்ப்பே
ஒற்றுப் பெயர்த்தல் ஒருபொருட் பாட்டே
சித்திரக் காவே விசித்திரக் காவே
விகற்ப நடையே வினாவுத் தரமே
சருப்பதோ பத்திரம் சார்ந்த எழுத்து
வருத்தன மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம்நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே
உருவகம் ஆதி விரவியல் ஈறா
வரும்அலங் காரமும் வாழ்த்தும் வசையுங்
கவியே கமகன் வாதி வாக்கியென்
றவர்கள் தன்மையும் அவையின தமைதியும்
பாடுதல் மரபும் தாரணைப் பகுதியும்
ஆனந்த முதலிய ஊனமும் செய்யுளும்
விளம்பனத் தியற்கையும் நரம்பின் விகற்பமும்

பண்ணும் திறமும் பாலையும் கூட்டமும்
எண்ணிய திணையும் இருதுவும் காலமும்
எண்வகை மணனும் எழுத்தும் சொல்லும்
செந்துறை மார்க்கமும் வெண்துறை மார்க்கமும்
தந்திர உத்தியுந் தருக்கமும் நடமும்
முந்துநூல் முடிந்த முறைமையின் வழாமை
வந்தன பிறவும் வயின்அறிந் துரைப்போன்
அந்தம்இல் கேள்வி ஆசிரி யன்னே.

யாப்பருங்கலம்

முற்றும்



# யாப்பருங்கலக்காரிகை



அமிர்தசாகரனார்

:: இயற்றியது ::

# முன்னுரை

யாப்பருங்கலக்காரிகை என்னும் இந்நூல் யாப்பருங்கலத்திற்கு அங்கமாய் ஆக்கப்பெற்று யாப்பிலக்கணத்தைச் சுருக்கமாக உணர்த்துவது. யாப்பருங்கல மியற்றிய ஆசிரியர் அமிர்தசாகரனாரே இஃது மியற்றியுள்ளாரென்பது யாப்பருங்கல முன்னுரையான் விளங்கப்பெறும். இஃது இருவகைக் கட்டளைக் கலித்துறை யாப்பினால், உறுப்பியல் செய்யுளியல் ஒழிபியல் என்னும் மூன்றியல்களாய், மகடூஉ முன்னிலை யுடைத்தாய், உதாரண மெடுத்தோதப் பெற்றதாய் முதனினைப் புணர்த்திய இலக்கியத்ததாய் ஆக்கப் பெற்றுள்ளது.

இதற்குக் குணசாகரர் இயற்றிய பழைய உரை ஒன்றும், சுன்னாகம் அ. குமாரசாமிப்புலவர் இயற்றிய புத்துரை ஒன்றுமாக இரண்டு உரைகளுண்டு.

தமிழ் இலக்கணங்கள் ஐந்தனுள் எழுத்திலக்கணமும் சொல்லிலக்கணமுங் கற்பார் நன்னூலும், அகமும் புறமுமாயுள்ள பொருளிலக்கணங் கற்பார் முறையே நாற்கவிராசநம்பி யகப்பொருளும் புறப்பொருள் வெண்பா மாலையும், அணியிலக்கணங் கற்

பார் தண்டியலங்காரமும் பயின்றுவருதல் போல யாப்பிலக்கணங் கற்பார் இதனையே பெரிதும் பாராட்டிப் பயின்று வருகின்றனர். இதன் சூத்திரங்கள் 'சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச் செவ்வனாடி யிற் செறித்தினிது விளக்கித் திட்ப நுட்பஞ் செறிந்து கற்பார்க்குப் பெரிதும் இன்பம் பயக்குந் தன்மையன. இந்நூலாசிரியரது காலம் சற்றேறக்குறைய ஆயிர மாண்டுகளுக்கு மேற்பட்டிருக்கலாமென அறிஞர் கருது கின்றனர்.

---

உ

திருச்சிற்றம்பலம்

# யாப்பருங்கலக்காரிகை



## தற்சிறப்புப்பாயிரம்

கந்த மடிவில் கடிமலர்ப்
பிண்டிக்கண் ணார்நிழற்கீழ்
எந்தம் அடிகள் இணையடி
ஏத்தி எழுத்தசைசீர்
பந்தம் அடிதொடை பாஇனங்
கூறுவன் பல்லவத்தின்
சந்த மடிய அடியான்
மருட்டிய தாழ்குழலே.



## அவையடக்கம்

தேனார் கமழ்தொங்கல் மீனவன்
கேட்பத்தெண் ணீரருவிக்
கானார் மலயத் தருந்தவன்
சொன்னகன் னித்தமிழ்நூல்

யானு நடாத்துகின் றேன்என்
றெனக்கே நகைதருமால்
ஆனு அறிவின் அவர்கட்கென்
ஆங்கொல் என் ஆதரவே.

சுருக்கமில் கேள்வித் துகள்தீர்
புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருள் தானும் விழுப்பொரு
ளாம்பனி மால்இமயப்
பொருப்பகஞ் சேர்ந்தபொல் லாக்கருங்
காக்கையும் பொன்னிறமாய்
இருக்குமென் றிவ்வா றுரைக்குமன்
றோஇவ் இருநிலமே.



# க. உறுப்பியல்

## க. எழுத்து

குறில்நெடில் ஆவி குறுகிய
மூவுயி ராய்தமெய்யே
மறுவறு மூவின மைதீர்
உயிர்மெய் மதிமருட்டும்
சிறுநுதற் பேரமர்க் கட்செய்ய
வாயைய நுண்ணிடையாய்
அறிஞர் உரைத்த அளபும்
அசைக்குறுப் பாவனவே.

## உ. அசை

### இருவகை யசை

குறிலே நெடிலே குறிலிணை
ஏனைக் குறில் நெடிலே
நெறியே வரினும் நிறைந்தொற்
றடுப்பினும் நேர்நிரையென்
றறிவேய் புரையுமென் தோளி
உதாரணம் ஆழிவெள்வேல்
வெறியே சுறுநிறம் விண்தோய்
விளாம்என்று வேண்டுவரே. ௩

## ௩. சீர்

### ஐவகைச் சீர்

ஈரசை நாற்சீர் அகவற்
குரியவெண் பாவினவாம்
நேரசை யால் இற்ற மூவசைச்
சீர்நிரை யால்இறுப
வார்அசை மென்முலை மாதே
வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
ஓரசை யேநின்றும் சீராம்
பொதுஒரு நாலசையே.

### மூவசைச்சீர் வரைக்கும் வாய்பாடு

தேமா புளிமா கருவிளம்
கூவிளம் சீரகவற்
காமாம் கடைகாய் அடையின்வெண்
பாவிற்கந் தங்கனியா
வாமாண் கலைஅல்குல் மாதே
வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
நாமாண் புரைத்த அசைச்சீர்க்
குதாரணம் நாள் மலரே.

### நாலசைச் சீர்க்கு வாய்பாடுந் தளையும்

தண்ணிழல் தண்பூ நறும்பூ
நறுநிழல் தந்துறழ்ந்தால்

எண்ணிரு நாலசைச் சீர்வந்
　　தருகும் இனியவற்றுள்
கண்ணிய பூவினங் காய்ச்சீர்
　　அனைய கனியொடொக்கும்
ஒண்ணிழற் சீரசைச் சீரியற்
　　சீரொக்கு மொண் தளைக்கே.

உதாரண முதற்குறிப்பு

குன்றக் குறவன் அகவல்பொன்
　　ஆரம்வெண் பாட்டுவஞ்சிக்
கொன்றும் உதாரணம் பூந்தா
　　மரையென்ப ஓரசைச்சீர்
நன்றறி வாரிற் கயவரும்
　　பாலொடு நாலசைச்சீர்க்
கன்றதென் ஞாள்ளற் பள்ளத்தி
　　னேடங்கண் வானத்துமே.

---

௨. தளை

எழுவகைத் தளை

தண்சீர் தனதொன்றில் தன்தளை
　　யாந்தண வாதுவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக்
　　குரித்துவல் லோர்வகுத்த

வெண்சீர் விகற்பம் கலித்தளை
யாய்விடும் வெண்டளையாம்
ஒண்சீ ரகவல் உரிச்சீர்
விகற்பமும் ஒண்ணுதலே. ௧0

உதாரண முதற்குறிப்பு

திருமழை யுள்ளார் அகவல்
சிலைவிலங் காகும்வெள்ளை
மருளறு வஞ்சிமந் தாகிலம்
வந்துமை தீர்கலியின்
நெறிவுறு பந்தநல் லாய்செல்வப்
போர்க்கதக் கண்ணன் என்ப
தாரிமையின் கண்ணின்மை யோரசைச்
சீருக் குதாரணமே. ௧௧

## ரு. அடி

ஐவகையடி

குறள்இரு சீரடி சிந்துமுச்
சீரடி நாலொருசீர்
அறிதரு காலை அளவொடு
நேரடி ஐயொருசீர்

நிறைதரு பாதம் நெடிலடி
யாம்நெடு மென்பணைத்தோட்
கறைகெழு வேற்கண்நல் லாய்மிக்க
பாதம் கழிநெடிலே. கஉ

திரைத்த இருது குறள்சிந்
தளவடி தேம்பழுத்து
விரிக்கு நெடிலடி வேல்நெடுங்
கண்ணிவென் றுன்வினையின்
இரைக்குங் கணிகொண்ட மூவடி
வோடிடம் கொங்குமற்றுங்
கரிக்கைக் கவான்மருப் பேர்முலை
மாதர் கழிநெடிலே. கங

அடிவரையறை

வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு
மூன்றடி மூன்றகவற்
கெள்ளப் படாக்கலிக் கீரிரண்
டாகும் இழிபுரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே
பெருமைஒண் போதலைத்த
கள்ளக் கருநெடுங் கட்சுரி
மென்குழற் காரிகையே. கச

### உதாரண முதற்குறிப்பு

அறத்தா றிதுவென வெள்ளைக்
கிழிபக வற்கிழிப்பு
குறித்தாங் குரைப்பின் முதுக்குறைந்
தாங்குறை யாக்கலியின்
திறத்தா றிதுசெல்வப் போர்ச்செங்கண்
மேதிவஞ் சிச்சிறுமை
புறத்தாழ் கருமென் குழற்றிரு
வேயன்ன பூங்கொடியே. கரு

## ௩. தொடை

### ஐந்து தொடை

எழுவாய் எழுத்தொன்றின் மோனை
இறுதி இயைபிரண்டாம்
வழுவா எழுத்தொன்றின் மாதே
எதுகை மறுதலைத்த
மொழியான் வரினும் முரணடி
தோறு முதல்மொழிக்கண்
அழியா தளபெடுத் தொன்றுவ
தாகும் அளபெடையே.

## அந்தாதி, இரட்டை, செந்தொடை

அந்த முதலாத் தொடுப்பதந்
    தாதி அடிமுழுதும்
வந்த மொழியே வருவ
    திரட்டை வரன்முறையான்
முந்திய மோனை முதலா
    முழுதும்ஒவ் வாது*விட்டாற்
செந்தொடை நாமம் பெறுநறு
    மென்குழற் றேமொழியே.        கஎ

## உதாரண முதற்குறிப்பு

மாவும்புண் மோனை இயைபின்
    னகைவடி யேபெருகைக்
கேவின் முரணும் இருள்பரந்
    தீண்டள பாஅவளிய
ஓவிலந் தாதி யுலகுட
    னொமொக்கு மேயிரட்டை
பாவருஞ் செந்தொடை பூத்தவென்
    றுகும் பனிமொழியே.        கஅ

இருசீர் மிசைஇணை யாகும்
    பொழிப்பிடை யிட்டொரூஉவாம்
இருசீர் இடைவிட்ட தீறிலி
    கூழை முதலிறுவாய்

---

(பாடம்.) * முட்டாற்.

வருசீர் அயலில மேஃகீழ்
வகுத்தமை கீர்கதுவாய்
வருசீர் முழுவதும் ஒன்றின்முற்
றென்ப மற்றவையே. ௧௯

## உதாரண முதற்குறிப்பு

மோனை விகற்பம் அணிமலர்
மொய்த்தூட ஞம் இயையிற்
கேனை எதுகைக் கினம்பொன்னின்
அன்ன இணிமுரணிற்
கான விகற்பமும் சீறடிப்
பேர தளபெடையின்
தான விகற்பமும் தாஅட்டாஅ
மரையென்ப தாழ்குழலே. ௨௦

## உறுப்பியற்காரிகை முதற்குறிப்பு

கந்தமும் தேனுஞ் சுருக்கமும்
காதற் குறில்குறிலே
சந்தமுந் தீரசை தேமாந்தண்
குன்றம்தன் சீர்திருவும்
கொந்தவிழ் கோதாய் குறடிரை
வெள்ளைக் கறத்தெழுவாய்
அந்தமு மாவு மிருசீரும்
மோனையும் ஆம்உறுப்பே. ௨௧

# உ. செய்யுளியல்

## க. பா

வெண்பா அகவல் கலிப்பா
　　அளவடி வஞ்சியென் னும்
ஒண்பா அடிகுறள் சிந்தென்
　　றுரைப்ப ஒலிமுறையே
திண்பா மலிசெப்பல் சீர்சால்
　　அகவல்சென் றோங்குதுள்ளல்
நண்பா அமைந்த நலமிகு
　　தூங்கல் நறுநுதலே　　உஉ

### உதாரண முதற்குறிப்பு

வளம்பட என்பது வெள்ளைக்
　　ககவற் குதாரணஞ்செங்
களம்படக் கொன்று கலிக்கரி
　　தாயகண் ணோர்கொடிபோல்
துளங்கிடை மாதே சுறமறி
　　தொன்னலத் தின்புலம்பென்
றுளங்கொடு நாவலர் ஓதினர்
　　வஞ்சிக் குதாரணமே.　　உ௩

## உ. வெண்பா

### குறள்வெண்பா, நேரிசைவெண்பா

ஈரடி வெண்பா குறள்குறட்
பாஇரண் டாய்இடைக்கண்
சீரிய வான்தனிச் சொல்லடி
மூய்ச்செப்பல் ஓசைகுன்றா
தோரிரண் டாயும் ஒருவிகற்
பாயும் வருவதுண்டேல்
நேரிசை ஆகும் நெறிசுரி
பூங்குழல் நேரிழையே. உ௬

### உதாரண முதற்குறிப்பு

உருவுகண் டெள்ளா உடையார்
குறள்மட வாய்தடமண்
டரிய வரைகீண் டிருகுறள்
நேரிசை தாமரையின்
கருமமு மாத்தவும் வஞ்சியுங்
காமர் தனிச்சொல்முன்றா
நெறிநுண் கருங்குழல் நேரிழை
ஆசிட்ட நேரிசையே. உ௭

### இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா

ஒன்றும் பலவும் விகற்பொடு
நான்கடி யாய்த்தனிச்சொல்

இன்றி நடப்பின்அஃ தின்னிசை
துன்னும் அடிபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை
யாஞ்சிறை வண்டினங்கள்
துன்றுங் கருமென் குழற்றுடி
நேரிடைத் தூமொழியே. உசு

உதாரண முதற்குறிப்பு

வைகலும் வைகல் துகடீர்
கடற்குட்டம் இன்றும் அங்கண்
எய்து மலிதேர் வளமழை
இன்னுமை இன்னிசைபோல்
வையக மெல்லாம் பலவிகற்
பேற்றது சேற்றொருகால்
பையர வல்குல் பன்மாடம்
பஃறொடை பல்விகற்பே. உஎ

சிந்தியல்வெண்பா, வெண்பாவினிறுதி

நேரிசை இன்னிசை போல
நடந்தடி மூன்றின்வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்தியல்ஆகும்
நிகரில் வெள்ளைக்
கோரசைச் சீரும் ஒளிசேர்
பிறப்பும்ஒண் காசும்இற்ற

சீருடைச் சிந்தடி யேமுடி
வாமென்று தேறுகவே. ௨அ

உதாரண முதற்குறிப்பு

நற்கொற்ற வாயில் அறிந்தா
னையுநறும் பூங்குழலாய்
சொற்பெற்ற நேரிசைச் சிந்திய
லாம்சுரை ஆழஅம்மி
நிற்றற் குரிய நறுநீல
நெய்தலும் முல்லையுமென்
றெற்றப் படாதன இன்னிசைச்
சிந்திற் கிலக்கியமே. ௨௯

---

## ௩. வெண்பாவினம்

### வெள்ளைச்செந்துறை, குறட்டாழிசை

அந்தமில் பாதம் அளவிரண்
டொத்து முடியின்வெள்ளைச்
செந்துறை யாகும் திருவே
அதன்பெயர் சீர்பலவாய்
அந்தம் குறைநவுஞ் செந்துறைப்
பாட்டின் இழிபும் அங்கேழ்ச்
சந்தம் சிதைந்த குறளும்
குறளினத் தாழிசையே.

## வெளிவிருத்தம், வெண்டாழிசை, வெண்டுறை

மூன்றடி யானும் முடிந்தடி
　　தோறும் முடிவிடத்துத்
தான்தனிச் சொற்பெறும் தண்டா
　　விருத்தம்வெண் தாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறு
　　மூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடி தாம்சில அந்தம்
　　குறைந்திறும் வெண்துறையே.　　௩க

### உதாரண முதற்குறிப்பு

கொண்டல் முழங்கின வாவா
　　விருத்தங் குழலிசைய
வண்டினம் வெண்துறை தாளா
　　முழங்கொடு தாழிசையே
நண்பிதென் றூர்கலி கொன்றைவெண்

பிண்டி அறுவர்வண் டாரென்ப
　　தாழிசை பெய்வளையே.　　௩௨

## ௪. ஆசிரியப்பா

### நால்வகை யாசிரியப்பா

கடைஅயற் பாதமுச் சீர்வரின்
 நேரிசை காமருசீர்
இடைபல குன்றின் இணைக்குறள்
 எல்லா அடியும்ஒத்து
நடைபெறு மாயின் நிலைமண்
 டிலநடு ஆதியந்தத்
துடைஒரு பாதத் தகவல்
 அடிமறி மண்டிலமே. ௩௫

### உதாரண முதற்குறிப்பு

நேரிசை யாகும் நிலத்திலும்
 என்ப இணைக்குறட்பா
நீரின் சிறிய நிலைமைய
 தாகிலே மண்டிலப்பா
வேரலென் றாகும் விரைமலர்க்
 கோதையில் ஏர்நுதலாய்
சூரல்பம் பென்ப தடிமறி
 யாகத் தணிந்தனரே. ௩௬

## ரு. ஆசிரியப்பாவினம்

### ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம்

தருக்கியல் தாழிசை மூன்றடி
　　ஒப்பன நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக்
　　காயும் இடை இடையே
சுருக்கடி யாயும் துறையாங்
　　குறைவில்தொல் சீரகவல்
விருத்தம் கழிநெடில் நான்கொத்
　　திறுவது மெல்லியலே.　　　நடு

### உதாரண முதற்குறிப்பு

கன்று குணிக்வா னுறத்தா
　　ழிசையாம் கரைபொருகான்
என்றது வண்டுளர் பூந்தார்
　　இரங்கு குயின்முழவாக்
கொன்றூர்ந் தமைந்த அகவற்
　　றுறைகுறை யாவிருத்தம்
பின்தாழ் குழலி விடங்கனி
　　மூவடி வாதியவே.　　　நகூ

## ரு. கலிப்பா

### ஒத்தாழிசைக்கலி

தரவொன்று தாழிசை மூன்று
    தனிச்சொல் சுரிதகமாய்
நிரலொன்றின் நேரிசை ஒத்தா
    ழிசைக்கலி நீர்த்திரைபோல்
மரபொன்று நேரடி முச்சீர்
    குறள்கடு வேமடுப்பின்
அரவொன்றும் அல்குல தம்போ
    தரங்கஒத் தாழிசையே. ஙஎ

### உதாரண முதற்குறிப்பு

வானெடுங் கண்பனி நேரிசை

சேணுற ஓடிக் குழைஇட
    நிச்செருச் செய்யும்விழி
நாணுந் திருவும் அறிவும்
    செறிவும் உடையநல்லாய்
ஏனுங் கெடலரு மாமுனி
    அம்போ தரங்கம்என்னே. ஙஅ

**வண்ணகவொத்தாழிசை, கலிவெண்பா**

அசையடி முன்னர் அராகம்வந்
    தெல்லா உறுப்பும்உண்டேல்

வசையறு வண்ணக ஒத்தா
　　ழிசைக்கலி வான்தளைதட்
டிசைதன தாகியும் வெண்பா
　　இயைந்துமின் பால்மொழியாய்
விசையறு சிந்தடி யாலிறும்
　　ஆய்விடின் வெண்கலியே.　　௩௯

## உதாரண முதற்குறிப்பு

நின்று விளங்கு மணிப்பசும்
　　பொன்நிறை ஆறுறுப்பும்
ஒன்றிய வண்ணக ஒத்தா
　　ழிசைக்கலி ஓசைகுன்றாத்
துன்றிய வாளார் மழையுஞ்
　　சுடர்த்தொடீஇ ஏர்மலரும்
என்றிவை வெண்கலிப் பாவிற்
　　கிலக்கியம் ஏந்திழையே.　　௪0

## கொச்சகக் கலிப்பா

தரவே தரவிணை தாழிசை
　　தாமும் சிலபலவாய்
மரபே இயன்றும் மயங்கியும்
　　வந்தன வாங்கமைத்தோள்
அரவேர் அகலல்குல் அம்பேர்
　　நெடுங்கண்வம் பேறுகொங்கைக்

குரவே கமழ்குழ லாய்கொண்ட
வான்பெயர் கொச்சகமே. சக

உதாரண முதற்குறிப்பு

குடாவிலைத் தண்செல்வப் போர்க்கதக்
கண்ணன் தரவுகுன்றா
வடிவுடை யாகுந் தரவிணை
மன்னும் பஃறுஉத்தடக்கை
இடமிக வாஞ்சிலம் ருழிசை
தண்மதி ஏர்பலவாய்
மடலவிழ் கோதை மணிகிளர்
ஆகு மயங்கிசையே. சஉ

## எ. கலிப்பாவினம்

### கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம்

அடிவரை இன்றி அளவொத்தும்
அந்தடி நீண்டிசைப்பின்
கடிதலில் லாக்கலித் தாழிசை
ஆகுங் கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது
நேரடி ஈரிரண்டாய்
விடினது வாகும் விருத்தம்
திருத்தகு மெல்லியலே. சங

## உதாரண முதற்குறிப்பு

கொய்தினை ஆய்தினை மென்தினை
வாள்வரி பூண்டபறை
எய்திய தாழிசை யானும்வெண்
றானுங் கலித்துறையே
கைதிகழ் ஓதி வரிநெடுங்
கண்ண வனமுலையாய்
மெய்தரு வேய்தலை தேம்பழுத்
தென்ப விருத்தங்களே. ௩௩

## அ. வஞ்சிப்பா, வஞ்சிப்பாவினம்

குறளடி நான்கின மூன்றொரு
தாழிசை கோதில்வஞ்சித்
துறையொரு வாது தனிவரு
மாய்விடின் சிந்தடிநான்
கறைதரு காலை அமுதே
விருத்தம் தனிச்சொல்வந்து
மறைதலில் வாரத்தி னூல்இறும்
வஞ்சிவஞ் சிக்கொடியே. ௩௫

## உதாரண முதற்குறிப்பு

மடப்பிடி பேடை யிரும்பிடி
வஞ்சியின் தாழிசையாம்

வடுப்புரை கண்ணின் நல் லாய்மை
சிறந்தன வான் துறையாம்
தடப்பெருஞ் சோலை விருத்தம
தாகுந் தயங்குவஞ்சிக்
கொடித்தொடி பூந்தா மரைகொடி
வால னுதாரணமே.

### அ. மருட்பா

பண்பார் புறநிலை பாங்குடைக்
கைக்கிளை வாயுறைவாழ்த்
தொண்பாச் செவியறி வென்றிப்
பொருள்மிசை ஊனம்இல்லா
வெண்பா முதல்வந் தகவல்பின்
ஆகி விளையும் என்றால்
வண்பால் மொழிமட வாய்மருட்
பாஎன்னும் வையகமே.

### உதாரண முதற்குறிப்பு

தென்ற லிடையுந் திருநுதல்
வேர்வும் பலமுறையென்
றொன்றிய பாவும்பல் யானையும்
என்பஒண் போதமைந்த
பொன்திகழ் ஓதி புறநிலை
கைக்கிளை வாயுறைவாழ்த்

தென்றிவற் றிற்குஞ் செவியறி
　　விற்கும் இலக்கியமே.　　உ அ

செய்யுளியற்காரிகை முதற்குறிப்பு

வெண்பா வளம்பட ஈரடி
　　ஒன்றுடன் நேரிசையும்
கண்பானல் போல்மயில் அந்தமின்
　　மூன்றுங் கடைதருக்கி
நண்பார் தரவொன் றசைதர
　　வேயடி யோடுகுறள்
பண்பார் புறநிலை செய்யுள்
　　இயலென்ப பாவலரே.　　உகூ



ரு. ஒழிபியல்

எழுத்துப் புறனடை

'ரும் தளையும் சிதையின்
　　சிறியஇ உஅளபோ
-ாரும் அறிவர் அலகு
　　பெறுமைஐ காரணைவேல்

ஓருங் குறிலியல் பொற்றள
பாய்விடின் ஓர்அலகாம்
வாரும் வடமும் திகழும்
முகிழ்முலை வாள்நுதலே.

### அசைகட்குப் புறனடை

விட்டிசைத் தல்லால் முதற்கண்
தனிக்குறில் நேர்அசையென்
றொட்டப் படாததற் குன்றென்
உதாரணம் ஓசைகுன்று
நெட்டள பாய்விடின் நேர்நேர்
நிரையொடு நேரசையாம்
இட்டத்தி னாற்குறில் சேரின்
இலக்கியம் எர்கிளைதவே.

### சீர்க்குந் தளைக்கும் புறனடை

மாஞ்சீர் கலியுள் புகாகலிப்
பாவில் விளங்கனிவர்
தாஞ்சீர் அடையா அகவ
லகத்தும்அல் லாதஎல்லாம்
தாஞ்சீர் மயங்குந் தளையுமங்
தேவெள்ளைத் தன்மைகுன்றிப்
போஞ்சீர் கனிபுகின் புல்லா
சயற்றளை பூங்கொடியே.

### அடிகட்குப் புறனடை

இயற்றளை வெள்ளடி வஞ்சியின்
    பாதம் அகவலுள்ளால்
மயக்கப் படாஅல்ல வஞ்சி
    மருங்கில்எஞ் சாஅகவல்
கயற்கணால் லாய்கலிப் பாதமும்
    நண்ணும் கலியினுள்ளால்
முயக்கப் படுமுதற் கால்இரு
    பாவும் முறைமையினே.  கரு

### ஐஞ்சீரடியும், முரண்டொடையும்

அருகிக் கலியோ டகவல்
    மருங்கின்ஐஞ் சீரடியும்
வருதற் குரித்தென்பர் வான்றமிழ்
    நாவலர் மற்றொருசார்
கருதிற் கடையே கடையிணை
    பின்கடைக் கூழையும்என்
றிரணத் தொடைக்கு மொழிவர்
    இடைப்புணர் வெண்பதுமே.  கசு

### எதுகையும், மோனையும்

வருக்க நெடிலினம் வந்தால்
    எதுகையும் மோனையுமென்

ரெருக்கப் பெயரான் உரைக்கப்
படும்உயிர் ஆசிடையிட்
டிருக்கும் ஒருசார் இரண்டடி
மூன்றாம் எழுத்தும்ஒன்றி
றாக்கும் எதுகைஎன் றாலும்
சிறப்பில நேரிழையே. ௫௫

## தரவுதாழிசைகட் கடிவரையறை

சுருங்கிற்று மூன்றடி எனைத்
தரவிரு மூன்றடியே
தரங்கக்கும் வண்ணகக் குந்தர
வாவது தாழிசைப்பா
சுருங்கிற் றிரண்டடி யோக்கம்
இரட்டி சுரும்பிமிருந்
தரங்கக் குழலாய் சுருங்கும்
தரவினில் தாழிசையே. ௫௬

பொருளோ டடிமுதல் நிற்பது
கூன் அது வேபொருந்தி
இருள்சேர் விலாவஞ்சி யீற்றினும்
நிற்கும் இனிஒழிந்த
மருள்தீர் விகாரம் வகையுளி
வாழ்த்து வசைவனப்புப்
பொருள்கோள் குறிப்பிசை ஒப்பும்
குறிக்கொள் பொலங்கொடியே. ௫௭

## வண்ணம்

தூங்கேந் தடுக்கல் பிரிதல்
　　மயங்கிசை சொற்றவற்றைப்
பாங்கே யகவல் ஒழுகல்
　　வலிமெலிப் பாற்படுத்திட்
டாங்கே குறில்நெடில் வல்லின
　　மெல்லின மோடிடையைத்
தாங்கா தூறழ்தர வண்ணங்கள்
　　நூறுந் தலைப்படுமே.　　　௫அ

## பொருளுந் தொகையும்

எழுத்துப் பதின்மூன் றிரண்டசை
　　சீர்முப்ப தேழ்தளையந்
திழுக்கில் அடிதொடை நாற்பதின்
　　மூன்றைந்து பாவினமூன்
றொழுக்கிய வண்ணங்கள் நூறொன்ப
　　தொண்பொருள் கோள் இருமூ
வழுக்கில் விகாரம் வனப்பெட்
　　டியாப்புள் வகுத்தனவே.　　　௫௯

## ஒழிபியற்காரிகை முதனினைப்பு

சீரொடு விட்டிசை மாஞ்சீர்
　　இயற்றளை சேர்தருகி

வாரடர் கொங்கை வருக்கம்
சுருங்கிற்று வான்பொருளும்
சீரிய தூங்கேர் தடுக்குச்
சிறந்த எழுத்தும் அன்றே
ஆரும் ஒழிபியற் பாட்டின்
முதல்நினைப் பாகும் அன்றே.

யாப்பருங்கலக்காரிகை

முற்றும்



# முன்னுரை

தண்டியலங்காரம் என்னும் இந்நூல் ஐந்திலக் கணங்களுளொன்றாய் அணியிலக்கணத்தை விளக்கு வது. இது வடமொழித் தண்டியாசிரியர் இயற்றிய காவியதர்சம் என்னும் வடநூலின் மொழிபெயர்ப் பாம். இஃது அணியிலக்கணத்தை மட்டுந் தனிப்பட விரிவாக வுணர்த்துவதாய், பொதுவியல், பொருளணி யியல், சொல்லணியியல் என்னு மூன்றியல்களாய், நூற் றிருபத்தைந்து சூத்திரங்களை யுடையதாய், சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்கு நல்லாராலும், தொல் காப்பிய வுரையாசிரியராகிய நச்சினார்க்கினியராலும், இலக்கணவிளக்க வாசிரியராகிய வைத்தியநாத தேசிக ராலு மெடுத்தாளப்பெற்ற பெருமையுடைத்தாய், நூலா சிரியராலேயே உதாரணமும் காட்டப் பெற்றுளதாய் விளங்குவது. தொல்காப்பியம், வீரசோழியம், இலக் கண விளக்கம் முதலிய நூல்கள் அணியிலக்கண முடைத்தாயினும், அணியிலக்கணங் கற்பார் இதனையே பெரிதும் பயின்று வருகின்றனர்.

இத்தகைய தண்டியலங்காரத்தைத் தமிழிற் செய்த **ஆசிரியரது இடம்,** பெயர், கால முதலியன தெளிவு

பெற ஆராய்ச்சியாளர்க்கு இது காறும் புலப்படவில்லை. ஆயினும் வடமொழித் தண்டியாசிரியரே இருமொழியிலும் வல்லுநராய்த் தமிழிலும் இதனைச் செய்திருப்பர் என்று சிலரும், அம்பிகாபதியின் அருமை மகனார் இதனை யியற்றியிருத்தல் வேண்டுமென்று சிலருங் கூறுப.

இதற்குப் பின்னெழுந்த மாறனலங்கார மென்னும் அணிநூல் இதனினும் விளக்கமுடைத்தாயும், இதற்கு வழிநூலாயும் போற்றப்படுகின்றது.

இதற்குத் திருக்குருகூர்ச் சுப்பிரமணிய தேசிகரியற்றிய பழைய உரை யொன்றும், சுன்னாகம் அ. குமாரசாமிப்புலவ ரியற்றிய புத்துரை யொன்றும் உள.



திருச்சிற்றம்பலம்

# தண்டியலங்காரம்



## க. பொதுவியல்

### தற்சிறப்புப் பாயிரம்

*சொல்லின் கிழத்தி மெல்லியல் இணைஅடி*
*சிந்தைவைத் தியம்புவல் செய்யுட் கணியே.*



## நூல்

### செய்யுள் வகை

*செய்யுள் என்பவை தெரிவுற விரிப்பின்*
*முத்தகங் குளகம் தொகைதொடர் நிலையென*
*எத்திறத் தனவும் ஈரிரண் டாகும்.*

### முத்தகச் செய்யுள்

*அவற்றுள்,*
*முத்தகச் செய்யுள் தனிநின்று முடியும்.*

## குளகச் செய்யுள்

குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்.

## தொகைநிலைச் செய்யுள்

தொகைநிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவன் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருள்இடம் காலம் தொழில்என நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டிய ஆகும்.

## தொடர்நிலைச் செய்யுள்

பொருளினும் சொல்லினும் இருவகைத் தொடர்நிலை.

## பொருட்டொடர்நிலைச் செய்யுளின் பகுப்பு

பெருங்காப் பியமே காப்பியம் என்றாங்
கிரண்டாய் இயலும் பொருட்டொடர் நிலையே.

## பெருங்காப்பியம்

அவற்றுள்,
பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொருள் இவற்றினொன்
றேற்புடைத் தாகி முன்வர இயன்று
நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித்
தன்னிகர் இல்லாத் தலைவனை உடைத்தாய்
மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து

நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல்
தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியில் புலத்தல் கலவியில் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி
மந்திரம் தூது செலவிகல் வென்றி
சந்தியில் தொடர்ந்து சருக்கம் இலம்பகம்
பரிச்சேதம் என்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப.　　அ

### பெருங்காப்பிய விலக்கணத்திற்கு ஓர் புறனடை

கூறிய உறுப்பில் சிலகுறைந் தியலினும்
வேறுபா டின்றென விளம்பினர் புலவர்.　　க

### காப்பியம்

அறமுதல் நான்கினும் குறைபா டுடையது
காப்பியம் என்று கருதப் படுமே.　　க0

### காப்பியங்கட்கு ஓர் இலக்கணம்

அவைதாம்,
ஒருதிறப் பாட்டினும் பலதிறப் பாட்டினும்
உரையும் பாடையும் விரவியும் வருமே.　　கக

## சொற்றொடர்நிலைச் செய்யுள்

செய்யுள்அந் தாதி சொற்றொடர் நிலையே. ௧௨

## செய்யுள் நெறி

மெய்பெறு மரபின் விரித்தசெய் யுட்கு
வைதருப் பம்மே கௌடம் என்றாங்
கெய்திய நெறிதாம் இருவகைப் படுமே. ௧௩

## வைதருப்ப நெறி

செறிவே தெளிவே சமநிலை இன்பம்
ஒழுகிசை உதாரம் உய்த்தலில் பொருண்மை
காந்தம் வலியே சமாதி என்றாங்
காய்ந்த ஈரைங் குணனும் உயிரா
வாய்ந்த என்ப வைதருப் பம்மே. ௧௪

## கௌடநெறி

கௌடம் என்பது கருதிய பத்தொடுங்
கூடா தியலுங் கொள்கைத் தென்ப. ௧௫

## ௧. செறிவு

செறிவெனப் படுவது நெகிழ்இசை இன்மை. ௧௬

## ௨. தெளிவு

தெளிவெனப் படுவது பொருள்புலப் பாடே. ௧௭

ங. சமநிலை

விரவத் தொடுப்பது சமநிலை யாகும். கஅ

ச. இன்பம்

சொல்லினும் பொருளினுஞ் சுவைபடல் இன்பம். கக

ரு. ஒழுகிசை

ஒழுகிசை என்பது வெறுத்திசை இன்மை. உ0

சு. உதாரம்

உதாரம் என்பது ஓதிய செய்யுளின்
குறிப்பின் ஒருபொருள் நெறிப்படத் தோன்றல். உக

எ. உய்த்தலில் பொருண்மை

கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற்
குரியசொல் உடையது உய்த்தலில் பொருண்மை. உஉ

அ. காந்தம்

உலகொழுக் கிறவாது உயர்புகழ் காந்தம். உங

கூ. வலி

வலியெனப் படுவது தொகைமிக வருதல். உச

க0. சமாதி

உரியபொருள் அன்றி ஒப்புடைப் பொருண்மேல்
தரும்வினை புணர்ப்பது சமாதி யாகும். உரு

### இவ்வியலுக்குப் புறனடை

ஏற்ற செய்யுட் கியன்ற அணியெலாம்
மூற்ற உணர்த்தும் பெற்றிய தருமையில்
காட்டிய நடைநெறி கடைப்பிடித் திவற்றொடு
கூட்டி உணர்தல் * சான்றோர் கடனே.



## உ. பொருளணியியல்

### பொருளணிகள்

தன்மை உவமை உருவகம் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப்பொருள் வைப்பே வேற்றுமை விபாவனை
ஒட்டே அதிசயம் தற்குறிப் பேற்றம்
ஏது நுட்பம் இலேசம் நிரனிறை
ஆர்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை
பரியா யம்மே சமாயிதம் உதாத்தம்
அரிதுணர் அவநுதி சிலேடை விசேடம்
ஒப்புமைக் கூட்டம் மெய்ப்படு விரோதம்

---

* ஆன்றோர் கடனே என்றும் பாடம்.

மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே
வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகம்இவை
எற்ற செய்யுட் கணிஎழ் ஐந்தே. உஎ

## க. தன்மையணி

எவ்வகைப் பொருளும் மெய்வகை விளக்குஞ்
சொல்முறை தொடுப்பது தன்மை யாகும். உஅ

அதுவே,
பொருள்குணம் சாதி தொழிலொடு புலனும். உகூ

## உ. உவமையணி

பண்பும் தொழிலும் பயனும்என் றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்
தொப்புமை தோன்றச் செப்பின்அஃ துவமை. ௩0

அதுவே,
விரியே தொகையே இதர விதரம்
உரைபெறு சமுச்சயம் உண்மை மறுபொருள்
புகழ்தல் நிந்தை நியமம் அநியமம்
ஐயம் தெரிதரு தேற்றம் இன்சொல்
எய்திய விபரீதம் இயம்புதல் வேட்கை
பலபொருள் விகாரம் மோகம் அபூதம்
பலவயிற் போலி ஒருவயிற் போலி

கூடா உவமை பொதுநீங் குவமை
மாலை என்னும் பால தாகும். ௩௧

அற்புதம் சிலேடை அதிசயம் விரோதம்
ஒப்புமைக் கூட்டம் தற்குறிப் பேற்றம்
விலக்கே ஏதுஎன வேண்டவும் படுமே. ௩௨

மிகுதலும் குறைதலும் தாழ்தலும் உயர்தலும்
பால்மாறு படுதலும் பாகுபா டுடைய. ௩௩

போல மானப் புரையப் பொருவ
நேரக் கடுப்ப நிகர நிகர்ப்ப
ஏர ஏய மலைய இயைய
ஒப்ப எள்ள உறழ ஏற்ப
அன்ன அனைய அமர ஆங்க
என்ன இகல விழைய எதிரத்
துணைதூக் காண்டாங்கு மிகுதகை வீழ
இணைசிவண் கேழ்அற்றுச் செத்தொடு பிறவும்
நவைதீர் பான்மை உவமைச் சொல்லே. ௩௪

## ௩. உருவகவணி

உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்
தொன்றென மாட்டின் அஃ துருவகம் ஆகும். ௩௫

தொகையே விரியே தொகைவிரி எனாஅ
இயைபே இயைபிலி வியநிலை எனாஅச்

சிறப்பே விரூபகம் சமாதானம் எனுஅ
உருவகம் ஏகம் அநேகாங்கம் எனுஅ
முற்றே அவயவம் அவயவி எனுஅச்
சொற்றஜம் மூன்றும் மற்றதன் விரியே. ௩௬

உவமை ஏது வேற்றுமை விலக்கே
அவநுதி சிலேடைஎன் றவற்றொடும் வருமே. ௩௭

உருவகம் உவமை எனஇரு திறத்தவும்
பிரம்ப உணர்த்தும் வரம்புதமக் கின்மையின்
கூறிய நெறியின் வேறுபட வருபவை
தேறினர் கோடல் தெள்ளியோர் கடனே. ௩௮

குணம்தொழில் சாதி பொருள்குறித் தொருசொல்
ஒருவயின் நின்றும் பலவயிற் பொருள்தரின்
தீவகச் செய்யுள் மூவிடத் தியலும். ௩௯

அதுவே,
மாலை விருத்தம் ஒருபொருள் சிலேடைஎன
நால்வகை யானும் நடைபெறும் என்ப. ௪0

## ரு. பின்வருநிலையணி

முன்வருஞ் சொல்லும் பொருளும் பலவயின்
பின்வரும் என்னின் பின்வரு நிலையே. ௪௧

## சு. முன்ன விலக்கணி

முன்னத்தின் மறுப்பினது முன்ன விலக்கே
மூவகைக் காலமும் மேவிய தாகும். சுஉ

பொருள்குணங் காரணங் காரியம் புணரும். சுங

வன்சொல் வாழ்த்துத் தலைமை இகழ்ச்சி
துணைசெயல் முயற்சி பரவசம் உபாயம்
கையறல் உடன்படல் வெகுளி இரங்கல்
ஐயம் என்றாங் கறிந்தனர் கொளலே. சுச

வேற்றுப்பொருள் சிலேடை ஏதுவென் றின்னவை
மேற்கூ றியற்கையின் விளங்கித் தோன்றும். சுரு

## எ. வேற்றுப்பொருள் வைப்பு

முன்னொன்று தொடங்கி மற்றொன்று முடித்தற்குப்
பின்னொரு பொருளின் உலகறி பெற்றி
ஏற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்பே.

முழுவதூஉம் சேறல் ஒருவழிச் சேறல்
முரணித் தோன்றல் சிலேடையின் முடித்தல்
கூடா இயற்கை கூடும் இயற்கை
இருமை இயற்கை விபரீதப் படுத்தலென்
றின்னவை எட்டும் அதன தியல்பே. சுஎ

கூற்றினும் குறிப்பினும் ஒப்புடை இருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே. சுஅ

அதுவே,
குணம்பொருள் சாதி தொழிலொடும் புணரும். ௪௧

## அ. விபாவனையணி

உலகறி காரணம் ஒழித்தொன் றுரைப்புழி
வேறொரு காரணம் இயல்புறக் குறிப்பின்
வெளிப்பட உரைப்பது விபாவனை ஆகும். ௫௦

## க. ஒட்டணி

கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற்
கொத்ததொன் றுரைப்பின்அஃ தொட்டென மொழிப

அடையும் பொருளும் அயல்பட மொழிதலும்
அடைபொது ஆக்கி ஆங்ஙனம் மொழிதலும்
விரவத் தொடுத்தலும் விபரீதப் படுத்தலும்
எனநால் வகையினும் இயலும் என்ப. ௫௨

## க0. அதிசயவணி

மனப்படும் ஒருபொருள் வனப்புவந் துரைப்புழி
உலகுவரம் பிறவா நிலைமைத் தாகி
ஆன்றோர் வியப்பத் தோன்றுவ ததிசயம். ௫௩

அதுதான்,
பொருள்குணம் தொழிலையம் துணிவே திரிபெனத்
தெருளுறத் தோன்றும் நிலைமைய தென்ப. ௫௪

## கக. நற்குறிப்பேற்றவணி

பெயர்பொருள் அல்பொருள் எனஇரு பொருளினும்
இயல்பின் விளைத்திறன் அன்றி அயலொன்று
தான்குறித் தேற்றுதல் தற்குறிப் பேற்றம். ருரு

அன்ன போல்எனும் அவைமுதல் ஆகிய
சொல்நிலை விளக்குந் தோற்றமும் உடைத்தே. ருசு

## கஉ. ஏதுவணி

யாதன் திறத்தினும் இதனின் இது விளைந்ததென்
றேதுவிதந் துரைப்ப தேது அதுதான்
காரக ஞாபகம் எனஇரு திறப்படும். ருஎ

முதல்வனும் பொருளும் கருமமும் கருவியும்
ஏற்பதும் நீக்கமும் எனஇவை காரகம். ருஅ

அவையல பிறவென் றறிவது ஞாபகம். ருகூ

அபாவந் தானும் அதன்பாற் படுமே. சு0

என்றும் அபாவமும் இன்மைய தபாவமும்
ஒன்றினொன் றபாவமும் உள்ளதன் அபாவமும்
அழிவுபாட் டபாவமும் எனஐந் தபாவம். சுக

தூரகா ரியமும் ஒருங்குடன் தோற்றமுங்
காரண முந்துறூஉங் காரிய நிலையும்
யுத்தமு மயுத்தமு முங்கையோ டியலும். சு௨

## கரு. நுட்பவணி

தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினும்
அரிதுணர் வினைத்திறம் நுட்பம் ஆகும். சுரு

## கசு. இலேசவணி

குறிப்பு வெளிப்படுக்குஞ் சத்துவம் பிறிதின்
மறைத்துரை யாடல் இலேசம் ஆகும். சுசு

புகழ்வது போலப் பழித்திறம் புனைதலும்
பழிப்பது போலப் புகழ்புலப் படுத்தலும்
அவையும் இன்னஎன் றறைகுநர் உளரே. சுரு

## கரு. நிரனிறையணி

நிரல்நிறுத் தியற்றுதல் நிரல்நிறை அணியே. சுசு

## கசு. ஆர்வமொழியணி

ஆர்வ மொழிமிகுப்ப தார்வ மொழியே. சுஎ

## கஎ. சுவையணி

உள்நிகழ் தன்மை புறம்போந்து தோன்ற
எண்வகை மெய்ப்பாட்டின் இயல்வது சுவையே. சுஅ

அவைதாம்,
வீரம் அச்சம் இழிப்பொடு வியப்பே
காமம் அவலம் உருத்திரம் நகையே. சுகூ

## கஅ. தன்மேம்பாட்டுரையணி

தான்தற் புகழ்வது தன்மேம் பாட்டுரை.		எ0

## ககூ. பரியாயவணி

கருதியது கிளவா தப்பொருள் தோன்றப்
பிறிதொன்று கிளப்பது பரியா யம்மே.		எக

## உ0. சமாயிதவணி

முந்துதா முயல்வுறு தொழிற்பயன் பிறிதொன்று
தந்து கிளப்பது சமாயிதம் ஆகும்.		எஉ

## உக. உதாத்தவணி

வியத்தகு செல்வமும் மேம்படும் உள்ளமும்
முயற்சிபுனைந் துரைப்பது உதாத்த மாகும்.		எங

## உஉ. அவனுதியணி

சிறப்பினும் பொருளினும் குணத்தினும் உண்மை
மறுத்துப் பிறிதுரைப்பது அவனுதி ஆகும்.		எச

## உங. சிலேடையணி

ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிவுதர வருவது சிலேடை ஆகும்.		எரு

அதுவே,
செம்மொழி பிரிமொழி என இரு திறப்படும்.		எசு

ஒருவினை பலவினை முரண்வினை நியமம்
நியம விலக்கு விரோதம் அவிரோதம்
எனஎழு வகையானும் இயலும் என்ப. எஎ

## உச. விசேடவணி

குணம்தொழில் முதலிய குறைபடு தன்மையின்
மேம்பட ஒருபொருள் விளம்புதல் விசேடம். எஅ

## உரு. ஒப்புமைக்கூட்டவணி

கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத்
தொருபொருள் உரைப்ப தொப்புமைக் கூட்டம். எகூ

புகழினும் பழிப்பினும் புலப்படும் அதுவே. அ0

## உசு. விரோதவணி

மாறுபடு சொற்பொருள் மாறுபட் டியற்கை
விளைவுதர உரைப்பது விரோதம் ஆமே. அக

## உஎ. மாறுபடு புகழ்நிலையணி

கருதிய பொருள் மறைத் தாங்கது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை. அஉ

## உஅ. புகழாப்புகழ்ச்சியணி

பழிப்பது போலும் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி. அங

### உக. நிதரிசனவணி

ஒருவழி நிகழ்வதற் கொத்த தொருபயன்
பிறிதிற்கும் புகழ்மை தீமை என்றிவை
புலப்பட மொழிவ தாயின் நிதரிசனம். அச

### ரு0. புணர்நிலையணி

வினைபண் பெனஇவை இருபொருட் கொன்றே
புணர மொழிவது புணர்நிலை யாகும். அரு

### ருக. பரிவருத்தனையணி

பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே. அசு

### ருஉ. வாழ்த்தணி

இன்னோர்க் கின்ன தியைக என்றுதாம்
முன்னியது விரித்தல் வாழ்த்தென மொழிப. அஎ

### ருரு. சங்கீரணவணி

மொழியப் பட்ட அணிபல தம்முள்
தழுவ உரைப்பது சங்கீ ரணமே. அஅ

### உவமையுருவகங்கட்குப் புறனடை

ஒப்புமை இல்லி தூவ்மையும் உவமையிற்
செப்பிய திறமும் உவம வுருவகமும்
உருவகத் தடக்கலும் உணர்ந்தனர் கொளலே. அகூ

### ௩௪. பாவிகவணி

பாவிகம் என்பது காப்பியப் பண்பே. கூ0



## ௩. சொல்லணியியல்

எழுத்தின் கூட்டம் இடைபிறி தின்றியும்
பெயர்த்தும்வேறு பொருள்தரின் மடக்கெனும்
பெயர்த்தே.

அதுதான்,
ஓரடி முதலாய் நான்கடி காறுஞ்
சேரும் என்ப தெளிந்திசி னோரே. கூஉ

ஆதி இடைகடை ஆதியோ டிடைகடை
இடையொடு கடைமுழு தெனஎழு வகைத்தே. கூ௩

ஓரடி ஒழிந்தன தேருங் காலை
இணைமுதல் விகற்பம் எழு நான்கும்
அடைவுறும் பெற்றியின் அடையத் தோன்றும். கூச

அடிமுழுதும் மடக்கலும் ஆங்கதன் சிறப்பே. கூ௫

ஓரெழுத்து மடக்கலும் உரித்தெனமொழிப. கூசு

### சித்திரகவி வருமாறு

கோமூத் திரியே கூட சதுக்கம்
மாலை மாற்றே எழுத்து வருத்தனம்

நாக பந்தம் வினாஉத் தரமே
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரஞ் சுழிகுளம் சருப்பதோ பத்திரம்
அக்கரச் சுதகமும் அவற்றின் பால. கூஎ

## வழுக்கள்

பிரிபொருட் சொற்றொடர் மாறுபடு பொருள்மொழி
மொழிந்தது மொழிதல் கவர்படு பொருள்மொழி
நிரனிறை வழுவே சொல்வழு வதிவழூஉச்
செய்யுள் வழுவே சந்தி வழுஎன
எய்திய ஒன்பதும் இடனே காலம்
கலையே உலகம் நியாயம் ஆகமம்
மலைவும்உள் ளுறுத்தவும் வரைந்தனர் புலவர். கூஅ

## பிறன்கோட்கூறி மறுத்தல்

மேற்கோள் ஏது எடுத்துக் காட்டென
ஆற்றுளி கிளக்கும் அவற்றது வழூஉநிலை
நிரம்ப உணர்த்தும் வரம்பில என்ப. கூகூ

## க. பிரிபொருட் சொற்றொடர்

அவற்றுள்,
பிரிபொருட் சொற்றொடர் செய்யுள் முழுவதும்
ஒருபொருள் பயவா தொரீஇத் தோன்றும். க00

### இதற்குச் சிறப்புவிதி

களியினும் பித்தினுங் கடிவரை இன்றே.          க0௪

### உ. மாறுபடு பொருண்மொழி

மாறுபடு பொருள்மொழி முன்மொழிந் ததற்கு
மாறுபடத் தோன்றி வருமொழித் தாகும்.          க0௨

### சிறப்புவிதி

காமமும் அச்சமும் கைம்மிகின் உரித்தே.          க0௩

### ௩. மொழிந்தது மொழிவு

மொழிந்தது மொழிவே கூறியது கூறி
வேறுபட ஒருபொருள் விளங்காதாகும்.          க0௪

### சிறப்புவிதி

விரைவினுஞ் சிறப்பினும் வரைவின் றதுவே.          க0௫

### ௪. கவர்படுபொருண்மொழி

ஒருபொருள் துணிய உரைக்கல் உற்றசொல்
இருபொருட் கியைவது கவர்படு பொருள்மொழி. க0௬

### சிறப்புவிதி

வழுஉப்படல் இல்வழி வரைவின் றதுவே.          க0௭

### ௫. நிரனிறைவழு

ஒருநிரல் முன்வைத் ததன்பின் வைக்கும்
நிரல்நிறை பிறழ்வது நிரனிறை வழுவே.          க0௮

### சிறப்புவிதி

உய்த்துணர வரும்வழி அவ்வாறும் உரித்தே. க0கூ

### ௬. சொல்வழு

சொல்வழு என்பது சொல்இலக் கணத்தொடு
புல்லா தாகிய புகர்படு மொழியே. கக0

### சிறப்புவிதி

வழக்கா றுயின் வழுவின் றதுவே. ககக

### எ. யதிவழு

யதிவழு என்ப தோசை அறுவழி
யிப்பட வாரா நிலைமைய தென்ப.

### சிறப்புவிதி

வகையுளி உரைப்புழி வரைவின் றதுவே. ககஙு

### அ. செய்யுள்வழு

செய்யுள் வழுவே யாப்பிலக் கணத்தோ
டெய்தல் இல்லா இடல்பிற் றுகும். கக௪

### சிறப்புவிதி

ஆரிடத் துள்ளும் அவைபோல் பவற்றுளும்
நேரும் என்ப நெறிஉணர்ந் தோரே.

### ௯. ச

சந்தி வழுவே எழுத்திலக் கணத்துச்
சந்தியொடு முடியாத் தன்மைத் தாகும். ககஎ

### சிறப்புவிதி

இரண்டாம் வேற்றுமைக் கெதிர்மறுத்தும் வருமே.

### க0. இடமலைவு

இடம்எனப் படுபவை மலைநாடு யாறே. ககஅ

### கக. காலமலைவு

காலம் பொழுதொடு பருவமென் றிரண்டே. கக௯

### கஉ. கலைமலைவு

கலையெனப் படுபவை காண்டக விரிப்பின்
காமமும் பொருளும் எமுறத் தழுவி
மறுவறக் கிளந்த அறுபத்து நான்கே. கஉ0

### கங. உலகமலைவு

உலகெனப் படுவதீண் டொழுக்கின் மேற்றே. கஉக

### கச. நியாயமலைவு

நியாயம் என்பது நெறியுறக் கிளப்பின்
அளவையில் தெளிக்கும் வினைபொருள் திறமே. கஉஉ

## கரு. ஆகமமலைவு

ஆகமம் என்பன மநுமுத லாகிய
அறனொடு புணர்ந்த திறன்அறி நூலே. கஉரு

## இடமலைவு முதலியவற்றிற்குச் சிறப்புவிதி

கூறிய நெறியின் ஆறுவகை மலைவும்
நாடக வழக்கில் நாட்டுதற் குரிய. கஉசு

## புறனடை

மெய்பெற விரித்த செய்யுட் டிறனும்
எய்திய நெறியும் ஈரைங் குணனும்
ஐயெழு வகையின் அறிவுறும் அணியும்
அடியினும் சொல்லினும் எழுத்தினும் இயன்றும்.
முடிய வந்த மூவகை மடக்கும்
கோமூத் திரிமுதற் குன்று மரபின்
எமுற மொழிமிறைக் கவிஈ ராறும்
இவ்வகை இயற்றுதல் குற்றம் இவ்வகை
எய்த இயம்புதல் இயல்பென மொழிந்த
ஐவகை முத்திறத் தாங்கவை உளப்பட
மொழிந்த நெறியின் ஒழிந்தவும் கோடல்
ஆன்ற காட்சி சான்றோர் கடனே.

## தண்டியலங்காரம்

முற்றும்



கழக வெளியீடு - ௨0௫

ஓம்

# ஐந்திலக்கணம்

பகுதி—௨

க. அகப்பொருள் விளக்கம்

௨. இறையனார் அகப்பொருள்

௩. புறப்பொருள் வெண்பாமாலை

என்னும்

புறப்பொருள் விளக்கம்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
திருநெல்வேலி. : : சென்னை

# பதிப்புரை

தமிழ்மொழி யிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்னும் ஐம்பெரும்பகுதி யினையுடையது. இவ்வைந்தும் பஞ்சலட்சணம் அல்லது ஐந்திலக்கணம் என்று வழங்கப்பெறும்

இவற்றுள் எழுத்தும் சொல்லும் கற்பார் நன்னூலும்; பொருள் கற்பார் முறையே நாற்கவிராச நம்பியகப்பொருளும், இறையனார் அகப்பொருளும், புறப்பொருள் வெண்பாமாலையும்; யாப்பு கற்பார் யாப்பருங்கலமும், யாப்பருங்கலக்காரிகையும்; அணி கற்பார் தண்டியலங்காரமும் பயின்று வருகின்றனர்.

முதற்கண் நன்னூல், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, தண்டியலங்காரம் ஆகிய நான்கையும், 'ஐந்திலக்கணம் முதற்பகுதி' என வெளியிட்டனம். இப்போது நம்பியகப் பொருள், இறையனாரகப் பொருள், புறப்பொருள் வெண்பாமாலை என்னும் புறப்பொருள் விளக்கம் ஆகிய மூன்றையும் 'ஐந்திலக்கணம் இரண்டாம் பகுதி' யென இந்நூலை வெளியிடுகின்றோம்.

இதுவுந் தமிழுலகிற்குப் பெரும்பயன் அளிக்குமெனக் கருதுகின்றனம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

## முன்னுரை

'அகப்பொருள் விளக்கம்' என்னும் இந்நூல் நாற்கவிராசநம்பி என்பவரால் இயற்றப்பெற்றது. தொல்காப்பிய முதலிய இலக்கண நூல்களிற் பரந்து விரிந்து கிடக்கும் அகப்பொருள் இலக்கணங்களைத் தொகுத்துப் பொருளினிது விளங்கச் சூத்திரம் வகுத்திருக்கின்றனர் இந் நூலாசிரியர். இஃது அகப்பொருளிலக்கணங்களைத் தெளிவுற விளக்கு மியல்பிற்றென்று பிற்கால இலக்கண நூலாசிரியர்கள் பெரிதும் பாராட்டியிருக்கின்றனர்.

இந்நூலாசிரியர் பாண்டி நாட்டிலே தாமிர பர்ணியாற்றின் வடகரையிலுள்ள திருப்புளிங்குடியிற்பிறந்தவர். இவர் வடமொழியிலுந் திருந்திய கல்வி யுடையவர். இவரது இயற்பெயர் நம்பிநயினார் என்பது. இவர் தம் புலமைத் திறமையால் **நாற்கவிராசர்** என்னுஞ் சிறப்புப் பெயர் பெற்றனர். இவர் தந்தையார் பெயர் உய்யவந்த நயினார் என்பதும், இவர் சமயம் சமணம் என்பதும், இந்நூல் அரங்கேறிய இடம் பாண்டியன் குலசேகரன் அவைக்களம் என்பதும் இந் நூலின் சிறப்புப் பாயிரத்தால் விளங்கப் பெறுகின்றன.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

உ

திருச்சிற்றம்பலம்

# அகப்பொருள் விளக்கம்



## சிறப்புப்பாயிரம்

பூமிசை நடந்த,
வாமனை வாழ்த்தி வடமலைச் சென்னி
ஈண்டிய கடவுளர் வேண்டலிற் போந்து
குடங்கையி னலைகட லடக்கி யீண்டிய
தென்மலை யிருந்த விருந்தவ னியற்றமிழ்
கெழீஇய வகப்பொரு டழீஇ நோக்கி
வழிகொடுத்து நிறீஇ வகுத்துப் புலப்படுத்தாங்கு
இகப்பி லகப்பொருள் விளக்கம் பகர்ந்தன னெழுதிச்,
செந்தமிழ் நாட்டு மைந்தன் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
**நாற்கவி ராச நம்பி**யென் பவனே.

### *இதுவும் அது

பூமலி நாவன் மாமலைச் சென்னி
ஈண்டிய விமையோர் வேண்டலிற் போந்து

* இது பிற்காலத்தார் செய்தது.

குடங்கையின் விந்த நெடுங்கிரி மிகைதீர்த்து
அலைகட லடக்கி மலயத் திருந்த
இருந்தவன் றன்பா லியற்றமி ழுணர்ந்த
புலவர்பன் னிருவருட் டலைவ னாகிய
தொல்காப் பியனரு ளொல்காப் பெரும்பொருள்
அகப்பொரு ளிலக்கண மகப்படத் தழீஇ
இகப்பருஞ் சான்றோ ரிலக்கிய நோக்கித்
தொகுத்து முறைநிறீஇச் சூத்திரம் வகுத்தாங்கு
அகப்பொருள் விளக்கமென் றதற்கொரு நாமம்
புலப்படுத் திருளறப் பொருள்விரித் தெழுதினன்,
மாந்தருந் தேவரும் வாழ்த்தமுக் குடைக்கீழ்
ஏந்தெழி லரிமா னேந்துபொன் னணைமிசை
மதிமூன் றுகவிப்ப வுதய மால்வரைக்
*கதிரோன் றிருந்தெனக் காண்டக விருந்து
தத்துவம் பகர்ந்தோன் சரணம் பொருந்திய
உத்தமன் புளிங்குடி யுய்யவந் தானெனும்
முத்தமி ழாசான் மைந்த னித்தலத்து
இருபெருங் கலைக்கு மொருபெருங் குரிசில்
பாற்கடற் பல்புகழ் பரப்பிய
நாற்கவி ராச நம்பியென்பவனே.

* கதிரோனிருந்தென—எனவும் பாடம்.

உ

திருச்சிற்றம்பலம்

# அகப்பொருள் விளக்கம்

## (மூலம்)

## அகத்திணையியல்

### அகப்பொருள் வகை

*மலர்தலை யுலகத்துப் புலவோ ராய்ந்த*
*அருந்தமி ழகப்பொருள் கைக்கிளை யைந்திணை*
*பெருந்திணை யெனவெழு பெற்றித் தாகும்.* க

### சொல்லப்படுந் திறம்

*அதுவே,*
*புணர்துறை யுலகிய லெனுந்திற மிரண்டினும்*
*தொல்லியல் வழாமற் சொல்லப் படுமே.* உ

### கைக்கிளை

*அவற்றுள்,*
*கைக்கிளை யுடையது ஒருதலைக் காமம்.* ௩

### ஐந்திணை

*ஐந்திணை யுடையது அன்புடைக் காமம்.* ௪

### பெருந்திணை

*பெருந்திணை யென்பது பொருந்தாக் காமம்.* ௫

### ஐந்திணைக்குரிய பெயர்

குறிஞ்சி பாலை முல்லை மருதம்
நெய்தல் ஐந்திணைக் கெய்திய பெயரே.

### ஐந்திணைப் பொருள்

அவைதாம்,
முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் [எனமு
தற்பொருண் மூன்றினு நுவலப் படுமே.

### முதற்பொருளின் வகை

நிலமும் பொழுதும்என முதலிரு வகைத்தே.

### நிலத்தின் வகை

வரையே சுரமே புறவே பழனம்
திரையே யவையவை சேர்தரு மிடனே
எனவீ ரைவகைத் தனையிய னிலமே.

### பொழுதின் வகை

பெரும்பொழு தென்றா சிறுபொழு தென்றா
இரண்டு கூற்றது இயம்பிய பொழுதே.

### பெரும்பொழுதின் வகை

காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் *வேனில் என்றாங்கு
இருமூன் று திறத்தது தெரிபெரும் பொழுதே.

* முதுவேனில்—எனவும் பாடம்.

### சிறுபொழுதின் வகை

மாலை யாமம் வைகறை *எற்படு
காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்
கைவகைச் சிறுபொழுது ஐவகைத் தாகும். கஉ

### குறிஞ்சிக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும்

அவற்றுள்,
கூதிர் யாமம் முன்பனி யென்றிவை
ஓதிய குறிஞ்சிக் குரிய வாகும். கங

### பாலைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும்

வேனில் நண்பகல் பின்பனி யென்றிவை
பான்மையி னுரிய பாலை தனக்கே. கச

### முல்லைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதும்

மல்குகார் மாலை முல்லைக் குரிய. க௫

### மருதத்துக்குரிய சிறுபொழுது

இருள்புலர் காலை மருதத்திற் குரித்தே. கசு

### நெய்தற்குரிய சிறுபொழுது

வெய்யோன் பாடு நெய்தற் குரித்தே. கஎ

### மருத நெய்தல்களின் பெரும்பொழுது

மருத நெய்தலென் றிவையிரண் டிற்கும்
உரிய பெரும்பொழுது இருமூன் றும்மே. கஅ

* எற்பாடு—எனவும் பாடம்.

## கருப்பொருளின் வகை

ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு
ஊர்நீர் பூமரம் உணாப்பறை யாழ்பண்
தொழில்எனக் கருவீ ரெழுவகைத் தாகும்.

## குறிஞ்சிக் கருப்பொருள்

விறற்சேய், பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி, குறவர் கானவர்
குறத்தியர், கிளிமயில், மறப்புலி குடாவடி
களையடி சீயம், சிறுகுடி, அருவி
நறுஞ்சுனை, வேங்கை குறிஞ்சி காந்தள்,
ஆரந் தேக்ககி லசோக நாகம்
வேரல், ஐவனந் தோரை யேனல்,
கறங்கிசைத் தொண்டகம், குறிஞ்சியாழ், குறிஞ்சி
வெறிகோ ளாவனம் வித்தல் செறிகுரற்
பைந்தினை காத்தல் செந்தே னழித்தல்
செழுங்கிழங் ககழ்தல் முழங்கிவீ ழருவியொடு
கொழுஞ்சுனை யாடல்; குறிஞ்சிக்கருப் பொருளே.

## பாலைக் கருப்பொருள்

கன்னி, விடலை காளை மீளி
இன்னகை யெயிற்றி, எயின ரெயிற்றியர்
மறவர் மறத்தியர், புறவுபருந் தெருவை
கழுகு, செந்நாய், கல்கெழு *குறும்பு,

* குறும்பூர்—எனவும் பாடம்.

குழிவறுங் கூவல், குராஅ மராஅ
* உழிஞை பாலை யோமை இருப்பை,
வழங்குகதிக் கொண்டனை செழும்பதிக் கவர்ந்தன,
பகைத்துடி, பாலையாழ், பஞ்சுரம், வெஞ்சமம்
பகற்சூறை யாடல்; பாலைக்கருப் பொருளே. உக

## முல்லைக் கருப்பொருள்

நெடுமால், குறும்பொறை நாடன் றோன்றல்
வடுவில் கற்பின் மனைவி கிழத்தி,
இடைய ரிடைச்சிய ராய ராய்ச்சியர்,
கான வாரணம், மான்முயல், பாடி,
குறுஞ்சுனை கான்யாறு, குல்லை முல்லை
நிறங்கிளர் தோன்றி பிறங்கலர்ப் பிடவம்,
கொன்றை காயா மன்றலங் குருந்தம்,
தாற்றுக்கதிர் வரகொடு சாமை முதிரை,
ஏற்றுப்பறை, முல்லை யாழ்சா தாரி
சாமை வரகு தாமுடன் வித்தல்
அவைகளை கட்ட வரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழ லூதல்
மூவின மேய்த்தல் சேவினங் தழுவல்
கழுமிய குரவையொடு கான்யா றன்றிவை
முழுதுட னாடல்; முல்லைக்கருப் பொருளே. உஉ

* உழிஞ்சில்—எனவும் பாடம்.

## மருதக் கருப்பொருள்

இந்திரன், ஊரன் பைந்தார் மகிழ்நன்
கெழுதகு கற்பிற் கிழத்தி மனைவி,
உழவ ருழத்தியர் கடையர் கடைச்சியர்,
மழலைவண் டானம் மகன்றி ஞாரை
அன்னம் போதா நன்னிறக் கம்புள்
குருகு தாரா, எருமை நீர்நாய்,
பெருகிய சிறப்பிற் பேரூர் மூதூர்,
யாறு மனைக்கிண றிலஞ்சி, தாமரை
நாறிதழ்க் கழுநீர் நறுமலர்க் குவளை,
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதம்,
செந்நெல் வெண்ணெல், அந்நெல் லரிகிணை
மன்றன் முழவம், மருதயாழ், மருதம்,
மன்றணி விழாக்கோள் வயற்களை கட்டல்
அரிதல் கடாவிட லகன்குளங் குடைதல்
வருபுன லாடல்; மருதக்கருப் பொருளே.

## நெய்தற் கருப்பொருள்

வருணன், சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பரும வல்குற் பரத்தி நுளைச்சி,
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்தியர்
அளவ ரளத்தியர், அலைகடற் காக்கை,
சுறவம், பாக்கம் பெறலரும் பட்டினம்,
உவர்நீர்க் கேணி கவர்நீர், நெய்தல்
கண்டகக் கைதை முண்டக மடம்பு,

கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்,
புலவுமீ னுப்பு விலைகளிற் பெற்றன,
நளிமீன் கோட்பறை நாவாய்ப் பம்பை,
விளரியாழ், செவ்வழி, மீனுப்புப் படுத்தல்
உணங்கவை விற்றன்மீ னுணக்கல்புள் ளோப்பல்
நெடுங்கட லாடல்; நெய்தற்கருப் பொருளே. உச

## உரிப்பொருளின் வகை

புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும்
இரங்கலும் இவற்றி னிமித்தமும் எனவாங்கு
எய்திய உரிப்பொருள் ஐயிரு வகைத்தே. உரு

## கைகோளின் வகை

அளவி லின்பத் தைந்திணை மருங்கில்
களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும். உசா

## களவொழுக்கில் நிகழும் புணர்ச்சிவகை

இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப் பாடு
பாங்கற் கூட்டம் பாங்கியிற் கூட்டமென்று
உணர்த்திய களவிற் புணர்ச்சிநால் வகைத்தே. உஎ

## கைக்கிளை நிகழ்தற்குரிய காலம்

மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப. உஅ

### கைக்கிளையின் இலக்கணம்

அதுவே,
காமஞ் சான்ற விளமை யோள்வயின்
குறிப்பறி காறுங் குறுகாது நின்று
குறிப்படு நெஞ்சொடு கூற லாகும். ௨௯

### கைக்கிளைக்குரிய தலைமக்கள்

மறையோர் மன்னவர் வணிகர்சூத் திரரெனும்
இறையோர்* தத்தமக் கெய்துமற் றதுவே. ௩௰

### கைக்கிளைக் கெய்துவதோர் வேறுபாடு

அதுவே,
மொழிந்தோர் நால்வரு மொழிந்தைந் நிலத்துறை
இழிந்தோர் தம்மு ளுயர்ந்தோரு மெய்துப. ௩௧

### இயற்கைப்புணர்ச்சி நிகழும் வகை

தெய்வந் தன்னி னெய்தவுங் கிழத்தியின்
எய்தவும் படூஉ மியற்கைப் புணர்ச்சி. ௩௨

### தெய்வப்புணர்ச்சியின் இலக்கணம்

இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி
முயற்சி யின்றி முடிவ தாகும். ௩௩

### களவிற்புணர்ச்சிக்கு எய்தாத தெய்துவித்தல்

உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியும்
கள்ளப் புணர்ச்சியுட் காதலர்க் குரிய. ௩௪

### உள்ளப்புணர்ச்சி நிகழ்தற்குக் காரணம்

பொருவிறந் தோற்குப் பெருமையு முரனும்
நன்னுதற் கச்சமு நாணமு மடனும்

---
* தமக்கே—எனவும் பாடம்.

மன்னிய குணங்க ளாதலின் முன்னர்
உள்ளப் புணர்ச்சி யுரிய தாகும். ௩௫

## மெய்யுறுபுணர்ச்சி நிகழுங்காலம்

காட்சி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பத்துங் கைவரு மெனினே
மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே. ௩௬

## களவுப்புணர்ச்சி நிகழுமிடம்

பகற்குறி யிரவுக் குறியெனும் பானமைய
புகற்சியி னமைந்தோர் புணர்ச்சிநிக ழிடனே. ௩௭

## இரவுக்குறி பகற்குறிகளின் இயல்பு

இல்வரை யிகந்தது பகற்குறி யிரவுக்குறி
இல்வரை யிகவா வியல்பிற் றாகும். ௩௮

## களவொழுக்கின்கண் நிகழும் பிரிவின்வகை

ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத் தாகும்
நிறைதரு காதன் *மறையினிற் பிரிவே. ௩௯

## ஒருவழித்தணத்தற்குக் காலவரையறையின்மை

அவற்றுள்,
ஒருவழித் தணத்தற்குப் பருவங் கூறார். ௪0

---

* மறைவயின்—எனவும் பாடம்.

### பொருள்வயிற்பிரிதலின் காலவரையறை

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்
இருதுவின் கண்ணுடைத் தென்மனார் புலவர். ௪௧

### வரைவு நிகழுங் காலம்

களவு வெளிப்படா முன்னும் பின்னும்
விளையு மெறித்தென விளம்பினர் வரைவே. ௪௨

### களவு வெளிப்படுமுன் வரைதல்

நான்குவகைப் புணர்ப்பினுந் தான்றெருண்டு
[வரைதலும்
பாங்கனிற் பாங்கியிற் றெருளுற்று வரைதலும்
களவு வெளிப்படா முன்வரைத லாகும். ௪௩

### களவு வெளிப்பட்டபின் வரைதல்

உடன்போய் வரைதலு மீண்டு வரைதலும்
உடன்போக் கிடையீ டுற்று வரைதலும்
களவுவெளிப் பட்டபின் வரைத லாகும். ௪௪

### உடன்போய் வரைதல்

அவற்றுள்,
உடன்போய் வரைத லொருவகைத் தாகும். ௪௫

### மீண்டுவந்து வரைதலின் வகை

அவண்மனை வரைதலுந் தன்மனை வரைதலும்
எனமீண்டு வரைத லிருவகைத் தாகும். ௪௬

### அறத்தொடு நிற்றற்காரணம்

ஆற்றா றஞ்சினு மவன்வரைவு மறுப்பினும்
வேற்றுவரைவு நேரினுங் காப்புக்கைம் மிகினும்
ஆற்றுறத் தோன்று மறத்தொடு நிலையே. ௪௭

### அறத்தொடு நிற்றற்குரியார்

தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்
நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு
நிற்கு மென்ப நெறியுணர்ந் தோரே. ௪௮

### தலைமகள் அறத்தொடு நிற்குங்காலம்

ஒருபுணர் வொழிந்தவற் றொருவழித் தணப்பவும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியவும்
இறைவனைச் செவிலி குறிவயிற் காணவும்
மனைவயிற் செறிப்பவும் வருத்தங் கூறின்
வினவியக் கண்ணும் வினவாக் கண்ணும்
அனநடைக் கிழத்தி யறத்தொடு நிற்கும். ௪௯

### பாங்கி அறத்தொடு நிற்குந்திறம்

முன்னிலைப் புறமொழி முன்னிலை மொழிகளிற்
சின்மொழிப் பாங்கி செவிலிக் குணர்த்தும். ௫0

### செவிலி அறத்தொடு நிற்குந்திறம்

செவிலிநற் றாய்க்குக் கவலையின் றுணர்த்தும். ௫௧

### நற்றாய் அறத்தொடு நிற்குங்காலம்

நற்றா யறத்தொடு நிற்குங் காலைக்
குரவனுந் தன்னையுங் குறிப்பி னுணர்ப. ௫உ

### அறத்தொடு நிற்றற்கு வினாநிகழ்த்துவோர்

பாங்கி தலைவியை வினவுஞ் செவிலி
பாங்கியை வினவும் பாங்கி தன்னையும்
நற்றாய் தானும் வினவுஞ் செவிலியிற்
பொற்றொடிக் கிழத்தியை யுற்று நோக்கின். ௫௩

### உடன்போக்கு நிகழ்ந்துழி அறத்தொடுநிற்பார்

ஆங்குடன் போயுழி யறத்தொடு நிற்ப
பாங்கியுஞ் செவிலியும் பயந்த *நற் றாயும். ௫௪

### கற்பின் வகை

களவின் வழிவந்த கற்பும் பொற்பமை
களவின் வழிவாராக் கற்புமென் றாங்கு
முற்படக் கிளந்த கற்பிரு வகைத்தே. ௫௫

### களவின்வழிவந்த கற்பிற்புணர்ச்சிக்கு எய்துவதோர் வேறுபாடு

அவற்றுள்,
களவின் வழிவந்த கற்பிற் புணர்ச்சி
கிளைஞரி னெய்தாக் கேண்மையு முடைத்தே
உடன்போய் வரைதலு முண்மை யான. ௫௬

---

* பயந்ததாயும் - எனவும் பாடம்.

### களவின்வழி வாராக் கற்பிற் புணர்ச்சியின்வகை

குரவரிற் புணர்ச்சி வாயிலிற் கூட்டமென்று
இருவகைத் தாகுங் கற்பிற் புணர்ச்சி. ருஎ

### தலைமகற்குக் கற்புக்காலத்து நிகழும் ஒழுக்க வேறுபாடு

மறைவிற் புணர்ச்சியு மன்றற் புணர்ச்சியும்
இறைவற் கெய்தலுண் டிருவகைக் கற்பினும். ருஅ

### ஒழுக்க மிரண்டிற்கு முரிய மகளிர்

காதற பரத்தையா காமக் கிழத்தியர்
பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியென்று
அன்னவ ருரிய ரவையிரண் டிற்கும். ருகூ

### களவிற்குரிய மகளிர்

அவற்றுள்,
காதற் பரத்தையர் களவிற் குரியர். சா0

### வதுவைக்குரிய மகளிர்

ஒழிந்தோர் மன்றற் புணர்ச்சிக் குரியர். சாக

### கற்பிற் பிரியும் பிரிவின்வகை

பரத்தையிற் பிரித லோதற்குப் படர்தல்
அருட்டகு காவலொடு தூதிற் ககறல்
உதவிக் கேக னிதியிற் கிகத்தலென்று
உரைபெறு கற்பிற் பிரிவறு வகைத்தே. சாஉ

### பரத்தையிற் பிரிவின்வகை

அயன்மனைப் பிரிவயற் சேரியி னகற்சி
புறநகர்ப் போக்கிவை புரலவலற் குரிய
பரத்தையிற் பிரியும் பருவத் தான. சாரு

### அயன்மனைப் பிரிவிற்குக் காரணம்

கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாத்
தழீஇய வயன்மனைத் தலைவன் பிரியும். சாசு

### அயற்சேரியிற் பிரிவிற்குக் காரணம்

பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையும்
இன்னியல் விழவு மேது வாக
அவனயற் சேரியி னகலு மென்ப. சாரு

### புறநகர்ப் போக்கிற்குக் காரணம்

விருந்திற் பரத்தையைப் பெருந்தேர் மிசைக்கொண்டு
இளமரக் காவின் விளையா டற்கும்
புனலா டற்கும் புறநகர்ப் போகும். சாகா

### தலைவிக்கு ஊடல் நிகழுங்காலம்

ஊட லவ்வழிக் கூடுங் கிழத்திக்கு. சாஎ

### ஊடல் தணிக்கும் வாயில்கள்

கொளைவல் பாணன் பாடினி கூத்தர்
இளையர் கண்டோ ரிருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி *யறிவர்

* யறிஞர் – என்றும் பாடம்.

காமக் கிழத்தி காதற் புதல்வன்
விருந்தாற் றுமை யென்றிவை யூடல்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்க ளாகும். கூஅ

### வேத மோதப் பிரிதல்

ஓதற் றொழிலுரித் துயர்மூ வர்க்கும். கூகூ

### மற்றைக் கல்வி பயிலப் பிரிதல்

அல்லாக் கல்வி யெல்லார்க்கு முரித்தே. எ0

### படைத்தொழில் பயிலப் பிரிதல்

படைக்கலம் பயிறலும் பகடுபிற வூர்தலும்
உடைத்தொழி லவர்க்கென வுரைத்திசி னோரே. எக

### காவற் பிரிவின்வகை

அறப்புறங் காவ லாடுகா வலெனச்
சிறப்புறு காவற் றிறமிரு வகைத்தே. எஉ

### அறப்புறங் காவற் பிரிவு

அவற்றுள்,
அறப்புறங் காவ லனைவர்க்கு முரித்தே. எங

### நாடுகாவற் பிரிவு

மற்றைக் காவல் *கொற்றவர்க் குரித்தே. எச

### தூதிற் பிரிவு

வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்கும்
தூது போதற் றொழிலுரித் தாகும் எரு

* கொற்றவற் குரித்தே—எனவும் பாடம்.

### நாடுகாவலும் தூதுபோதலும்

சிறப்புப் பெயர்பெறிற் செப்பிய விரண்டும்
உறற்குரி மரபின வொழிந்தோ ரிருவர்க்கும். எசு

### துணைவயிற் பிரிவு

உதவி யந்தண ரொழிந்தோர்க் குரித்தே. எஎ

### நால்வருணத்தார்க்குமுரிய பிரிவு

பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவும்
உரைத்த நால்வர்க்கு முரிய வாகும். எஅ

### இழிந்தோர்க்குரிய பிரிவு

இழிந்தோர் தமக்கு மிவற்றுண்மேம் பட்டவை
ஒழிந்தன வாமென மொழிந்தனர் புலவர். எகூ

### பிரியுந் தலைமகற்குரியதோ ரிலக்கணம்

கல்வி முதலா வெல்லா வினைக்கும்
சொல்லி யகறலுஞ் சொல்லா தகறலும்
உரியன் கிழவோன் பெருமனைக் கிழத்திக்கு. அ0

### இதுவுமது

சொல்லா தகலினுஞ் சொல்லும் பாங்கிக்கு. அக

### இதுவுமது

குறிப்பி னுணர்த்தும் பெறற்கரும் கிழத்திக்கு. அஉ

## தலைமகன் பிரிந்துசெல்லுந்திறம்

காலிற் சேறலுங் கலத்திற் சேறலும்
ஊர்தியிற் சேறலு நீதி யாகும். ௮௩

## அந்தணர்க் காகாததோ ரியல்பு

புலத்திற் சிறந்த புரிநூன் முதல்வர்க்குக்
கலத்திற் சேறல் கடனன் றென்ப. ௮௪

## மற்றை மூவர்க்கு மாகாததோ ரியல்பு

வலனுயர் சிறப்பின் மற்றைமூ வர்க்கும்
குலமட மாதரொடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதென மொழிப.

## தலைமகற்குப் பிரிவிடத் துரியதோர் வேறுபாடு

ஓதன் முதலா வோதிய வைந்தினும்
பிரிவோ னழுங்கற்கு முரிய னாகும். ௮௬

## செலவழுங்குதற்குரிய இடம்

இல்லத் தழுங்கலு மிடைச்சுரத் தழுங்கலும்
ஒல்லு மவற்கென வுரைத்திசி னோரே. ௮௭

## செலவழுங்குதற் காரணம்

தலைவி தன்னையுந் தன்மனந் தன்னையும்
அலமர லொழித்தற் கழுங்குவ தல்லது
செல்வத் தோன்றல் செல்லா னல்லன். ௮௮

### ஓதற்பிரிவின் காலவரையறை

அவற்றுள்,
ஓதற் பிரிவுடைத் தொருமூன் றியாண்டே. அக

### மற்றைப்பிரிவின் காலவரையறை

தூதிற் பிரிவுந் துணைவயிற் பிரிவும்
பொருள்வயிற் பிரிவு மோர்யாண் டுடைய. கூ0

### தலைவன் தலைவியைப் பிரியலாகாக் காலம்

பூத்த காலைப் புனையிழை மனைவியை
நீரா டியபின் னீரா று நாளும்
கருவயிற் றுறூஉங் கால மாதலின்
பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன். கூக

### ஓதற்குப் பிரிந்தோன் செய்யலாகாதன

ஓதற் ககன்றோ னொழிந்திடை
போதற் கியையவும் புலம்பவும் பெறாஅன். கூஉ

### தூதுந் துணைமையுங் காரணமாகப் பிரிந்தோனுக் காவதோர் வேறுபாடு

தூதுந் துணைமையு மேது வாகச்
சென்றோ னவ்வினை யின்றுநீட் டித்துழிப்
புலந்து பாசறைப் புலம்பவும் பெறுமே. கூங

### கற்புக்காலத்துத் தலைமகட் குரியதொழில்

பூத்தமை சேடியிற் புரவலற் குணர்த்தலும்
நீத்தமை பொருது நின்று இழிவோனைப்

பழிக்குங் காமக் கிழத்தியைக் கழறலுங்
கிழவோற் கழறலும் வழிமுறை மனைவியைக்
கொழுநனொடு வந்தெதிர் கோடலு மவனொடும்
பாங்கொடு பரத்தையைப் பழித்தலு நீங்கிப்
புறநகர்க் கணவனொடு போகிச் செறிமலர்ச்
சோலையுங் காவு மாலையங் கழனியும்
மாலைவெள் ளருவியு மலையுங் கானமும்
கண்டுவிளை யாடலும் கடும்புனல் யாறும்
வண்டிமிர் கமல வாவியுங் குளனும்
ஆடிவிளை யாடலுங் கூடுங் கிழத்திக்கு. கஎ

## பாணற் குரியதொழில்

வாயில் வேண்டலும் வாயினேர் வித்தலும்
சேயிழை யூட றீர்த்தலும் போயுழி
அவணலந் தொலைவுகண் டழுங்கலு மவன்வயின்
செல்ல விரும்பலுஞ் சென்றவற் குணர்த்தலும்
சொல்லிய கூற்றெனச் சொல்லலுங் கிழவோன்
வரவு மீண்டுவந் தரிவைக் குணர்த்தலும்
அணிநலம் *பெருமை யறியான் போன்றவட்
பணிவொடு விளுதலும் பாணற் குரிய. கஅ

## விறலிக் குரியதொழில்

செலவிற் றேற்றலும் புலவியிற் றணித்தலும்
வாயில் வேண்டலும் வாயினேர் வித்தலும்
தெரியிழை விறலிக் குரிய வாகும். கக

* பெற்றமை—எனவும் பாடம்.

## கூத்தர்க் குரியதொழில்

செல்வம் வாழ்த்தலு நல்லறிவு கொளுத்தலும்
கலனணி புணர்தலுங் காமநுகர் புணர்த்தலும்
புலவி முதிர்காலைப் புலங்கொள வேதுவிற்
றேற்றலுஞ் சேய்மை செப்பலும் பாசறை
*மேற்சென் றுரைத்தலு மீண்டுவர வுணர்த்தலும்
கூற்றரு மரபிற் கூத்தர்க் குரிய. கஎ

## இளையோர்க் குரியதொழில்

மடந்தையை வாயில் வேண்டலும் வாயில்
உடன்படுத் தலுமவ ளூட றீர்த்தலும்
†கொற்றவற் குணர்த்தலுங் குற்றேவல் செய்தலும்
சென்றுமுன் வரவு செப்பலு மவன்றிறம்
ஒன்றிநின் றுரைத்தலும் வினைமுடி புரைத்தலும்
வழியியல்பு கூறலும் வழியிடைக் கண்டன
மொழிதலு மிளையோர் ‡தொழிலென மொழிப. கஅ

## கண்டோர்க் குரியதொழில்

தீதுடைப் புலவி தீர்த்தலு மவன்வரல்
காதலிக் குரைத்தலுங் கண்டோர்க் குரிய. கக

---

* மேற்சென்றுணர்த்தலும் மீண்டு—எனவும் பாடம்.

† கொற்றவற் காத்தலும்—எனவும் பாடம்.

‡ தொழிலெனற்குரிய—எனவும் பாடம்.

## பார்ப்பனப்பாங்கற் குரியதொழில்

இளமையும் யாக்கையும் வளமையு மேனவும்
நிலையாத் தன்மை நிலையெடுத் துரைத்தலும்
செலவழுங்கு வித்தலுஞ் செலவுடன் படுத்தலும்
பிறவு மெல்லா மறையோற் குரிய. கOO

## சூத்திரப்பாங்கற் குரியதொழில்

நன்மையி னிறுத்தலுந் தீமையி னகற்றலும்
சொன்னவை பிறவுஞ் சூத்திரற் குரிய. கOக

## பாகற் குரியதொழில்

சேயிழைக் கிழத்தியை வாயில் வேண்டலும்
வாயினேர் வித்தலும் வயங்குதுனி தீர்த்தலும்
வினைமுடித் ததன்பின் வியன்பதி சேய்த்தென
இனைவோற் றேற்றலும் பாகற் கியல்பே. கOஉ

## பாங்கிக் குரியதொழில்

பிரிவுழி விலக்கலும் பிரிவுடன் படுத்தலும்
*பிரிவுழித் தேற்றலும் பிரிவுழி யழுங்கலும்
பிறவு முரிய விறைவனைப் பாங்கிக்கு. கOங

## செவிலிக்கும் அறிவர்க்கும் உரியதொழில்

முன்வரு நீதியு முலகியன் முறைமையும்
பின்வரும் பெற்றியும் பிறவு மெல்லாம்

---

* பிரிந்துழித் தேற்றலு மிருந்துட னிரங்கலும் - எனவும் பாடம்.

தெற்றெனக் கூறல் செவிலித் தாய்க்கும்
உற்ற வறிவர்க்கு முரியன வாகும். க0ச

### காமக் கிழத்தியர்க் குரியதொழில்

குடிப்பிறந் தோரை வடுப்படுத் துரைத்தலும்
மனைவியைப் பழித்தலும் வாடா வூடலுள்
*அனையவற் கழறலு மனைவிக் கமைந்த
ஒழுக்கமுங் காமக் கிழத்தியர்க் குரிய. க0ரு

### பரத்தையர்க் குரியதொழில்

கிழவோன் தன்னையுங் கிழத்தி தன்னையும்
இகழ்தலுந் தம்மைப் புகழ்தலு நிகழ்பொருள்
காத்தலும் பரத்தையர் கடனென மொழிப. க0சு

### இதுவுமது

பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தலும்
தம்மைப் யிகழ்தலுந் தம்முளுங் கூறுப க0எ

### இளையோர் இலக்கணம்

இளையர் கிழவோற் கிரவும் பகலும்
களைத லில்லாக் கவசம் போல்வார். க0அ

### பாங்கரது தொழில்

இருவகைப் பாங்கரு மொருபெருங் குரிசிற்கு

* தலைவற் கழறலும், அனையவட் கழறலும்—என வும் பாடங்கள்.

இன்னுயிர்த் துணையா விருபெருங் குரவரும்
தன்னை யளித்த தகைமை யோரே. ௧0௯

## தோழியினது தொழில்

தோழி செவிலி மகளாய்ச் சூழ்தலோடு
உசாத்துணை யாகி யசாத்தணி வித்தற்கு
உரிய காதன் மருவிய துணையே. ௧௧0

## செவிலியினது இலக்கணம்

செவிலி நற்றாய் தோழி யாகி
அவல நீக்கி யறிவுமா சாரமும்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே. ௧௧௧

## அறிவரது இலக்கணம்

அறிவர் கிழவோன் கிழத்தியென் றிருவர்க்கும்
உறுதி மொழிந்த வுயர்பெருங் குரவர். ௧௧௨

## காமக்கிழத்தியர் இலக்கணம்

ஒருவன் தனக்கே யுரிமை பூண்டு
வருகுலப் பரத்தையர் மகளி ராகிக்
காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர். ௧௧௩

## காதற்பரத்தையர் இலக்கணம்

யாரையு நயவா வியல்பிற் சிறந்த
சேரிப் பரத்தையர் மகளி ராகிக்
காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர். ௧௧௪

### காதற்பரத்தையர்க் குரியதோர் சிறப்பு

*அவருளும் வரைதற் குரியோ ருளரே.* ககரு

### தலைவனும் தலைவியும் துறவறங்காத்தல்

*மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து*
*மிக்க காம வேட்கை தீர்ந்துழித்*
*தலைவனுந் தலைவியுந் தம்பதி நீங்கித்*
*தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்ப.* ககசு

அகத்திணையியல் முற்றிற்று

## களவியல்

### களவின் இலக்கணம்

உளமலி காதற் களவெனப் படுவது
ஒருநான்கு வேதத் திருநான்கு மன்றலுள்
யாழோர் கூட்டத் தியல்பின தென்ப. கசஎ

### கைக்கிளையின் வகை

காட்சி யையந் துணிவுகுறிப் பறிவென
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை. கசஅ

### காட்சியின் இலக்கணம்

புணர்ப்பதும் பிரிப்பது மாகிய பால்களுள்
புணர்க்கும் பாலிற் பொருவிறந் தொத்த
கறைவேற் காளையுங் கன்னியுங் காண்ப
இறையோ னுயரினுங் குறைவின் றென்மனார். கசகூ

### ஐயநிகழ்தற் காரணம்

மடமா னோக்கி வடிவுங் கண்ட
இடமுஞ் சிறந்துழி யெய்துவ தையம். கஉ0

### துணிவுநிகழ்தற் காரணம்

எழுதிய வல்லியுந் தொழில்புனை கலனும்
வாடிய மலருங் கூடிய வண்டும்

நடைபயி லடியும் புடைபெயர் கண்ணும்
அச்சமும் பிறவு மவன்பா னிகழும்
கச்சமி லையங் கடிவன வாகும். கஉக

### குறிப்பறிதற் காரணம்

அரிவை நாட்ட மகத்துநிகழ் வேட்கை
தெரிய வுணர்த்துங் குரிசிற் கென்ப. கஉஉ

### களவிற்குரிய கிளவித்தொகை

இயற்கைப் புணர்ச்சி வன்புறை தெளிவே
பிரிவுழி மகிழ்ச்சி பிரிவுழிக் கலங்கல்
இடந்தலைப் பாடு பாங்கற் கூட்டம்
பாங்கிமதி யுடன்பாடு பாங்கியிற் கூட்டம்
பாங்கமை பகற்குறி பகற்குறி யிடையீடு
இரவுக் குறியே யிரவுக்குறி யிடையீடு
வரைவு வேட்கை வரைவு கடாதல்
ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றெருபதி னேழும்
களவிற் குரிய கிளவித் தொகையே. கஉங

## க. இயற்கைப் புணர்ச்சி

### இயற்கைப்புணர்ச்சியின் இலக்கணம்

தெய்வம் புணர்ப்பச் சிந்தைவே றாகி
எய்துங் கிழத்தியை யிறையோ னென்ப. கஉச

### இயற்கைப்புணர்ச்சியின் விரி

கலந்துழி மகிழ்தலு நலம்பா ராட்டலும்
ஏற்புற வணிதலு மென்னுமிம் மூன்றும்
போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே. உகரு

### தலைவியிற் புணர்ச்சி வகை

வேட்கை யுணர்த்தன் மறுத்த லுடன்படல்
கூட்டமென் றிறைவியிற் கூட்டநால் வகைத்தே.

### தலைவியிற் புணர்ச்சி விரி

இரந்துபின் னிற்றற் கெண்ணலு மிரந்து
பின்னிலை நிற்றலு முன்னிலை யாக்கலும்
மெய்தொட்டுப் பயிறலும் பொய்பா ராட்டலும்
இடம் பெற்றுத் தழாஅலும் வழிபாடு மறுத்தலும்
இடையூறு கிளத்தலு நீடுநினைந் திரங்கலும்
மறுத்தெதிர் கோடலும் வறிதுநகை தோற்றலும்
முறுவற்குறிப் புணர்தலு முயங்குத லுறுத்தலும்
புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் பிறவும்
உணர்த்திய தலைவியிற் புணர்ச்சியின் விரியே. கஉஎ

## உ. வன்புறை

### வன்புறையின் வகை

ஐயந் தீர்த்தல் பிரிவறி வுறுத்தலென்று
எய்திய வன்புறை யிருவகைத் தாகும். கஉஅ

### வன்புறையின் விரி

அணிந்துழி நாணிய துணர்ந்துதெளி வித்தலும்
பெருநயப் புரைத்தலுந் தெய்வத்திறம் பேசலும்,
பிரியே னென்றலும் பிரிந்துவரு கென்றலும்
இடமணித் தென்றலு மென்றிவை யாறும்
மடனறத் தெரிந்த வன்புறை விரியே. ௧௨௯

## ௩. தெளிவு

### தெளிவின் இலக்கணம்

தலைவன் மாற்றந் தலைவி தேற்றந்
தெளிவா மென்பர் தெளிந்திசி னோரே. ௧௩௦

## ௪. பிரிவுழி மகிழ்ச்சி

### பிரிவுழிமகிழ்ச்சியின் விரி

செல்லுங் கிழத்தி செலவுகண் டுளத்தொடு
சொல்லலும் பாகனொடு சொல்லலு மிரண்டும்
பிரிவுழி மகிழ்ச்சியின் விரியெனக் கொளலே. ௧௩௧

## ௫. பிரிவுழிக் கலங்கல்

### பிரிவுழிக்கலங்கலின் வகை

மருளுற் றுரைத்த றெருளுற் றுரைத்தலென்று
இருவகைத் தாகும் பிரிவுழிக் கலங்கல். ௧௩௨

### பிரிவுழிக்கலங்கலின் விரி

ஆய வெள்ளம் வழிபடக் கண்டிது
மாயமோ வென்றலும் வாயில்பெற் றுய்தலும்

பண்புபா ராட்டலும் பயந்தோர்ப் பழிச்சலும்
கண்படை பெறாது கங்குலோ தலுமெனும்
ஐந்தும் பிரிவுழிக் கலங்கலின் விரியே. ௧௩௩

## ௬. இடந்தலைப்பாடு

### இடந்தலைப்பாட்டின் வகை

தெய்வந் தெளிதல் கூடல் விடுத்தலென்று
இவ்வோர் மூவகைத் திடந்தலைப் பாடே. ௧௩௪

### இடந்தலைப்பாட்டின் விரி

தந்த தெய்வந் தருமெனச் சேறலும்
முந்துறக் காண்டலு முயங்கலும் புகழ்தலும்
உடன்புண ராயத் துய்த்தலு மெனவைந்து
இடந்தலைப் பாட்டி னிலக்கண விரியே. ௧௩௫

## ௭. பாங்கற் கூட்டம்

### பாங்கற் கூட்டத்தின் வகை

சார்தல் கேட்டல் சாற்ற லெதிர்மறை
நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென்று
ஆங்கெழு வகைத்தே பாங்கற் கூட்டம். ௧௩௬

### பாங்கற்கூட்டத்தின் விரி

தலைவன் பாங்கனைச் சார்தலும் பாங்கன்
தலைவனை யுற்றது வினாதலும் தலைவன்
உற்ற துரைத்தலும், கற்றறி பாங்கன்

கழறலும் கிழவோன் கழற்றெதிர் மறுத்தலும்
கிழவோற் பழித்தலும் கிழவோன் வேட்கை
தாங்கற் கருமை சாற்றலும் பாங்கன்
தன்மனத் தழுங்கலும் தலைவனே டழுங்கலும்
எவ்விடத் தெவ்வியற் றென்றலும் அவணஃது
இவ்விடத் திவ்வியற் றென்றலும் பாங்கன்
இறைவனைத் தேற்றலுங் குறிவழிச் சேறலும்
இறைவியைக் காண்டலும் இகழ்ந்ததற் கிரங்கலும்
தலைவனை வியத்தலுந் தலைவியை வியத்தலும்
தலைவன் றனக்குத் தலைவிநிலை கூறலும்
தலைவன் சேறலுந் தலைவியைக் காண்டலும்
கலவியின் மகிழ்தலும் புகழ்தலும் தலைவியைப்
பாங்கியொடு வருகெனப் பகர்தலும் பாங்கிற்
கூட்டலும் என்றீங் கீட்டுநா லாறும்
காட்டிய பாங்கற் கூட்டத்து விரியே. கரு௭

## ௮. பாங்கிமதியுடன்பாடு

### பாங்கிமதியுடன்பாட்டின் வகை

முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரு முள்வழி யவன்வர வுணர்தலென்று
ஒருமூன் று வகைத்தே பாங்கிமதி யுடன்பாடு. கரு௮

### முன்னுற வுணர்தலின் வகை

நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியும்

செய்வினை மறைப்புஞ் செலவும் பயில்வுமென் று
இவ்வகை யேழினு மையமுற் றோர்தலும்
அவ்வகை *தன்னு லையந் தீர்தலும்
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருட் சொல்லினு டலுமென
முன்னுற வுணர்தன் மூன்று கும்மே. ௧௩௯

## குறையுறவுணர்தலின் வகை

பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுத்தோன்
கண்ணியுந் தழையு மேந்தி நண்ணி
ஊர்பெயர் கெடுதியோ டொழிந்தவும் வினவுழி
யாரே யிவர்மனத் தெண்ணமி யாதெனத்
தேர்தலும் எண்ணந் தெளிதலும் எனவாங்கு
ஓரிரண் டாகுங் குறையுற வுணர்தல். ௧௪0

## இருவரு முள்வழி அவன்வர வுணர்தலின் வகை

கையுறை யேந்திவந் தவ்வகை வினவுழி
எதிர்மொழி கொடுத்தலும் இறைவனை நகுதலும்
மதியி னவரவர் மனக்கருத் துணர்வுமென் று
இருவரு முள்வழி அவன்வர வுணர்தல்
ஒருமூன் றுகுந் தெரியுங் காலே. ௧௪௧

* தம்மால் - எனவும் பாடம்.

3

### பாங்கிமதியுடன்பாட்டின் விரி

ஈங்ஙன *மியம்பிய விருநான்கு கிளவியும்
பாங்கி மதியுடன்* பாட்டதன் விரியே. ௧௪௨

## ௬. பாங்கியிற்கூட்டம்

### பாங்கியிற்கூட்டத்தின் வகை

இரந்துபின் னிற்றல் சேட்படை மடற்கூற்று
மடல்விலக் குடன்படல் மடற்கூற் றொழிதல்
குறைநயப் பித்த னயத்தல் கூட்டல்
கூட லாயங் கூட்டல் வேட்டலென் று
ஈரறு வகைத்தே யிகுளையிற் கூட்டம் ௧௪௩

### இரந்து பின்னிற்றலும் சேட்படையும்

தலைவ னுட்கோள் சாற்றலும் பாங்கி
குலமுறை கிளத்தலுந் தலைவன் தலைவி
தன்னை யுயர்த்தலு நன்னுதற் பாங்கி
அறியாள் போன்று வினாதலு மிறையோன்
இறைவி தன்மை இயம்பலும் பாங்கி
தலைவி யருமை சாற்றலுந் தலைவன்
இன்றியமை யாமை யியம்பலும் பாங்கி
நின்குறை நீயே சென்றுரை யென்றலும்
பாங்கியைத் தலைவன் பழித்தலும் பாங்கி

* கூறிய, உடம்பாட்டது - எனவும் பாடங்கள்.

## களவியல்

பேதைமை யூட்டலுங் காதலன் தலைவி
மூதறி வுடைமை மொழிதலும் பாங்கி
முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறலும்
தன்னிலை தலைவன் சாற்றலும் பாங்கி
உலகிய லுரைத்தலுந் தலைமகன் மறுத்தலும்
பாங்கி யஞ்சியச் சுறுத்தலு மாங்கவன்
கையுறை புகழ்தலுந் தையல் மறுத்தலும்
ஆற்ரு நெஞ்சினே டவன்புலத் தலுமவள்
ஆற்றுவித் தகற்றலு மாகுநா லைந்தும்
இரந்துபின் னிற்றற்குஞ் சேட்படுத் தற்கும்
பொருந்துவ வென்மனுர் தெரிந்திசி னேரே.

## மடற்கூற்றும் மடல்விலக்கும்

இரந்து குறைபெருது வருந்திய கிழவோன்
மடலே பொருளென மதித்தலும் பாங்கிக்கு
உலகின் மேல்வைத் துரைத்தலு மதனைத்
தன்மேல் வைத்துச் சாற்றலும் பாங்கி
தலைமக ளவயவத் தருமை சாற்றலும்
தலைமகன் தன்னைத் தானே புகழ்தலும்
அலர்முலைப் பாங்கி யருளியல் கிளத்தலும்
கொண்டுநிலை கூறலு மென்றிவை யேழும்
மடற்கூற் றிற்கும் மடல்விலக் கிற்கும்
கடவ வென்மனுர் கற்றறிந் தோரே. கசஙி

## *குறைநேர்தலும் மடற்கூற் றெழிதலும்

தலைவி யிளமைத் தன்மை பாங்கி
தலைவற் குணர்த்தலுந் தலைவன் தலைவி
வருத்திய வண்ண முரைத்தலும் பாங்கி
செவ்வி யருமை செப்பலுந் தலைவன்
செவ்வி யெளிமை செப்பலும் பாங்கி
என்னை மறைப்பி னெளிதென நகுதலும்
அந்நகை பொறாஅ தவன்புலம் பலுமவள்
தேற்றலுங் கையுறை யேற்றலுங் கிழவோன்
ஆற்றலு மென்னு மவ்வொன் பானும்
குறைநேர் தற்கு(ம்) மடற் கூற்றொழி தற்கும்
முறைமையி னுரிய மூன்னுங் காலே.

## குறைநயப்பித்தலும், மறுத்தலும்

இறைவன் தனக்குக் குறைநேர் பாங்கி
இறைவிக் கவன்குறை யுணர்த்தலு மிறைவி
அறியாள் போன்று குறியாள் கூறலும்
பாங்கி யிறையோற் கண்டமை பகர்தலும்
பாங்கியைத் தலைவி மறைத்தலும் பாங்கி
என்னை மறைப்ப தென்னெனத் தழாஅலும்
கையுறை புகழ்வுமென் றிவ்விரு மூன்றும்
மெலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
வலிதாகச் சொல்லி மறுத்தற்கு முரிய.

---

* குறைநேர்தல் - உடன்படல்.

## துறைநயப்பித்தலும், நயத்தலும்

தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தலும்
மறுத்தற் கருமை மாட்டலுந் தலைவன்
குறிப்புவே றாக நெறிப்படக் கூறலும்
தலைவியை முனிதலுந் தலைவி பாங்கி
தன்னை முனிதலுந் தன்கைக் கையுறை
ஏற்றலும் எனமுறை சாற்றிய ஆறும்
வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
மெலிதாகச் சொல்லி *மேவற்கு முரிய. கசஅ

## கூட்டல், கூடல், ஆயங்கூட்டல், வேட்டல்

இறைவி கையுறை யேற்றமை பாங்கி
இறைவற் குணர்த்தலுங் குறியிடங் கூறலும்
குறியிடத் திறைவியைக் கொண்டு சேறலும்
குறியிடத் துய்த்து நீங்கலு மிறையோன்
இடத்தெதிர்ப் படுதலு மியைதலும் புகழ்தலும்
விடுத்தலும் பாங்கி மெல்லியற் சார்ந்து
கையுறை காட்டலு மையுறை கண்ணியைப்
பாங்கிற் கூட்டலு நீங்கித் தலைவற்கு
ஓம்படை சாற்றலு முலகியன் மேம்பட
விருந்து விலக்கலும் பெருந்தகை விருந்திறை
விரும்பலும் †என்னத் தெரிந்தபன் மூன்றும்
கூட்டன் முதலா வேட்ட லீறாப்
பாங்கிக்கு வகுத்த நான்கிற்கு முரிய. கசகூ

---

* மேவல் - நயத்தல். † எனமுறை-எனவும் பாடம்.

### பாங்கியிற் கூட்டத்து விரி

அற்றமில் சிறப்பினிவ் வறுபத் தொன்றும்
குற்றமில் பாங்கியிற் கூட்டத்து விரியே. கடு௦

## க௦. பகற்குறி

### பகற்குறியின் வகை

கூட்டல் கூடல் பாங்கிற் கூட்டல்
வேட்டலென் றொருநால் வகைத்தே பகற்குறி. கடுக

### பகற்குறியின் விரி

குறியிடங் கூறன் முதலாப் பெறலரும்
விருந்திறை விரும்ப லீறாப் பொருந்தப்
பகர்ந்தபன் னிரண்டும் பகற்குறி விரியே. கடுஉ

### ஒருசார் பகற்குறி வகை

இரங்கல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென் று
ஒருங்கிய மூவகைத் தொருசார் பகற்குறி. கடுங

### ஒருசார்பகற்குறி விரி

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்
பொழுதுகண் டிரங்கலும் பாங்கி புலம்பலும்
தலைவ னீடத் தலைவி வருந்தலும்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி

முன்னிலைப் புறமொழி மொழிதலு மின்னுயிர்ப்
பாங்கியொடு பகர்தலும் பாங்கியச் சுறுத்தலும்
நீங்கற் கருமை தலைவிக்கினைந் திரங்கலும்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தலும்
முன்னிலைப் புறமொழி மொழிந்தறி வுறுத்தலும்
முன்னின் றுணர்த்தலு முன்னின் றுணர்த்தி
ஓம்படை சாற்றலு மேம்படு கிழவோன்
தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலும்
என்றவீ ரேழும் எல்லுக்குறி விரியே. கடு௫

## கக. பகற்குறி யிடையீடு

### பகற்குறி யிடையீட்டின் வகை

விலக்கல் சேறல் கலக்கமென் றுங்கு
இகப்பின்மூ வகைத்தே பகற்குறி யிடையீடு. கடு௬

### பகற்குறி யிடையீட்டின் விரி

இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலும்
இறைவியைக் குறிவரல் விலக்கலு மிறைமகள்
ஆடிட நோக்கி யழிதலும் பாங்கி
ஆடிடம் விடுத்துக்கொண் டகறலும் பின்னாள்
நெடுந்தகை குறிவயி *னீடுநின் றிரங்கலும்
வறுங்கள நாடி மறுகலுங் குறுந்தொடி

* நீடுசென் று—எனவும் பாடம்.

வாழூர் நோக்கி மதிமயங் கலுமெனும்
எழும் பகற்குறி யிடையீட்டு விரியே.

## கஉ. இரவுக்குறி

### இரவுக்குறியின் வகை

வேண்டல் மறுத்த லுடன்படல் கூட்டல்
கூடல்பா ராட்டல் பாங்கிற் கூட்டல்
உயங்க னீங்கலென் றொன்பது வகைத்தே
இயம்பிப் போந்த இரவுக் குறியே.

### இரவுக்குறியின் விரி

இறையோ னிருட்குறி வேண்டலும் பாங்கி
நெறியின தருமை கூறலு மிறையோன்
நெறியின தெளிமை கூறலும் பாங்கி
அவனாட் டணியியல் வினாதலுங் கிழவோன்
அவனாட் டணியியல் வினாதலு மவற்குத்
தன்னாட் டணியியல் பாங்கி சாற்றலும்
இறைவிக் கிறையோன் *குறையறி வுறுத்தலும்
நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தலும்
நேரிழை பாங்கி யொடுநேர்ந் துரைத்தலும்
நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தலும்
†குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதலும்
இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தலும்

---

* குறிப்பறி, குறியறி.
† குறியிடம் எனவும் பாடங்கள்.

அவட்கொண்டு சேறலுங் குறியுய்த் தகறலும்
வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதலும்
பெருமக ளாற்றின தருமைநினைந் திரங்கலும்
புரவலன் றேற்றலும் புணர்தலும் புகழ்தலும்
இறைமக ளிறைவனைக் குறிவிலக் கலுமவன்
இறைவியை யில்வயின் விடுத்தலு மிறைவியை
*எய்திப் பாங்கி கையுறை காட்டலும்
இற்கொண் டேகலும் பிற்சென் றிறைவனை
வரவு விலக்கலும் பெருமகன் மயங்கலும்
தோழி தலைமக டுயர்கிளந்து விடுத்தலும்
திருமகட் புணர்ந்தவன் சேறலு மென்றாங்கு
இருபத் தேழு மிரவுக்குறி விரியே. கரு௮

## கரு. இரவுக்குறி யிடையீடு

### இரவுக்குறி யிடையீட்டின் வகை

அல்லகுறி வருந்தொழிற் கருமையென் றாங்கு
†எல்லிக்குறி யிடையீ டிருவகைத் தாகும். கரு௯

### அல்லகுறி

இறைவிக் கிகுளை யிறைவர வுணர்த்துழித்
தான்குறி மருண்டமை தலைவியவட் குணர்த்தலும்
பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பலும்
புலந்தவன் போதலும் புலந்தபின் வறுங்களம்

*எய்திய-எனவும், †எல்லுக்குறி--எனவும் பாடங்கள்.

தலைவிகண் டிரங்கலுந் தன்றுணைக் குரைத்தலும்
தலைமக ளவலம் பாங்கி தணித்தலும்
இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றலும்
இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றலும்
அவள்குறி மருண்டமை யவளவற் கியம்பலும்
அவன்மொழிக் கொடுமைசென் றவளவட் கியம்பலும்
என்பிழைப் பன்றென் *றிறைவிநோ தலுமென
ஒன்றுபன் னொன்றும் அல்லகுறிக் குரிய. கசு0

## வருந்தொழிற் கருமை

தாயு நாயு மூருந் துஞ் சாமை
காவலர் கடுகுத னிலவுவெளிப் படுதல்
கூகை குழறுதல் கோழிகுரற் காட்டுதல்
ஆகிய ஏழும் அல்லகுறித் தலைவன்
வருந்தொழிற் கருமை †பொருந்துத லுரிய. கசுக

## இரவுக்குறியிடையீட்டின் விரி

இரட்டியிவ் வாறு செப்பிய வொன்பதிற்று
இரட்டியு மிரவுக்குறி யிடையீட்டு விரியே. கசுஉ

## கச. வரைதல் வேட்கை

## வரைதல் வேட்கை வகை

அச்ச மூவர்த்த லாற்று மையென

* இறைமகள் நோதலும்—எனவும் பாடம்.
‡ பொருந்தற் குரிய—எனவும் பாடம்.

மெச்சிய வரைதல் வேட்கையெழு வகைத்தே. ௧௬௩

## வரைதல்வேட்கையின் விரி

பருவரல் வினவிய பா
அருமறை செவிலி அறிந்தமை கூறலும்
தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலும்
தலைமக னூர்க்குச் செலவொருப் படுதலும்
பாங்கி இறைவனைப் பழித்தலும் பூங்கொடி
இறையோன் றன்னைநொந் தியற்பட மொழிதலும்
*கனவுநலி புரைத்தலுங் †கவினழி புரைத்தலும்
தன்றுயர் தலைமகற் குரைத்தல் வேண்டலும்
‡துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லலும்
அலர்பார்த் துற்ற வச்சக் கிளவியும்
ஆறுபார்த் துற்ற வச்சக் கிளவியும்
காம மிக்க கழிபடர் கிளவியும்
தன்னுட் கையா றெய்திடு கிளவியும்
நெறிவிலக்கு வித்தலுங் குறிவிலக்கு வித்தலும்
வெறிவிலக்கு வித்தலும் பிறவிலக்கு வித்தலும்
குரவரை வரைவெதிர் கொள்ளுவித் தலுமென
உரைபெற வகுத்த வொன்பதிற் றிரட்டியும்
வரைதல் வேட்கை விரியெனப் படுமே. ௧௬௪

* நலியு; † அழிவு; ‡ துன்புறல்
-எனவும் பாடங்கள்.

## கரு. வரைவு கடாதல்

### வரைவு கடாதலின் வகை

*பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தலென்று*
*ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்.* கசுரு

### வரைவு கடாதலின் விரி

*வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலும்*
*அலரறி வுறுத்தலுந் தாயறி வுணர்த்தலும்*
*வெறியச் சுறுத்தலும் பிறர்வரை வுணர்த்தலும்*
*வரைவெதிர் வுணர்த்தலும் வரையுநா ளுணர்த்தலும்*
*அறிவறி வுறுத்தலுங் குறிபெயர்த் திடுதலும்*
*பகல்வரு வானை யிரவுவரு கென்றலும்*
*இரவுவரு வானைப் பகல்வரு கென்றலும்*
*பகலினு மிரவினும் பயின்றுவரு கென்றலும்*
*பகலினு மிரவினு மகலிவ ணென்றலும்*
*உரவோ னாடு மூருங் குலனும்*
*மரபும் புகழும் வாய்மையுங் கூறலும்*
*ஆறுபார்த் துற்ற வச்சங் கூறலும்*
*ஆற்றுத் தன்மை யாற்றக் கூறலும்*
*காவல்மிக வுரைத்தலுங் காமமிக வுரைத்தலும்*
*கனவுநலி புரைத்தலுங் கவினழி புரைத்தலும்*
*எனமுறை நாடி யியம்பிய விருபதும்*
*வரைவு கடாதல் விரியெனப் படுமே.* கசுசு

## ௧௬. ஒருவழித்தணத்தல்

### ஒருவழித்தணத்தலின் வகை

செலவறி வுறுத்தல் செலவுடன் படாமை
செலவுடன் படுத்தல் செலவுடன் படுதல்
சென்றுழிக் கலங்க றேற்றியாற் றுவித்தல்
வந்துழி நொந்துரை யென்றெழு வகைத்தே
ஒன்றக் கூறிய வொருவழித் தணத்தல். ௧௬௭

### ஒருவழித்தணத்தலின் விரி

தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலும்
மென்சொற் பாங்கி விலக்கலுந் தலைவன்
நீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலும்
தலைவிக் கவன்செல வுணர்த்தலுந் தலைவி
நெஞ்சொடு புலத்தலுஞ் சென்றோ னீடலிற்
காம மிக்க கழிபடர் கிளவியும்
கோற்றொடிப் பாங்கி யாற்றுவித் தலுமவன்
வந்தமை யுணர்த்தலும் வந்தோன் றன்னொடு
நொந்து வினாதலும் வெந்திறல் வேலோன்
பாங்கியொடு நொந்து வினாதலும் பாங்கி
இறைவியை யாற்றுவித் திருந்த அருமை
கூறலு மென்னும் ஆறிரு கிளவியும்
ஒருவழித் தணத்தலின் விரியெனப் படுமே. ௧௬௮

## ௧எ. வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவு

### வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவின் வகை

*பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை*
*பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்*
*பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை*
*வரும்வழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்று*
*ஒருமையிற் கூறிய ஒன்பது வகைத்தே*
*வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவே.* ௧௬௧

### வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவின் விரி

*என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றலும்*
*நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றலும்*
*நீடே னென்றவ னீங்கலும் பாங்கி*
*ஓரிடக் கண்ணிக் கவன்செல வுணர்த்தலும்*
*பூங்குழை யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற்*
*சொல்லலுந் தலைவி கொடுஞ்சொற் சொல்லலும்*
*வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும்*
*பருவங் கண்டு பெருமகள் புலம்பலும்*
*இகுளைவம் பென்றலு மிறைமகண் மறுத்தலும்*
*அவர்தூ தாகிவந் தடைந்ததிப் பொழுதெனத்*
*துணைவி சாற்றலும் பிணைவிழி யாற்றலும்*
*அவனவட் புலம்பலு மவன்வருங் காலைப்*
*பாகன் றன்னொடு மேகந் தன்னொடும்*
*சோகங் கொண்டவன் சொல்லலும் பாங்கி*

வலம்புரி கேட்டவன் வரவறி *வுறுத்தலும்
வலம்புரி கிழத்தி வாழ்த்தலும் வந்துழி
நினைத்தமை †வினுதலு நினைத்தமை செப்பலும்
அனைத்தகை யவளை யாற்றுவித் திருந்தமை
பாங்கிகூ றலுமென வாங்கெழு மூன்றும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவின்
விரியென விளம்பினர் ‡தெரிமொழிப் புலவர். ௬௭0

களவியல் முற்றிற்று

---

* உணர்த்தலும்: † வினவலும்; ‡ தெரிபுணர்ந் தோரே-எனவும் பாடங்கள்.

# வரைவியல்

## வரைவின் இலக்கணம்

வரைவெனப் படுவ துரவோன் கிழத்தியைக்
குரவர் முதலோர் கொடுப்பவுங் கொடாமையும்
கரணமொடு புணரக் கடியயர்ந்து கொளலே. கஎக

## வரைவிற்குரிய கிளவித்தொகை

வரைவு மலிவே அறத்தொடு *நிற்றலென்று
உரையமை யிரண்டும் வரைவிற் குரிய
கிளவித் தொகையெனக் கிளந்தனர் புலவர். கஎஉ

## க. வரைவுமலிதல்

### வரைவுமலிதலின் வகை

வரைவுமுயல் வுணர்த்தல் வரைவெதிர் வுணர்த்தல்
வரைவறிந்து மகிழ்தல் பராவல்கண் டுவத்தலென்று
ஒருநால் வகைத்தே வரைவு மலிதல். கஎஙு

### வரைவு மலிதலின் விரி

காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி
காதலிக் குணர்த்தலுங் காதலி நற்றாய்
உள்ள மகிழ்ச்சி யுள்ளலும் பாங்கி

* நிலையென்று—எனவும் பாடம்.

தமர்வரை வெதிர்ந்தமை தலைவிக் குணர்த்தலும்
அவளுவகை யாற்று துளத்தொடு கிளத்தலும்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலும் தலைவி
மணம்பொருட் டாக வணங்கைப் பராநிலை
காட்டலுங் கண்டோன் மகிழ்வுமென் றீட்டிய
இருமூன் றுமொன் றும் வரைவுமலி தற்காம்
விரியென விளம்பினர் மெய்யுணர்ந் தோரே. ௧௭௪

## உ. அறத்தொடுநிற்றல்

### அறத்தொடு நிற்றலின் வகை

முன்னிலை முன்னிலைப் புறமொழி யென்றாங்கு
அன்ன விருவகைத் தறத்தொடு நிலையே. ௧௭௫

### அறத்தொடு நிற்றலின் விரி

கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தற் காரணங் கூறலுந் தலைவன்
தெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
எய்தக் கூறலு மிகந்தமை யியம்பலும்
இயற்பழித் துரைத்துழி யியற்பட மொழிதலும்
தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றலும்
இல்வயிற் செறித்தமை சொல்லலுஞ் செவிலி
கனையிரு ளவன்வரக் கண்டமை கூறலும்
எனமுறை யியம்பிய வேழும் புனையிழைத்
தலைவி யறத்தொடு நிலைதனக் குரிய. ௧௭௬

### பாங்கி யறத்தொடு நிற்றற்குரிய கிளவி

எறிவளை வேற்றுமைக் கேது வினவினும்
வெறிவிலக் கியவழி வினவிலும் பாங்கி
பூவே புனலே களிறே யென்றிவை
ஏது வாகத் தலைப்பா டியம்பும். கஎ

### செவிலி யறத்தொடு நிற்றற்குரிய கிளவி

மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினவுழி
முன்னிலை மொழியான் மொழியுஞ் செவிலி. கஎ

### அறத்தொடு நிற்றலின் விரி இவையென்பது

என்றுட னியம்பிய வெல்லாம் களவியல்
நின்றுழி யறத்தொடு நிற்றலின் விரியே. கஎ

### களவு வெளிப்பாட்டிற்குரிய கிளவி

போக்கே கற்பொடு புணர்ந்த கவ்வை
மீட்சியென் றாங்கு விளம்பிய மூன்றும்
வெளிப்படைக் *கிளவி வெளிப்படு தொகையே க

### உடன்போக்கின் வகை

போக்கறி வுறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்த லேற்றலென் று
யாப்பமை யுடன்போக் கிருநான்கு வகைத்தே. க

* கிளவியின் வழிப்படு—எனவும் பாடம்

## உடன்போக்கின் விரி

பாங்கி தலைவற் குடன்போக் குணர்த்தலும்
ஆங்கவன் மறுத்தலு மவளுடன் படுத்தலும்
தலைவன் போக்குடன் படுதலும் பாங்கி
தலைவிக் குடன்போக் குணர்த்தலுந் தலைவி
நாணழி விரங்கலுங் கற்புமேம் பாடு
பூண்முலைப் பாங்கி புகறலுந் தலைவி
ஒருப்பட் டெழுதலும் விருப்புடைப் பாங்கி
சுரத்திய லுரைத்தழிச் சொல்லலும் பாங்கி
கையடை கொடுத்தலும் வைகிருள் விடுத்தலும்
அவன்சுரத் துய்த்தலு மசைவறிந் திருத்தலும்
உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தலும்
கண்டோ ரயிர்த்தலுங் காதலின் விலக்கலும்
தன்பதி யணிமை சாற்றலுந் தலைவன்
தன்பதி யடைந்தமை தலைவிக் குணர்த்தலும்
என்றிவை யொன்பதிற் றிருவகைக் கிளவியும்
ஒன்றிய வன்பி னுடன்போக்கு விரியே. ௧௮௨

## கற்பொடுபுணர்ந்த கௌவையின் வகை

செவிலி புலம்ப னற்றாய் புலம்பல்
*கவர்மனை மருட்சி கண்டோ ரிரக்கம்
செவிலிபின் றேடிச் சேறலென் றாங்குக்
கற்பொடு புணர்ந்த கௌவைநா வகைத்தே. ௧௮௩

* கவரனை, கவன்மனை—எனவும் பாடங்கள்.

## கற்போடுபுணர்ந்த கௌவையின் விரி
## செவிலி புலம்பல்

*வினவிய பாங்கியி னுணர்ந்த காலை*
*இனைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதலும்*
*தன்னறி வின்மை தன்னைநொந் துரைத்தலும்*
*தெய்வம் வாழ்த்தலு மிவ்வொரு மூன்றும்*
*இலங்கிழைச் செவிலி புலம்புதற் குரிய.* ௧௮௪

## ஷை நற்றாய் புலம்பல்

*செவிலி யறத்தொடு நிற்றலிற் கவலையில்*
*பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடும்*
*அயலார் தம்மொடும் பயிலிடந் தம்மொடும்*
*தாங்கல ளாகிச் சாற்றிய வெல்லாம்*
*பூங்கொடி நற்றாய் புலம்பற் குரிய.* ௧௮௫

## மனைமருட்சியின் விரி

*நிமித்தம் போற்றலுஞ் சுரந்தணி வித்தலும்*
*தன்மகண் மென்மைத் தன்மைக் கிரங்கலும்*
*இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கலும்*
*அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலும்*
*எனவிவை யைந்தும்மனை மருட்சிக் குரிய.* ௧௮௬

## கண்டோரிரக்கம்

*ஆயமுந் தாயு மழுங்கக் கண்டோர்*
*காதலி னிரங்கல் கண்டோ ரிரக்கம்.* ௧௮௭

### செவிலி பின்றேடலின் விரி

*ஆற்ருத் தாயைத் தேற்றலு மாற்றிடை*
*முக்கோற் பகவரை வினுதலு மிக்கோர்*
*ஏதுக் காட்டலு மெயிற்றியொடு புலம்பலும்*
*குரவொடு புலம்பலுஞ் சுவடுகண் டிரங்கலும்*
*கலந்துடன் வருவோர்க் கண்டுகேட் டலுமவர்*
*புலம்ப றேற்றலும் புதல்வியைக் காணுது*
*கவலைகூர் தலுமென விவையொன் பானும்*
*செவிலிபின் றேடிச் சேறற் குரிய.* கஅஅ

### கற்பொடுபுணர்ந்த கௌவையின் விரி
### இவை எனல்

*முற்பட மொழிந்த முறையெழு மூன்றும்*
*கற்பொடு புணர்ந்த கௌவையின் விரியே.* கஅகூ

### மீட்சியின் வகை

*தெளித்தன் மகிழ்ச்சி வினுதல் செப்பலென*
*வெளிப்பட வுரைத்த மீட்சிநால் வகைத்தே.* ககூ0

### மீட்சியின் விரி

*தலைவிசே ணகனறமை செவிலிதாய்க் குணர்த்தலும்*
*தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றலும்*
*தலைவிமுன் செல்வோர் தம்மொடு தான்வரல்*
*பாங்கியர்க் குணர்த்தி விடுத்தலு மாங்கவர்*

பாங்கியர்க் குரைத்தலும் பாங்கியர் கேட்டு
நற்றாய்க் குரைத்தலு நற்றாய் கேட்டவன்
*உளங்கோள் வேலனை வினாதலு மெனவுடன்
விளம்பிரு மூன்றும் மீட்சியின் விரியே. ௧௧௩

## வரைவிற்குரிய கிளவிகள்

மடந்தையை யுடன்போய் வரைந்து மீடற்கும்
அவண்மனை வரைதற்குந் தன்மனை வரைதற்கும்
†இவையைந்து முரிய செவிலிகூற் றொழித்தே. ௧௧௪

## தன்மனை வரைதலின் வகை

வினாதல் செப்பன் மேவலென் றிறைவன்
றனாதில் வரைத ரூன்மூ வகைத்தே. ௧௧௫

## தன்மனை வரைதலின் விரி

பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்
செவிலியை வினாதலுஞ் செவிலிக் கிறைவி
வரைந்தமை யுணர்த்தலும் வரைந்தமை செவிலி
நற்றாய்க் குணர்த்தலு முற்றாங் கிருவரும்
தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்கு
யான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றலும்
தானது முன்னே சாற்றிய துரைத்தலும்
என்னுமிவ் வைந்து மின்னிலை வேலோன்
மன்னிய தன்மனை வரைதலின் விரியே. ௧௧௬

---

*உளங்கொள; †இவைதலுமுரிய—எனவும் பாடங்கள்.

### உடன்போய் வரைந்துமீளுதல் விரி

*ஆதி யொன்றொழித் தல்லன நான்கும்
மாதினை யுடன்போய் வரைந்து மீடற்கும்
நீதியி னுரிய நினையுங் காலை. ௧௬௫

### மீண்டு வரைதலின் விரி

இருவரில் விற்கு மியைந்தபன் ஞொன்றும்
ஒருவகை மீண்டு வரைதலின் விரியே. ௧௬௬

### உடன்போக் கிடையீட்டின் வகை

போக்கறி வுறுத்தல் வரவறி வுறுத்தல்
நீக்க மிரக்கமொடு மீட்சி யென்றுங்கு
உடன்போக் கிடையீ டொருநால் வகைத்தே. ௧௬௭

### உடன்போக் கிடையீட்டின் விரி

நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத்
தன்செல வுணர்த்தி விடுத்தலுந் தலைமகள்
தன்செல வீன்றாட் குணர்த்தி விடுத்தலும்
ஈன்றாட் கந்தணர் மொழிதலு மீன்றாள்
அறத்தொடு நிற்றலிற் றமர்பின் சேறலைத்
தலைவி கண்டு தலைவற் குணர்த்தலும்
தலைமக டன்னைத் தலைமகன் விடுத்தலும்
தமருடன் செல்பவ ளவன்புற நோக்கிக்

---

* மூதற்சூத்திரத்தின் மூதற்கண்ணுள்ளது.

கவன்றரற் றலுமென நுவன்றவை ஆறும்
உடன்போக் கிடையீட்டு விரியா கும்மே. ௧௧௯

## எவ்வகை வரைவின்கண்ணும் நிகழுந்திறம்

தன்னூர் வரைதலுந் தன்மனை வரைதலும்
என்னுமிவ் விரண்டொழித் தெவற்றினுங் கிழவோன்
அந்தணர் சான்றோர் முன்னிட் டருங்கலம்
தந்து வரைதற் றகுதி யென்ப. ௧௧௧

# கற்பியல்

## கற்பென்னுங் கைகோளின் இலக்கணம்

பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழ்வு மூடலு மூட லுணர்த்தலும்
பிரிவும் பிறவு மருவிய தாகும். உ௦௦

## கற்பின் கிளவிகள்

இல்வாழ்க் கையே பரத்தையிற் பிரிவே
ஓதற் பிரிவே காவற் பிரிவே
தூதிற் பிரிவே துணைவயிற் பிரிவே
பொருள்வயிற் பிரிவெனப் பொருந்திய வேழும்
வளமலி கற்பின் கிளவித் தொகையே. உ௦௧

## இல்வாழ்க்கையின் வகை

கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி
பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென்று
ஈங்கு நால்வகைத் தில்வாழ்க் கையே. உ௦உ

## இல்வாழ்க்கையின் விரி

தலைவன் றலைவிமுன் பாங்கியைப் புகழ்தலும்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவியை
வரையுநா ளளவும் வருந்தா திருந்தமை

உரையா யென்றலும் பெருமக ளுரைத்தலும்
தலைவனைப் பாங்கி வரையுநா ளளவும்
நிலைபெற வாற்றிய நிலைமை வினுதலும்
மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை
அன்புற வுணர்த்தலும் வாழ்க்கைநன் றுறைதலும்
மணமனைச் சென்று வந்த செவிலி
பொற்றொடி கற்பிய னற்றாய்க் குணர்த்தலும்
நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தலும்
அன்னவர் காத லறிவித் தலுமெனும்
இன்னவை பத்தும் இல்வாழ்க்கை விரியே. உ0௩

## பரத்தையிற் பிரிவின் வகை

வாயில் வேண்டல் வாயின் மறுத்தல்
வாயினேர் வித்தல் வாயி னேர்தலென்று
ஆய பரத்தையி னகச்சிநால் வகைத்தே. உ0௪

## உணர்த்த வுணரும் ஊடலின் விரி

காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு
ஏதுவீ தாமவ் விறைவிக் கென்றலும்
தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கலும்
ஈங்கிது வென்னெனப் பாங்கி வினுதலும்
இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தலும்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி
செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி

அவ்வணி யுழையர்கண் *டழுங்கிக் கூறலும்
பரத்தையர் கண்டு பழித்தலும் பரத்தையர்
உலகிய னோக்கி விடுத்தலிற் றலைவன்
வரவுகண் டுவந்து வாயில்கண் மொழிதலும்
வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தலும்
முதிரா †மென்முலை யெதிர்கொண்டு பணிதலும்
புணர்ச்சியின் மகிழ்வுமென் றுரைத்தபன் னொன்றும்
உணர்த்த வுணரு மூடற் குரிய. உ0ரு

## உணர்த்த வுணரா வூடலின் விரி

வெள்ளணி யணிந்து விடுத்துழிப் புள்ளணி
‡மலைவே லண்ணல் வாயில் வேண்டலும்
தலைவிநெய் யாடிய திருவே சாற்றலும்
தலைவன் தன்மனத் துவகை §கூறலும்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாணன் முதலாப் பாங்கி யீறாப்
பேணிய வாயில் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும் விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்டு
இறையோன் மகிழ்தலு மிறைமகள் விருந்துகண்டு
ஒளித்த வூடல் வெளிப்பட நோக்கிச்
சீறே லென்றவள் சீறடி தொழுதுமிஃது

* அழுங்க; † இளமுலை; ‡ மாலை; § கூர்தல்—
எனவும் பாடங்கள்.

எங்கையர் காணி னன்றன் றென்றலும்
அங்கவர் யாரையு மறியே னென்றலும்
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலும்
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலும்
தணியா ளாகத் தலைமக னூடலும்
அணிவளைப் பாங்கி யன்பிலை கொடியையென்று
இணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவும்
உணர்த்த உணரா ஊடற் குரிய. ௨௦௬

## இதுவுமது

ஆயிழை மைந்தனு மாற்று மையுமே
வாயி லாக வரவெதிர் கோடலும்
மணந்தவன் போயபின் வந்த பாங்கியோடு
இணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தலும்
தலைவனைப் புகழ்தலுஞ் சிலருதற் பாங்கி
மனைவியைப் புகழ்தலு மினையவும் பிறவும்
அனைவகை மொழிந்த வதன்பாற் படுமே. ௨௦௭

## பரத்தையிற் பிரிவின் விரி

மூன்றுசூத் திரத்து மொழிந்தவை யெல்லாம்
ஆன்ற பரத்தையி னகற்சியின் விரியே. ௨௦௮

## பிரிவின் வகை

பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்

பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்று
ஒருமையிற் கூறிய வொன்பது வகைய
கல்வி முதலா வெல்லாப் பிரிவும். உ0க

## ஒழிபியல்

### ஒழிபு

ஒழிபெனப் படுவ தகப்பாட் டுறுப்பும்
வழுவு *மமைதியுந் தழுவிய தாகும். உக0

### அகப்பாட் டுறுப்பின்வகை

திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் பயனே முன்னம்
மெய்ப்பா டெச்சம் பொருள்வகை †துறையென
அப்பா லாறிரண் டகப்பாட் டுறுப்பே. உகக

### திணையுங் கைகோளும்

அவற்றுள்,
முன்னவை யிரண்டுஞ் சொன்னவை யாகும். உகஉ

### களவிற் கூற்றிற் குரியர்

தலைவன் றலைவி பார்ப்பான் ‡பாங்கன்
பாங்கி செவிலியென் றீங்கிவ் வறுவரும்
சாற்றிய களவிற் கூற்றிற் குரியர். உகங

---

* அமைவும்; † துறையென்று—எனவும் பாடங்கள்.

‡ தொல்காப்பியர் பாகனை விலக்கினர்.

### கற்பிற் கூற்றிற் குரியர்

நற்றாய் கண்டோர் பாணன் கூத்தர்
விறலி *பரத்தை யறிவரென் றெழுவரும்
அறுவரென் றவரு மாகிய வனைவருங்
குறைவறு கற்பிற் கூற்றிற் குரியர். உகச

### அகப்பொருளகத்து முகத்துரை நிகழாதோர்

பயந்தோன் றன்னை யுயங்குநோ யறிவோர்
ஊரவ ரயலோர் சேரியோ ரென்றிவர்
முகத்துரை நிகழா வகப்பொரு ளகத்தே. உகரு

### தலைவன் கூற்று விகற்பம்

தமர்வரி னிடைச்சுரந் தன்னிற் கிழத்தியோடு
அமர்தரு கிழவோ †னுணையுங் கூறும். உகசா

### தலைவி கூற்று விகற்பம்

உடன்போய் மீண்ட கொடுங்குழை மடந்தை
பிரிவுழித் தலைவனொடு ‡சுரத்தியல் பேசலும்
பிரிந்துழி நெஞ்சொடும் பிறரொடும் வருந்திச்
சொல்லலு முரியள் சொல்லுங் காலை. உகஎ

### நற்றாய் கூற்றிற் கோருசார் விலக்கு

தலைவன் றலைவியொடு நற்றாய் கூறாள். உகஅ

---

* பரத்தையர் அறிவர். † ஆண்மையுங் கூறும்.
‡ சுரத்தியல் புரவலும்.

## நற்றாய்க்குரிய கூற்று

புணர்ந்துடன் போய துணர்ந்த பின்னர்
அந்தணர் தெய்வ மயலோ ரறிவர்
சிந்தைநோ யறிவோர் செவிலி பாங்கியொடு
கண்டோர்க் குரைக்கும் பண்புடை நற்றாய். ௨௧௯

## செவிலிக்குரிய கூற்று

தாயொடும் பாங்கி தான்முத லோரொடும்
சேயிழைச் செவிலியுஞ் செப்பு மாங்கே. ௨௨0

## கண்டோர்க்குரிய கூற்று

தாயர் பாங்கியர் தலைவன் றலைவியோடு
ஏயு மென்ப கண்டோர் கூற்றே. ௨௨௧

## பிறர்க்குரிய கூற்று

சாற்று *வெழுவருந் தலைவன் றலைவியோடு
†ஏற்றன கூறுப விடந்தொறு மிடந்தொறும். ௨௨௨

## தலைவிகூற்றின் புறநடை

நெஞ்சு நாணு நிறைசே ரறிவும்
செஞ்சுடர்ப் பருதியுந் திங்களு மாலையும்
புள்ளு மாவும் புணரியுங் கானலும்

* அனைவரும்; † ஏற்பன—எனவும் பாடங்கள்.

உள்ளுறுத் தியன்றவு மொழிந்தவை பிறவும்
தன்சொற் கேட்குந போலவுந் தனக்கவை
இன்சொற் சொல்லுந போலவு மேவல்
செய்குந போலவுந் தேற்றுந போலவும்
மொய்குழற் கிழத்தி மொழிந்தாங் கமையும். உஉங

## தம்மொடுதாமே கூறல்

*இறையோன் முதலோர் யாரொடு மின்றித்
தம்மொடு தாமே சாற்றியு மமைய. உஉச

## கேட்போர்

கிழவோன் கூற்றுங் கிழத்தி கூற்றும்
பழமறை யோர்முதற் பதின்மருங் கேட்ப. உஉரு

## இதுவுமது

மறையோன் கூற்று மறிஞர் கூற்றும்
இறையோன் முதலா வெனைவருங் கேட்ப. உஉசு

## இடம்

நெறிப்படு கரும நிகழ்வுழி இடனே. உஉஎ

## காலம்

சென்றது நிகழ்வது மெதிர்வது மெனமுறை
நின்று பொருளுணர நிகழ்வது காலம். உஉஅ

* எம்முறையோரும்—எனவும் பாடம்.

## பயன்

இப்பொருள் பயக்குமிஃ தென்பது பயனே: உ௪௯

## முன்னம்

இன்னார்க் கின்னுழி *யிதுப்யக் குமெனும்
முன்னந் தருவது முன்ன மாகும். உ௫0

## மெய்ப்பாடு

நகைமுத லாமிரு நான்குமெய்ப் பாடும்
நிகழ்பொருண் மெய்ப்பட நிற்பமெய்ப் பாடே. உ௫௧

## எச்சம்

சொல்லே யாயினுங் குறிப்பே யாயினும்
சொல்லி முடித்தல் வேண்டுவ தெச்சம். உ௫௨

## பொருள்வகை

ஒருதிணைக் குரிமை பூண்ட நிலைமை
பொருள்வகை யென்மனார் புல்மை யோரே. உ௫௩

## துறை

சொல்லிய வல்ல †வொன் றினு மவற்றொடு
ஒல்லும் வகைதேர்ந் துணர்த்தியல் வழாமல்

---

* இன்னது பயக்கும்;
† தோன்றினும்—எனவும் பாடங்கள்.

உரைப்போர் கேட்போ ருண்மை யின்றி
உரைக்குங் கவியே யுரைப்பது துறையே. ௨௱௪

## இதுவுமது

அவற்றுள்,
எச்ச மின்றியு *மியையு மென்ப. ௨௱௫

## அகப்பாட்டினுள்வரும் பொருள்

உவமைப் பொருளு மிறைச்சிப் பொருளுமென்று
இருவகைப் பொருளு மெய்துமகப் பாட்டினுள். ௨௱௬

## உவமைவகை

உள்ளுறை யுவமம் வெளிப்படை யுவமமென
எள்ளரு முவம மிருவகை யுடைத்தே. ௨௱௭

## உள்ளுறையுவமம்

அவற்றுள்,
உள்ளுறை யுவம முய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்.

## வெளிப்படை யுவமம்

வெளிப்படை யுவமம் வினைபயன் மெய்யுரு
வெளிப்பட நின்று விளங்குவ தாகும். ௨௱௯

---

* இயலும்; உள்ளுறையுவமம்—எனவும் பாடங்கள்.

### இறைச்சிப் பொருள்

கருப்பொருட் பிறக்கு மிறைச்சிப் பொருளே. உசo

### அகப்புறக் கைக்கிளை

காமஞ் சாலா விளமை யோள்வயிற்
குறிப்பறி வுறாது குறுகியாங் கவளோடு
இறப்பக் கூறுவ தகப்புறக் கைக்கிளை. உசக

### இதுவுமது

அதுவே,
இறைமையில் லோர்க்கு மிழிகுலத் தோர்க்கும்
முறைமையி னுரித்தே முன்னுங் காலை. உசஉ

### அகப்பொருட் பெருந்திணை

அகன்றுழிக் கலங்கலும் புகன்றமடற் கூற்றும்
குறியிடை யீடுந் தெளிவிடை விலங்கலும்
வெறிகோள் வகையும் *விழைந்துடன் போக்கும்
பூப்பிய லுரைத்தலும் பொய்ச்சூ ளுறையும்
†தீப்பி னூடலும் போக்கழுங் கியல்பும்
பாசறைப் புலம்பலும் பருவமா றுபடுதலும்
‡வன்பொறை யெதிரழிந்து மொழிதலு மன்புறும்

* வேந்துடன், விரைந்துடன்; † தீர்ப்பில்;
‡ வன்புறை; எதிர்ந்து—எனவும் பாடங்கள்.

மனைவியுந் தானும் வனமடைந்து நோற்றலும்
பிறவு மகப்பொருட் பெருந்திணைக் குரிய. ௨௪௩

## அகப்புறப் பெருந்திணை

மடலே றுதலொடு விடைதழாஅ லென்று
குற்றிசை தன்னொடு குறுங்கலி யென்று
சுரநடை தன்னொடு முதுபாலை யென்று
தாபத நிலையொடு தபுதார நிலையெனப்
புகன்றவை யியற்பெயர் பொருந்தா வாயின்
அகன்ற வகப்புறப் *பெருந்திணைத் தாகும். ௨௪௪

## அகப்பாட்டினுட் பாடப்படுவோர்

பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவனெனப்
பாட்டினுட் பாடப் படுவோ ரிருவர். ௨௪௫

## உயர்ந்தோன்

அவருள்,
உயர்ந்தோன் பாட்டுடைத் தலைவ னாகும். ௨௪௬

## தலைமக்கட்குக் கூறப்படும்பெயர்

நிலப்பெயர் வினைப்பெயர் பண்புகொள் பெயரொடு
குலப்பெய ரியற்பெயர் கூறுப வவர்க்கே. ௨௪௭

---

* பெருந்திணைக்காகும்—எனவும் பாடம்

### களவித் தலைமகற்குக் கூறப் பெயர்

அவற்றுள்,
இயற்பெயர் களவித் தலைவற் கிசையார். உசஅ

### அகப்பாட்டினுள் தலைமக்கட்பெயர் வழங்குந்திறம்

இருவரு மொருங்கே வருதலுந் தனித்தனி
வருதலு இருவரும் வாரா தொழிதலும்
உரிய வென்மனா ருணர்ந்திசி னோரே. உசக

### அகப்புறப் பாட்டு

அகப்புறப் பாட்டு மிகப்பில வவையே. உ௫0

### திணை மயக்கம்

முத்திறப் பொருளுந் தத்தந் திணையொடு
மரபின் வாராது மயங்கலு முரிய. உ௫க

### புறநடை

கூறிய வல்ல வேறுபிற தோன்றினும்
கூறிய வற்றொடுங் கூட்டிக் *குறிகொளக்
கூறி புணர்த்தல் குணத்தோர்க் கியல்பே. உ௫உ

### அகப்பொருள் விளக்கம்

மூலம் முற்றும்.

* மெய்கொள—என்றும் பாடம்.

# நூல் வரலாறு

கடைச்சங்க காலத்துப் பாண்டிய நாட்டின் கண் பன்னீராண்டு மழையின்றிப் பஞ்ச முண்டாயிற்று. அரசனும் நாடும் வருந்துவது கண்டு அந்நாட்டுப் புலவர்கள் யாவரும் அதனை விட்டகன்று தாந்தா மறிந்தவாறு வெவ்வேறு நாடுகளிற் புக்குக் காலங்கழித்தனர். பிறகு பாண்டியநாடு மழைபெய்து மலிவடைய அரசன் அப் புலவர்களைக் கொணர நாலா பக்கங்களிலும் ஆட்களைப் போக்க, எழுத்துஞ் சொல்லும்வல்ல புலவர்கள் வந்துற்றனரே யன்றிப் பொருள் வல்லார் இல்லாராயினர். அரசற்குக் கவற்சி பெரிதாய் ஆலவாய் அவிர் சடைக் கடவுளைச் சிந்திக்க, அவர் அறுபது சூத்திரஞ் செய்து மூன்று செப்பிதழகத் தெழுதிப் பீடத்தின் கீழிட்டனர். மறுநாள் கோயிற் பார்ப்பான் தேவர் கோட்டத்தை அலகிட அவ்விதழ்கள் அவன் கண்ணிற்பட்டன. அவ்வருமைச் செய்தியை உடனே அவன் அரசற்கறிவிக்க, அரசன் ஓடோடியுங் கோட்டம்புக்கு இதழ்களைக் கண்டு அவற்றிற் றீட்டியுள்ள சூத்திரங்கள் பொருளதிகாரத் தன

வென அறிந்து அடங்கா மகிழ்கொண்டு சங்கத்தினரை யழைத்து அவைகட்குப் பொருள் காணக் கட்டளை யிட்டான். சின்னாட்களில் புலவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வோருரை வகுத்திட்டுத் தாந்தாமிட்ட உரையே சிறப்புடைத்தென்ன, அரசன் அதற்கொரு காரணிகனை வேண்டிச் சூத்திரஞ்செய்த ஆலவாய்க் கடவுளையே மறுபடி சிந்திக்க, 'இவ்வூர் உப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மன் என்னும் ஊமைப் பிள்ளையே இவ் வுரைகளின் திறத்தைக் கண்டறியவல்ல காரணிகன்' என வெழுந்த குரலைக்கேட்டு, அரசன் அவ்வாறே அவன் முன்னர் அப் புலவர்களின் பொருள்களை உரைக்கச் செய்தான். உருத்திரசன்மன் ஏனையோர் உரைகளை யெல்லாங் கேட்டு வாளாவிருந்து, கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்தவிடத்து மொழிதோறும் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தானாக ஆங்குக்குழீஇ யிருந்த யாவரும் ஆர்ப்பெடுத்து அந்நூற்கு மெய்யுரை அஃதே யென்றனர்.

எனவே, தமிழிலக்கணம் ஐந்தனுள் மூன்றுவதாகிய பொருளின் பகுதிகள் அகம்புற

என்னுமிரண்டில் அகத்தி னியல்பைக் கூறும்
'அன்பினைந்திணை' என்பது எழுவாயாகவும்,
'களவு கற்பென' என்பது இறுவாயாகவும்
நின்ற அறுபது சூத்திரங்கட்கும் ஆசிரியர்
ஆலவாய்க் கடவுளாகிய இறையனார் என்பதும்,
அவைகட்கு நல்லுரை கண்டார் நக்கீரனார் என்
பதும் போதரும்.

# இறையனார் அகப்பொருள்

## களவு

### களவின் இலக்கணம்

அன்பி னைந்திணைக் களவெனப் படுவது
அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர். க

### இயற்கைப் புணர்ச்சி

அதுவே,
தானே யவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல். உ

### தலைப்பெயல்

ஆங்ஙனம் புணர்ந்த கிழவோன் றன்வயின்
பாங்க னோரிற் குறிதலைப் பெய்தலும்
பாங்கிலன் றமியோ ளிடந்தலைப் படலுமென்று
ஆங்கவ் விரண்டே தலைப்பெயன் மரபே. ங

### களவின்கண் இல்லதோ ரொழுக்கம்

அவ்வியல் பல்லது கூட்டக் கூடல்
எவ்விடத் தானுங் களவிற் கில்லை. ச

## தலைப்பெயலின்பின் தலைவற்குரிய ஒழுக்கம்

புணர்ந்த பின்றை யாங்ஙன மொழுகாது
பணிந்த மொழியாற் றோழி தேஎத்து
இரந்துகுறை யுறுதலுங் கிழவோன் மேற்றே. ரு

## மதியுடம்படுக்குந் திறன்

இரந்துகுறை யுறாது கிழவியுந் தோழியும்
ஒருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கிப்
பதியும் பெயரும் பிறவும் வினாஅய்ப்
புதுவோன் போலப் பொருந்துபு கிளந்து
மதியுடம் படுத்தற்கு முரிய னென்ப. சு

## தோழிக்குரிய உணர்ச்சிவகை

முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரு முள்வழி யவன்வர வுணர்தலென்று
அம்மூன் றென்ப தோழிக் குணர்ச்சி. எ

## தோழிக் கில்லதோ ருணர்ச்சி

ஆங்குணர்ந் தல்லது கிழவோ டேஎத்துத்
தான்குறை யுறுதல் தோழிக் கில்லை. அ

## தலைமகன்முன் தோழி சொல்லாடுந்திறன்

முன்னுற வுணரினு மவன்குறை யுற்ற
பின்ன ரல்லது கிளவி தோன்றாது.

## தலைமகளைத் தோழி குறைநயப்பித்தல்

உள்ளத் துணர்ச்சி தெள்ளிதிற் கரந்து
கிழவோ டேஎத்துக் குறையுறூஉ முளவே
குறிப்பறி வுறூஉங் காலை யான. ௧0

## குறைநயப்புக் கூறப்பட்ட தலைமகளின்தன்மை

தன்னுட் குறிப்பினை யருகுந் தோழிக்கு
முன்னுறு புணர்ச்சியி னருகலு முண்டே. ௧௧

## வரைதல் வேண்டுந் தோழியின் கூற்று

குறையுறுங் கிழவனை யுணர்ந்த தோழி
சிறையுறக் கிளந்து சேட்பட நிறுத்தலும்
என்னை மறைத்த லெவனோ வியரென
முன்னுறு புணர்ச்சி முறைமுறை செப்பலும்
மாயப் புணர்ச்சி யவனொடு நகாஅ
நீயே சென்று கூறென விடுத்தலும்
அறியாள் போறலுங் குறியாள் கூறலும்
படைத்துமொழி கிளவியுங் குறிப்புவேறு கொளலும்
அன்ன பிறவுந் தலைப்பெயல் வேட்கை
முன்னுறு புணர்ச்சிக் குரிய வென்ப. ௧௨

## தலைமகட் கில்லதோ ரிலக்கணம்

குறையுறு புணர்ச்சி தோழி தேஎத்துக்
கிழவிக் கில்லை தலைப்பெய லான. ௧௩.

### தோழி செவிலிக்கு அறத்தொடுநிற்றல்

*தோழிக் குரியவை கோடாய் தேஎத்து*
*மாறுகோ ளில்லா மொழியுமா ருளவே.* ௧௪

### கற்புங் களவும்

*முற்ப டப்புண ராதசொல் லின்மையிற்*
*கற்பெனப் படுவது களவின் வழித்தே.* ௧௫

### களவின்கண் தலைமகற்குரிய இடையீட்டின் வகை

*களவினுட் டவிர்ச்சி காப்புமிகி னுரித்தே*
*வரைவிடை வைத்த காலை யான.* ௧௬

### இதுவுமது

*அல்லகுறிப் படுதலு மவ்வயி னுரித்தே*
*அவன்வர வறியுங் குறிப்பி னான.* ௧௭

### குறியினதிலக்கணம்

*குறியெனப் படுவ திரவினும் பகலினும்*
*அறியக் கிளந்த விடமென மொழிப.* ௧௮

### இரவுக்குறி நிகழுமிடம்

*இரவுக் குறியே யில்வரை யிகவாது.* ௧௯

### பகற்குறி நிகழுமிடம்

*பகற்குறி தானே யிகப்பினும் வரையார்.* ௨௦

### இரவுக்குறியின் இடவேறுபாடு

*இரவுமனை யிகந்த குறியிடத் தல்லது*
*கிழவோற் சேர்தல் கிழத்திக் கில்லை.* ௨௧

### களவின்கண் நிகழும் உள்ளநிகழ்ச்சி

*அம்பலு மலருங் களவு.* ௨௨

### அம்பலலரின்கண் உள்ளநிகழ்ச்சி

*வெளிப்பட்ட பின்றையு முரிய கிளவி.* ௨௩

### வரைதலாற்றின் வகை

*களவு வெளிப்படா முன்னுற வரைதல்*
*களவு வெளிப்பட்ட பின்றை வரைதலென்று*
*ஆயிரண் டென்ப வரைத லாறே.* ௨௪

### வரைவின்கண் வரும் இடையீட்டின் வகை

*பட்ட பின்றை வரையாக் கிழவன்*
*நெட்டிடை கழிந்து பொருள்வயிற் பிரிதலும்*
*பொருள்வயிற் பிரியா தொருவழித் தணத்தலும்*
*புரைவ தென்ப கற்பா லான.* ௨௫

### களவு வெளிப்பாட்டின் இலக்கணம்

*வெளிப்படை தானே விரிக்குங் காலைத்*
*தந்தை தாயே தன்னைய ரென்றாங்கு*
*அன்னவ ரறியப் பண்பா கும்மே.* ௨௬

### இதுவுமது

அவருள்,
தாயறி வுறுதலி னேனோரு மறிப. உஎ

### நற்றாய் அறத்தொடு நிற்றல்

தந்தை தன்னைய ராயிரு வீற்று
முன்ன மல்லது கூற்றவ ணில்லை. உஅ

### அறத்தொடுநிற்கு மிடத்தின்வகை

காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்
நொதுமலர் வரையும் பருவ மாயினும்
வரைவெதிர் *கொள்ளாது தமரவண் மறுப்பினும்
அவனூ றஞ்சுங் கால மாயினும்
அந்நா லிடத்து மெய்ந்நா ணொரீஇ
அறத்தொடு நிற்ற லேழிக்கு முரித்தே. உ௯

### வரைவு கடாவுதல் வகை

காம மிக்க கழிபடர் கிளவியும்
காப்புச் சிறைமிக்க கையறு கிளவியும்
ஆறுபார்த் துற்ற வச்சக் கிளவியும்
இரவினும் பகலினு நீவரு கென்றலும்
கிழவோன் றன்னை வார லென்றலும்
தன்னுட் கையா றெய்திடு கிளவியும்

* கொள்ளார்—எனவும் பாடம்.

அன்ன மரபிற் பிறவுந் தொகைஇத்
தன்னை யழிந்த கிளவி யெல்லாம்
வரைதல் வேட்கைப் பொருள வென்ப. ௩௦

### களவுகாலத்துத் தலைமகனதிலக்கணம்

ஆறின் றமையு மூறு மச்சமும்
தன்னை யழிதலுங் கிழவோற் கில்லை. ௩௧

### களவினுட் டங்கி யொழுகுங் காலம்

களவினுட் டவிர்ச்சி வரைவி னீட்டம்
திங்க ளிரண்டி னகமென மொழிப. ௩௨

### களவுகாலத்துத் தலைமகனுக்குரிய பிறிதோரிலக்கணம்

களவினுட் *டவிர்ச்சி கிழவோற் கில்லை. ௩௩

---

* தவிர்தல்—எனவும் பாடம்.

# கற்பு

## கற்பின் இலக்கணம்

*கற்பினுட் டுறவே கடிவரை வின்றே.* ௱௪௪

## கற்புக் காலத்துப் பிரிவின்வகை

*ஓதல் காவல் பகைதணி வினையே*
*வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்று*
*ஆங்க வாறே யவ்வயிற் பிரிவே.*

## ஓதல் காவல்களுக் குரியார்

*அவற்றுள்,*
*ஓதலுங் காவலு முயர்ந்தோர்க் குரிய.* ௱௪௬

## பார்ப்பார்க்குரிய பிறிதோர் பிரிவு

*வேந்துவினை யியற்கை பார்ப்பார்க்கு முரித்தே.* ௱௪௭

## பார்ப்பாரில்வழி ஏனையோர்க்குரிய பிரிவு

*அரச ரல்லா வேனை யோர்க்கும்*
*புரைவ தென்ப வோரிடத் தான.* ௱௪௮

## ஏனையோர்க்குரிய பிரிவு

*வேந்தர்க் குற்றுழிப் பொருட்பிணிப் பிரிவென்று*
*ஆங்க விரண்டு மிழிந்தோர்க் குரிய.* ௱௪௯

### பரத்தையிற் பிரிவு

*காதற் பரத்தை யெல்லார்க்கு முரித்தே.* ௩௦

### தலைமகள்பிரிவின் காலவரையறை யின்மை

*பிரிவி னீட்ட நிலம்பெயர்ந் துறைவோர்க்கு*
*உரிய தன்றே யாண்டுவரை யறுத்தல்.* ௩௧

### பரத்தையிற் பிரிவுக்கிலதோர் வேறுபாடு

*பரத்தையிற் பிரிவே நிலத்திரி பின்றே.* ௩௨

### பரத்தையிற் பிரிவிற் றலைமக னொழுக்கம்

*பரத்தையிற் பிரிந்த கிழவோன் மனைவி*
*பூப்பின் புறப்பா டீரா று நாளும்*
*நீத்தகன் றுறைத லறத்தா றன்றே.* ௩௩

### மேலதற்குப் புறனடை

*கற்பினுட் பிரிந்தோன் பரத்தையின் மறுத்தந்து*
*அப்பொருட் படுப்பினும் வரைநிலை யின்றே.* ௩௪

### தலைமகற் குரியதோ ரிலக்கணம்

*புகழுங் கொடுமையுங் கிழவோன் மேன.* ௩௫

### தலைமகட் பெருமை

*கொடுமை யில்லைக் கிழவி மேற்றே.* ௩௬

### தலைமகள் திறத்துண்டாய வேறுணம்

*கிழவோன் முன்னர்க் கிழத்தி தற் புகழ்தல*
*புலவிக் காலத்துப் புரைவ தன்றே.* ௬௭

### மேலதற்குப் புறனடை

*நாடு மூரு மில்லுஞ் சுட்டித்*
*தன்வயிற் கிளப்பிற் புலவிப் பொருட்டே.* ௬௮

### தலைமகன் தற்புகழ்ச்சி

*அவன்வயிற் கிளப்பின் வரைவின் பொருட்டே.* ௬௯

### தலைவன் புலவி

*உணர்ப்புவயின் வாரா வூட லுற்றோன் றிற்*
*புலத்த லுனே கிழவற்கும் வரையார்.* ௭0

### கற்புக்காலத்துத் தலைமகற்குரிய பிறிதோரிலக்கணம்

*நிலம்பெயர்ந் துறையு நிலையியன் மருங்கிற்*
*களவுறை கிளவி தோன்றுவ தாயின்*
*இணைநிலைப் பெயர்க்கோள் கிழவற்கும் வரையார்.*

### இதுவுமது

*நிலம்பெயர்ந் துறையு மெல்லாப் பிரிவும்*
*ஒழிந்தோ ரறியவு மறியா மையும்*
*கழிந்துசேட் படூஉ மியற்கைய வென்ப.* ௭௨

## தலைமகளைப் பிரிவின்கண் வாயில்கள் ஆற்றுவிக்குமாறு

எல்லா வாயிலுங் கிழவோன் பிரிவையிற்
பல்லாற் றானும் வன்புறை குறித்தன்று. ௩௩

## ஆற்றளாயினவிடத்து வாயில்களுக்குரிய முறை

வன்புறை குறித்த வாயி லெல்லாம்
அன்புதலைப் பிரிந்த கிளவி தோன்றிற்
சிறைப்புறங் குறித்தன் றென்மனார் புலவர். ௩௪

## மேலதற்கு இன்னுமோர் முறை

சிறைப்புறங் குறியா தோன்றலு முளவே
அவர்ப்புணர் வறியுங் குறிப்பி னான. ௩௫

## களவுகற்புக்க ளிரண்டும்பற்றிய பாட்டினுரைத்திறம்

திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே கால மெச்ச மெய்ப்பாடு
பயனே கோளொன் றுங்கப் பத்தே
அகனைந் திணையு முரைத்த லாறே. ௩௬

## மேலதற்குப் புறனடை

அவற்றுள்,
எச்சமுங் கோளு மின்மையு முரிய. ௩௭

## எச்ச வகை

சொல்லே குறிப்பே யாயிரண் டெச்சம். ௩௮

### மேற் சூத்திரங்கட்கெல்லா மாகிய புறனடை

*முற்படக் கிளந்த பொருட்படைக் கெல்லாம்*
*எச்ச மாகி வரும்வழி யறிந்து*
*கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்*
*கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே.* ருகூ

### களவு கற்புக்களின் சிறப்பு

*களவு கற்பெனக் கண்ணிய வீண்டையோர்*
*உளநிக ழன்பி னுயர்ச்சி மேன.* ரு0

### இறையனுர் அகப்பொருள்

முற்றும்

# புறப்பொருள் வெண்பாமாலை

என்னும்

# புறப்பொருள் விளக்கம்

ஐயனாரிதனார்

## நூலாசிரியர் வரலாறு

ஐயனாரிதனார் என்பவர் சேரமான்களின் வழித்தோன்றல். அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவருங் கூடி யாத்ததாகச் சொல்லப்பட்ட புறப்பொருணூலாகிய பன்னிரு படலத்தை முதனூலாகக் கொண்டு, இவர் புறப்பொருள் வெண்பாமாலை யென ஒரு வழிநூல் இயற்றினர். இந்நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்னுந் தமிழிலக்கண மைந்தனுள், பொருளின் பகுதியாகிய அகம், புறம் என்னு மிரண்டிற் புறத்தின் இலக்கணமாகிய சூத்திரங்களையும், அவற்றின் இலக்கியமாகிய வெண்பாக்களையும், அவ்வெண்பாக்களின் கருத்துக்களைத் தனித்தனியே காட்டும் கொளுக்களையு முடையது. கொளுவெனினும் கருத்தெனினும் ஒக்கும். இப்பதிப்பின்கண் சூத்திரங்களைக் கொளுக்களுடன் தனியே அச்சிட்டும், அவற்றின் றொடர்பாக வெண்பாக்களைத் தனியே அச்சிட்டு மிருக்கின்றோம்.

ஐயனாரிதனாரின் காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டுக்கு முன்னென்பர். இவர் செய்

துள்ள கடவுள் வாழ்த்துப் பாக்களினால் இவர் தம் மதம் சைவமெனப் புலப்படுகின்றது. இந் நூலாசிரியர் பன்னிருபடல முடையாரையே பின்பற்றினராதலால் இந்நூலின் திணைத்துறைப் பாகுபாடுகள் தொல்காப்பியத்தினின்றும் வேறுபடுகின்றன.

புறப்பொருள் வெண்பாமாலை உரையாசிரியர் செயங்கொண்ட சோழ மண்டலத்து மேற்கானாட்டு மாகறலூரில் வதிந்துவந்த மாகறலூர்க்கிழார் சாமுண்டி தேவநாயகர் என்பவர்.

இந்நூலின் ஒழிபுப் படலத்தின்கண் கொளுக்கள் காணப்படவில்லை.

## திணைக் குறிப்பு

**வெட்சி**—வெட்சிப்பூச் சூடிப் பகையரசர் நாடு சென்று பசுமாட்டினைக் கவர்தல்.

**கரந்தை**—கரந்தைப்பூச் சூடி வெட்சியாரொடு பொருது பசுமாட்டினை மீட்க முயறல்.

**வஞ்சி**—பகைப்புலத் தரசனைப் பொருது வெற்றி கோடற் குறித்து வஞ்சிப்பூச் சூடிப் போர்மேற் செல்லுதல்.

**காஞ்சி**—நாடு காத்தற்கு வஞ்சி வேந்தனை யெதிர்க்கக் காஞ்சிப்பூச் சூடி வருதல், உலகத்தின் நிலையாமை யுணர்ந்து அதற் கேற்ப ஒழுகும் ஒழுக்கம்—என்பர் தொல்காப்பியர்.

**நொச்சி**—நொச்சிப்பூச் சூடி அரண்காத்து நிற்றல்.

**உழிஞை**—உழிஞைப்பூச் சூடி அரணை முற்றுகை செய்தல்.

**தும்பை**—தும்பைப்பூச் சூடிப் பகைவரொடு பொருதல்.

**வாகை**—வாகைப்பூச் சூடிப் பகைவரை வெல்லுதல்.

**பாடாண்**—அரசன் அருமை பெருமைகளைப் புலவர் பாடிப் புகழ்தல்.

**பொதுவியல்**—வெட்சி முதற் பாடாண் திணை யீறாகக் கூறப்பட்ட புறத்திணைகட்கெல்லாம் பொதுவாய் இயலும் ஒழுக்கங்கள்.

**கைக்கிளை**—ஒருதலைக்காமம்.

**பெருந்திணை**—பொருந்தாக் காமம்.

# புறப்பொருள் விளக்கம்

## கடவுள் வாழ்த்து

நடையூறு சொன்மடந்தை நல்குவது நம்மேல்
இடையூறு நீங்குவது மெல்லாம்—* புடையூறும்
சேனைமுகத் தாளிரியச் சீறுமுகத் தாறுமதத்
தானைமுகத் தானைநினைத் தால். ௧

கண்ணவனைக் காண்கவிரு காதவனைக் கேட்க †வாய்ப்
பண்ணவனைப் பாட பதஞ்சூழ்க—எண்ணிறைந்த
நெய்யொத்து நின்றானை நீலமிடற் றானையென்
கையொத்து நேர்கூப்புக. ௨

## சிறப்புப் பாயிரம்

மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதல்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த

---

* புடையூறு—எனவும் பாடம். † கேட்கவாய்
பண்ணவனைப் பாடப் பதஞ்—எனவும் பாடம்.

## புறப்பொருள் விளக்கம்

பன்னிரு * படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்
ஓங்கிய சிறப்பி னுலகமுழு தாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் † மருமான்
ஐய னரிதன் அகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின் று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே

* படலம்—எனவும் பாடம். † வழித்தோன்,

## வெட்சிப் படலம்

வெட்சி,
வெட்சி யரவம், விரிச்சி, செலவு,
வேயே, புறத்திறை, * ஊர்கொலை, ஆகோள்,
பூசன் மாற்றே, புகழ்சுரத் துய்த்தல்,
தலைத்தோற் றம்மே, தந்துநிறை, பாதீடு,
உண்டாட், டுயர் கொடை, புலனறி சிறப்பே,
பிள்ளை வழக்கே, பெருந்துடி நிலையே,
கொற்றவை † நிலையே, வெறியாட் டுளப்பட
எட்டிரண் டேனை நான்கொடு தொகைஇ
வெட்சியும் வெட்சித் துறையு மாகும்.

### வெட்சி

வென்றி வேந்தன் ‡ பணிப்பவும் § பணிப்பின்றியும்
சென்றி கன்முனை யாதந் தன்று. க

### வெட்சி யரவம்

கலவார் முனைமேற்
செலவமர்ந் தன்று. உ

* ஊர்க் கொலை; † நிலையொடு—எனவும் பாடங்கள்
‡ மன்னுறு தொழில்; § தன்னுறு தொழில்.

## விரிச்சி

வேண்டிய பொருளின் விளைவுநன் கறிதற்கு
ஈண்டிருண் மாலைச் * சொல்லோர்த் தன்று. ௫

## செலவு

வில்லே ருழவர் வேற்றுப் † புலமுனிக்
கல்லேர் கானங் கடந்துசென் றன்று. ௬

## வேய்

பற்றார் தம்முனைப் படுமணி யாயத்து
ஒற்றா ராய்ந்த வகையுரைத் தன்று. ௭

## புறத்திறை

நோக்கருங் குறும்பி னூழையும் வாயிலும்
போக்கற வளைஇப் புறத்திறுத் தன்று. ௮

## ஊர்கொலை

விரைபரி கடவி வில்லுடை மறவர்
‡குரையழ னடப்பக் குறும்பெறிந் தன்று. ௯

## ஆகோள்

வென்றார்த்து விறன்மறவர்
கன்றோடு மாதழீஇயன்று. ௧௦

---

* நற்சொற் கேட்டது. † புல முன்னி—எனவும் பாடம். ‡ முழங்கெரி.

### பூசன் மாற்று

*கணம்பிறங்கக் கைக்கொண்டார்*
*பிணம்பிறங்கப் பெயர்த்திட்டன்று.* ௯

### சுரத்துய்த்தல்

*அருஞ்சுரத்து மகன்கானத்தும்*
*வருந்தாம னிரையுய்த்தன்று.* ௧௦

### தலைத்தோற்றம்

*உரவெய்யோ னினந்தழீஇ*
*வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று.* ௧௧

### தந்துநிறை

*வார்வலந்த துடிவிம்ம*
*ஊர்புகல நிரையுய்த்தன்று.* ௧௨

### பாதீடு

*கவர்கணைச் சுற்றங் கவர்ந்த கணநிரை*
*அவரவர் வினைவயி னறிந்தீந் தன்று.* ௧௩

### உண்டாட்டு

*தொட்டிமிழுங் கழன்மறவர்*
*மட்டுண்டு மகிழ்தூங்கின்று.* ௧௪

### கொடை

*ஈண்டியநிரை யொழிவின்றி*
*வேண்டியோர்க்கு விரும்பிவீசின்று.* ௧௫

### புலன்றிசிறப்பு

வெம்முனைநிலை யுணர்த்தியோர்க்குத்
தம்மினுமிகச் சிறப்பீந்தன்று ௧௬

### * பிள்ளை வழக்கு

பொய்யாது புண்மொழிந்தார்க்கு
வையாது வழக்குரைத்தன்று. ௧௭

### துடிநிலை

தொடுகழன் மறவர் தொல்குடி மரபிற்
படுக ணிமிழ்துடிப் பண்புரைத் தன்று. ௧௮

### † கொற்றவை நிலை

ஒளியினீங்கா விறற்படையோள்
அளியினீங்கா வருளுரைத்தன்று. ௧௯

### வெறியாட்டு

வாலிழையோர் வினைமுடிய
வேலனொடு வெறியர்டின்று. ௨0

---

* கரும்பிள்ளை நிமித்தங் கூறியார்க்கு விதந்து கொடுத்தல்—இ. வி.

† துர்க்கையைப் பாராட்டி வணங்கும் நிலை.

## உ. கரந்தைப் படலம்

### சூத்திரம்

கதமலி கரந்தை, கரந்தை யரவம்,
அதரிடைச் செலவே, யரும்போர் மலைதல்,
புண்ணொடு வருதல், போர்க்களத் தொழிதல்,
ஆளெறி பிள்ளை, பிள்ளைத் தெளிவே,
பிள்ளை யாட்டொடு, கையறு நிலையே,
நெடுமொழி கூறல், பிள்ளைப் பெயர்ச்சி,
வேத்தியன் மலிபே, மிகுகுடி நிலையென,
அருங்கலை யுணர்ந்தோ ரவைபதி னொன்றும்
கரந்தையுங் கரந்தைத் துறையு மென்ப.

### கரந்தை

மலைத்தெழுந்தோர் மறஞ்சாயத்
தலைக்கொண்ட நிரைபெயர்த்தன்று. க

### கரந்தையரவம்

நிரைகோள் கேட்டுச் செய்தொழி லொழிய
*விரைவனர் குழூஉம் வகையுரைத் தன்று. உ

### அதரிடைச்செலவு

ஆற்று ரொழியக் கூற்றெனச் சினைஇப்
போற்றார் போகிய நெறியிடை யேகின்று. ந

* விரையினர், விரையுநர்—எனவும் பாடங்கள்.

### போர்மலைதல்

வெட்சி யாரைக் கண்ணுற்று வளைஇ
உட்குவரத் தாக்கி *யுறழ்செருப் புரிந்தன்று. ௫

### புண்ணொடுவருதல்

மண்ணோடு புகழ்நிறீஇப்
புண்ணோடு தான்வந்தன்று. ௬

### போர்க்களத்தொழிதல்

படைக்கோடா விறன்மறவரைக்
கடைக்கொண்டு களத்தொழிந்தன்று. ௭

### † ஆளெறிபிள்ளை

வருவாரை யெதிர்விலக்கி
ஒருதானாகி யாளெறிந்தன்று. ௭

### பிள்ளைத் தெளிவு

கண்மகிழ்ந்து துடிவிம்மப்
புண்மகிழ்ந்து புகன்றாடின்று. ௮

### பிள்ளையாட்டு

கூடலர்குடர் மாலைசூட்டி
வேறிரித்து விரும்பியாடின்று.

---

* உளர் செருப்—எனவும் பாடம்.
† ஆட்களை வெட்டும் வீரன்.

### கையறுநிலை

வெருவரும் வாளமர் விளிந்தோற் கண்டு
கருவி மாக்கள் கையற வுரைத்தன்று. ௧O

### நெடுமொழிகூறல்

மன்மேம் பட்ட மதிக்குடை யோற்குத்
தன்மேம் பாடு தானெடுத் துரைத்தன்று. ௧௧

### பிள்ளைப்பெயர்ச்சி

போர்தாங்கிப் *புள்விலங்கியோனைத்
தார்வேந்தன் றலையளித்தன்று. ௧௨

### வேத்தியன்மலிபு

தோள்வலிய வயவேந்தனை
வாள்வலிமறவர் சிறப்புரைத்தன்று. ௧௩

### குடிநிலை

மண்டிணி ஞாலத்துத் தொன்மையு மறனும்
கொண்டு பிறரறியுங் குடிவர வுரைத்தன்று. ௧௪

---

* கரிக்குருவி வலமாகச் சென்று தன் செலவைத் தடுக்கவும் களஞ் சென்று பொருத வீரன்.

## ௩. வஞ்சிப் படலம்

### சூத்திரம்

வாடா வஞ்சி, வஞ்சி யரவம்,
கூடார்ப் பிணிக்குங் குடைநிலை, வாணிலை,
கொற்றவை நிலையே, கொற்ற வஞ்சி,
குற்றமில் சிறப்பிற் கொற்ற வள்ளை,
பேராண் வஞ்சி, மாராய வஞ்சி,
நெடுமொழி வஞ்சி, முதுமொழி வஞ்சி,
உழபுல வஞ்சி, மழபுல வஞ்சி,
கொடையின் வஞ்சி, குறுவஞ் சிய்யே,
ஒருதனி நிலையொடு, தழிஞ்சி, பாசறை,
பெருவஞ் சிய்யே, பெருஞ்சோற்று நிலையொடு
நல்லிசை வஞ்சியென நாட்டினர் தொகுத்த
எஞ்சாச் சீர்த்தி யிருபத் தொன்றும்
வஞ்சியும் வஞ்சித் துறையு மாகும்.

### வஞ்சி

வாடாவஞ்சி தலைமலைந்து
கூடார்மண் கொளல்குறித் தன்று.

### வஞ்சியரவம்

வள்வார் முரசமொடு வயக்களிறு முழங்க
ஒள்வாட் டானை யுருத்தெழுந் தன்று.

### துடைநிலை

பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக்
கொய்தார் மன்னவன் குடை *நாட் கொண்டன்று.

### வாணிலை

செற்றார்மேற் செலவமர்ந்து
கொற்றவா ணாட்கொண்டன்று. ௫

### கொற்றவைநிலை

நீடோளான் வென்றிகொள்கென நிறை†மண்டை
[வலனுயரிக்
கூடாரைப் புறங்காணுங் கொற்றவைநிலை
[யுரைத்தன்று. ௬

### இதுவுமது

மைந்துடை யாடவர் செய்தொழில் கூறலும்
அந்தமில் புலவ ரதுவென மொழிப. ௬

### கொற்றவஞ்சி

வையகம் வணங்க வாளோச் சினனெனச்
செய்கழல் வேந்தன் ‡சீர்மிகுத் தன்று. ௭

---

* புறவீடு விடுதல்; வெளிப்படுத்தி முன்னே செல்ல விடுதல்.

† கலம்; பாத்திரம்.

‡ நன்மையைப் பெருக்கச் சொல்லியது.

### கொற்றவள்ளை

மன்னவன் புகழ்கிளந்து
ஒன்னார்நா * டழிபிரங்கின்று. ௮

### பேராண்வஞ்சி

கேளல்லார் முனைகெடுத்த
மீளியாளர்க்கு † மிகவுய்த்தன்று. ௯

### இதுவுமது

அருந்திறை யளப்ப வாறிய சினத்தொடு
பெரும்பூண் மன்னவன் பெயர்தலு மதுவே ௧0

### ‡ மாராய வஞ்சி

மறவேந்தனிற் சிறப்பெய்திய
விறல்வேலோர் நிலையுரைத்தன்று. ௧௧

### நெடுமொழி வஞ்சி

ஒன்னாதார் படை § கெழுமித்
தன்னாண்மை யெடுத்துரைத்தன்று. ௧௨

### முதுமொழி வஞ்சி

தொன்மரபின் வாட்குடியின்
முன்னோனது நிலைகிளந்தன்று. ௧௩

---

* கெடுவதற்கு வருந்தியது. † பெரிதுங் கொடுத்தது. ‡ அரசனாற் செய்யப்படுஞ் சிறப்பு. § கிட்டி.

### * உழபுல வஞ்சி

சேராதார் வளநாட்டைக்
கூடெரி கொளீஇயன்று. க௪

### † மழபுல வஞ்சி

கூடாமுனை கொள்ளைசாற்றி
வீடறக்கவர்ந்த வினைமொழிந்தன்று. க௫

### கொடை வஞ்சி

‡நீடவுங் §குறுகவு $நிவப்பவுந் தூக்கிப்
பாடிய புலவர்க்குப் பரிசி னீட்டின்று. க௬

### ¶ குறுவஞ்சி

மடுத்தெழுந்த மறவேந்தர்க்குக்
கொடுத்தளித்துக் குடியோம்பின்று. க௭

---

* 'எரி பரந்தெடுத்தல்'—பகைவர் நாட்டினை எரித்தல்; உழலல் என்பது உழ எனநின்றது. உழலல்—தடுமாறி நிற்றல்.

† மழபுலம்—இளைத்த நாடு.

‡ உச்சம்; § மந்தம்; $ சமம்; 'ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் துணிபு, நாற்சீர் கோயி, லைஞ்சீர் நிவப்பே யறுசீர் கழாஅ, லெழுசீர் தானெடுந் தூக்கென மொழிப.

¶ குறுமை—அழகு.

## இதுவுமது

* கட்டூரது வகைகூறினும்
அத்துறைக் குரித்தாகும். க அ

## ஒருதனிநிலை

பொருபடையுட் † கற்சிறைபோன்று
ஒருவன்றாங்கிய நிலையுரைத்தன்று. கக

## ‡ தழிஞ்சி

அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக்
கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று. உ0

## பாசறை நிலை

மதிக்குடைக்கீழ் வழிமொழிந்து மன்னரெல்லா
[மறந்துறப்பவும்
பதிப்பெயரான் மறவேந்தன் பாசறை யிருந்தன்று. உக

## பெருவஞ்சி

முன்னடையார் வளநாட்டைப்
பின்னருமுடன் றெரிகொளீ இயன்று. உஉ

---

* பாசறை. † வெள்ளந் தடுக்கும் கல்லணை.
‡ சாய்ந்தார் மேற் படாமை.

### பெருஞ்சோற்றுநிலை

திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப்
பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று. உரு

### நல்லிசைவஞ்சி

ஒன்றாதார் முனைகெடவிறுத்த
வென்வேலாடவன் விறன்மிகுத்தன்று. உசு

### இதுவுமது

இறுத்தபி னழிபிரங்கல்
மறுத்துரைப்பினு மத்துறையாகும். உ௭

## ச. காஞ்சிப் படலம்

### சூத்திரம்

காஞ்சி, காஞ்சி யதிர்வே, தழிஞ்சி,
பெரும்படை வழக்கொடு, பெருங்காஞ் சியயே,
வாள்செல வென்று, குடையது செலவே,
வஞ்சினக் காஞ்சி, பூக்கோ ணிலையே,
புகழ்தலைக் காஞ்சி, தலைமா ராயம்,
தலையொடு முடிதல், மறப்பெயர்க்காஞ்சி,

மாற்றரும் பேய்நிலை, பேய்க்காஞ் சியே,
தொட்ட காஞ்சி, தொடாக்காஞ் சியே,
மன்னைக் காஞ்சி, கட்காஞ் சியே,
ஆஞ்சிக் காஞ்சி, மகட்பாற் காஞ்சி,
முனைகடி முன்னிருப் புளப்படத் தொகைஇ
எண்ணிய வகையா னிருபத் திரண்டும்
கண்ணிய காஞ்சி துறையென மொழிப.

## காஞ்சி

வேஞ்சின மாற்றான் விடுதர வேந்தன்
காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று. ௧

## காஞ்சியெதிர்வு

மேல்வரும் படைவரன் மிகவு மாற்றா
வேல்வ லாடவன் விறன்மிகுத் தன்று. ௨

## தழிஞ்சி

பார்கெழுதரு படைத்தானை
வரம்பிகவாமைச் * சுரங்காத்தன்று. ௩

## படைவழக்கு

† முத்தவிர்பூண் மறவேந்தன்
ஒத்தவர்க்குப் படைவழங்கின்று. ௪

* வழியிடம் † மொய்த்தவிர் — எனவும் பாடம்.

## இதுவுமது

கொடுத்தபின்னர்க் கழன்மறவர்
எடுத்துரைப்பினு மத்துறையாகும். ௫

## பெருங்காஞ்சி

தாங்கு திறன்மறவர் தத்த மாற்றல்
வீங்கு பெரும்படையின் வெளிப்படுத் தன்று. ௬

## வாள் செலவு

அருமுனையா னறைகூவினபின்
செருமுனைமேல் வாள் சென்றன்று. ௭

## குடைச் செலவு

முதுகுடி மறவர் முன்னுறச் சூழக்
கொதியழல் வேலோன் குடைசென் றன்று. ௮

## வஞ்சினக்காஞ்சி

வெஞ்சின வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப
வஞ்சினங் கூறிய வகைமொழிந் தன்று. ௯

## பூக்கோணிலை

காரெதிரிய *கடற்றானை
போரெதிரிய பூக்கொண்டன்று. க0

---

* கடற்றானையான்—எனவும் பாடம்.

### தலைக்காஞ்சி

மைந்துயர மறங்கடந்தான்
பைந்தலைச் சிறப்புரைத்தன்று. ௧௧

### தலைமாராயம்

தலைகொடுவந்தா னுண்மலியச்
சிலையுடைவேந்தன் சிறப்பீந்தன்று. ௧௨

### தலையோடுமுடிதல்

மண்டமருண் மாறுமைந்திற்
கொண்டான்றலையோடு கோல்வளைமுடிந்தன்று ௧௩

### மறக்காஞ்சி

இலைப்பொலிதா ரிகல்வேந்தன்
மலைப்பொழிய *மறங்கடைஇயன்று. ௧௪

### இதுவுமது

மண்கெழு மறவன் மாறுநிலை நோனான்
புண்கிழித்து முடியினு மத்துறை யாகும். ௧௫

### பேய்நிலை

செருவேலோன் றிறநோக்கிப்
பிரிவின்றிப் பேயோம்பின்று. ௧௬

* மறங்கடாயின்று—எனவும் பாடம்.

## பேய்க்காஞ்சி

பிணம்பிறங்கிய களத்துவீழ்ந்தாற்கு
அணங்காற்ற வச்சுறீஇயன்று. கஎ

## தொட்டகாஞ்சி

வியன்மனைவிடலை புண்காப்பத்
துயன்முலைப்பேழ்வாய்ப் பேய்தொட்டன்று. கஅ

## தொடாக்காஞ்சி

அடலஞ்சா நெடுந்தகைபுண்
தொடலஞ்சித் துடித்தூங்கின்று. கக

## மன்னைக்காஞ்சி

வியலிடமருள விண்படர்ந்தோன்
இயல்பேத்தி யழிபிரங்கின்று. உ0

## கட்காஞ்சி

நறமலியு நறுந்தாரோன்
மறமைந்தர்க்கு மட்டீந்தன்று. உக

## * ஆஞ்சிக்காஞ்சி

காதற் கணவனொடு கனையெரி மூழ்கும்
மாதர்மெல் லியலின் மலிபுரைத் தன்று. உஉ

---

* அஞ்சிய காஞ்சி—என்பர் தொல்காப்பியர். அஞ்சியென்பது ஆஞ்சியயென நின்றது—என்பர் நச்சினார்க்கினியர். கணவன் உயிர்விடுதற்கு ஏதுவாயிருந்த வேலினால் மனைவி தன்னுயிரையும் மாய்த்துக் கொள்ளுதல்—என்பர் இளம்பூரணர்.

### இதுவுமது

மன்னுயிர் நீத்த வேலின் மனையோள்
இன்னுயிர் நீப்பினு மத்துறை யாகும். உரு

### மகட்பாற்காஞ்சி

ஏந்திழையாட் டருகென்னும்
வேந்தனோடு வேறுநின் றன்று. உசு

### முனைகடி முன்னிருப்பு

மன்னர்யாரையு *மறங்காற்றி
முன்னிருந்த முனைகடிந்தன்று. உஎ

* சினத்தைக் காலப் பண்ணி.

## ரு. நொச்சிப் படலம்

### சூத்திரம்

நுவலருங் காப்பி னொச்சி, ஏனை
மறனுடைப் பாசி, யூர்ச்செரு, வென்று
செருவிடை வீழ்தல், திண்பரி மறனே,
எயிலது போரே, எயிறனை யழித்தல்,
அழிபடை தாங்கல், மகண் மறுத்து மொழிதலென
எச்ச மின்றி யெண்ணிய வொன்பதும்
நொச்சித் *திணையுந் துறையு மாகும.

### நொச்சி

எப்புழை ஞாயி லேந்துநிலை யரணம்
காப்போர் சூடிய பூப்புகழ்ந் தன்று. க

### மறனுடைப் † பாசி

மறப்படை மறவேந்தர்
துறக்கத்துச் செலவுரைத் தன்று. உ

### ஊர்ச்செரு

அரு ‡ மிளையொடு கிடங்கழியாமைச்
செருமலைந்த சிறப்புரைத் தன்று. ங

* திணையது வகையென மொழிப—எனவும்பாடம்.
† பற்றுதல். ‡ காவற்காடு.

### சேருவிடை வீழ்தல்

ஆழ்ந்துபடு கிடங்கோ டருமிளை காத்து
வீழ்ந்த வேலோர் விறன்மிகுத் தன்று.

### குதிரை மறம்

ஏமாண்ட நெடும்புரிசை
வாமானது *வகையுரைத் தன்று.

### எயிற்போர்

அயிற்படையி னரண்காக்கும்
எயிற்படைஞ ரிகன்மிகுத்தன்று.

### எயிறனை யழித்தல்

துணிவுடைய தொடுகழலான்
அணிபுரிசை யழிவுரைத் தன்று.

### அழிபடைதாங்கல்

இழிபுடன் றிகல்பெருக
அழிபடை யரண்காத் தன்று.

### மகண்மறுத்து மொழிதல்

வெம்முரணோன் மகள்வேண்ட
அம்மதிலோன் மறுத்துரைத் தன்று.

---

* நிலையுரைத்தன்று—எனவும் பாடம்.

# ௬. உழிஞைப் படலம்

## சூத்திரம்

உழிஞை, யோங்கிய குடைநாட் கோளே,
வாணாட் கோளே, முரச வுழிஞை,
கொற்ற வுழிஞையோ, டரச வுழிஞை,
கந்தழி யென்றா, முற்றுழி ஞையே,
காந்தள், புறத்திறை, ஆரெயி லுழிஞை,
அருந்தோ லுழிஞை, குற்றுழி ஞையொடு,
கோட்புறத் துழிஞை, பாசி நிலையே,
ஏணி நிலையே, இலங்கெயிற் பாசி,
முதுவுழி ஞையே, முந்தகத் துழிஞை,
முற்று முதிர்வே, யானைகைக் கோளே,
வேற்றுப்படை வரவே, உழுதுவித் திடுதல்,
வாண்மண்ணு நிலையே, * மண்ணுமங் கலமே,
மகட்பா லிகலே, திறைகொண்டு † பெயர்தல்,
அடிப்பட விருத்தல், தொகைநிலை யுளப்பட,
இழுமென் சீர்த்தி யிருபத் தொன்பதும்
உழிஞை யென்பன ருணர்ந்திசி னோரே.

## உழிஞை

முடிமிசை யுழிஞை சூடி யொன்னார்
கொடிநுடங் காரெயிற் கொளக்கரு தின்று.

---

* மணமங்கலமே;
† பெய்தல்—எனவும் பாடங்கள்.

## குடைநாட்கோள்

செற்றடையார் மதில்கருதிக்
கொற்றவேந்தன் குடைநாட்கொண்டன்று. ௨

## வாணாட்கோள்

கலந்தடையார் மதில்கருதி
வலந்தரு வாணாட்கொண்டன்று. ௩

## முரசவுழிஞை

பொன்புனை யுழிஞை சூடி மறியருந்தும்
திண்பிணி முரச நிலையுரைத் தன்று. ௪

## கொற்றவுழிஞை

அடையாதா ரரண் * கொள்ளிய
படையோடு பரந்தெழுந் தன்று. ௫

## அரசவுழிஞை

தொழில்காவலன் மலிந்தியலும்
பொழில்காவலன் புகழ்விளம்பின்று. ௬

## கந்தழி

மாவுடைத்தார் மணிவண்ணன்
சோவுடைத்த மறநுவலின்று. ௭

* கொளீஇய—எனவும் பாடம்.

### முற்றுழிஞை

ஆடிய லவிர்சடையான்
சூடியபூச் சிறப்புரைத்தன்று. அ

### காந்தள்

கருங்கடலுண் மாத்தடிந்தான்
செழுங்காந்தட் சிறப்புரைத்தன்று. கூ

### புறத்திறை

மறத்துறைமலிந்து மண்டிமாற்றார்
விறற்கொடிமதிலின் புறத்திறுத்தன்று. க0

### ஆரெயிலுழிஞை

வாஅண்மறவர் வணங்காதார்
நீஇண்மதிலி னிலையுரைத்தன்று. கக

### *தோலுழிஞை

வென்றி யோடு புகழ்விளைக் கும்மெனத்
தொன்று வந்த தோன்மிகுத் தன்று. கஉ

### குற்றுழிஞை

கருதாதார் மதிற்‡ குமரிமேல்
ஒருதானாகி யிகன்மிகுத்தன்று. கந

---

* தோல்—கிடுகுபடை. † வணங்காதார்—எனவும் பாடம். ‡ குமரி—அழிவில்லாதது.

### இதுவுமது

வளைஞரல வயிரார்ப்ப
மிளைகடத்தலு மத்துறையாகும். கச

### இதுவுமது

பாடருந் *தோற் படைமறவர்
ஆடலொடடையினு மத்துறையாகும். கரு

### புறத்துழிஞை

விண்டோயு மிளைகடந்து
குண்டகழிப் புறந்திறுத்தன்று. கசு

### பாசிநிலை

அடங்காதார் மிடல்சாயக்
†கிடங்கிடைப் போர்மலைந்தன்று. கஎ

### ஏணிநிலை

தொடுகழன்மறவர் துன்னித்துன்னார்
இடு‡சூட்டிஞ்சியி னேணிசாத்தின்று. கஅ

### எயிற்பாசி

உடல்சினத்தார் கடியரணம்
மிடல்சாய மேலிவர்ந்தன்று. ககூ

---

* தோல்—தோற்பரிசை.

† கிடங்கினுள்—எனவும் பாடம்.

‡ ஏவறைகளையுடைய மதில்.

## முதுவுழிஞை

வேய்பிணங்கிய மிளையரணம்
பாய்புள்ளிற் பரந்திழிந்தன்று. உ0

## இதுவுமது

செருமதிலோர் சிறப்புரைத்தலும்
அருமுரணு னத்துறையாகும். உக

## அகத்துழிஞை

முரணவிய சினஞ்சிறந்தோர்
அரணகத்தோரை யமர்வென்றன்று. உஉ

## முற்று முதிர்வு

அகத்தோன் காலை யதிர்முர சியம்பப்
புறத்தோன் வெஞ்சினப் பொலிவுரைத்தன்று. உ௩

## யானை கைக்கோள்

மாறுகொண்டார் மதிலழிய
*வேறுந்தோட்டியு மெறிந்துகொண்டன்று. உ௪

## வேற்றுப்படை வரவு

மொய்திகழ் வேலோன் முற்றுவிட் டகலப்
பெய்தார் மார்பிற் பிறன்வர வுரைத்தன்று. உ௫

---

* யானையையும் காவலையும்

### உழுது வித்திடுதல்

எண்ணார் பல்லெயில் கழுதையே ருழுவித்து
உண்ணா வரகொடு கொள்வித் தன்று. உசு

### வாண்மண்ணுநிலை

புண்ணிய நீரிற் *புரையோ ரேத்த
மண்ணிய வாளின் மறங்கிளந் தன்று. உஎ

### மண்ணுமங்கலம்

வணங்காதார் மதிற்குமரியொடு
மணங்கூடிய மலிபுரைத் தன்று. உஅ

### மகட்பாலிகல்

மயிற்சாயன் மகள்வேண்டிய
†கயிற்கழலோ னிலையுரைத் தன்று. உகூ

### திறைகொண்டு பெயர்தல்

அடுதிற லரணத் தரசு ‡வழிமொழியப்
படுதிறை கொண்டு பதிப்பெயர்ந் தன்று. ௩0

### அடிப்பட விருத்தல்

பேணாதார் மறங்கால
ஆணைகொண் டடிப்படவிருந் தன்று. ௩க

### தோகைநிலை

எம்மதிலி னிகல்வேந்தரும்
அம்மதிலி னடியடைந் தன்று. ௩உ

---

* உயர்ந்தோர். † மூட்டுவாயாற் சிறந்த வீரக் கழலினை யுடையான். ‡ தாழ்வு சொல்ல.

# எ. தும்பைப் படலம்

## சூத்திரம்

துன்னருங் கடும்போர்த் தும்பை, தும்பை யரவம்,
தன்னிக ரில்லாத் தானை மறமே,
யானை மறத்தொடு, குதிரை மறமே,
தார்நிலை, தேர்மறம், பாணது பாட்டே,
இருவருந் தபுநிலை, எருமை மறமே,
எம வெருமை, நூழி லென்று,
நூழி லாட்டே, மூன்றேர்க் குரவை,
பின்றேர்க் குரவை, பேய்க்குர வையே,
களிற்றுட னிலையே, ஒள்வா ளமலை,
தானை நிலையே, வெருவரு நிலையே,
சிருங்கார நிலையே, உவகைக் கலுழ்ச்சி,
தன்னை வேட்டல், தொகைநிலை யுளப்பட
நன்பொரு டெரிந்தோர் நாலிரு மூன்றும்
வண்பூந் தும்பை வகையென மொழிப.

## தும்பை

செங்களத்து மறங்கருதிப்
பைந் தும்பை தலைமலைந்தன்று.

## தும்பையரவம்

பொன்புனைந்த கழலடியோன்
தன்படையைத் தலையளித்தன்று.

### தானைமறம்

தாம்படைத் *தலைக்கொள்ளாமை
†ஓம்படுத்து ‡வுயர்கூறின்று. ரு

### இதுவுமது

பூம்பொழிற் புறங்காவலனை
§ஓம்படுத்தற்கு முரித்தெனமொழிப. ௬

### இதுவுமது

வேற்றானை மறங்கூறி மாற்றாரதழிபிரங்கினும்
ஆற்றி னுணரி னத்துறை யாகும். ௭

### யானைமறம்

எழுமரவக் கடற்றானையான்
மழகளிற்றின் மறங்கிளந்தன்று. ௬

### குதிரைமறம்

எறிபடையா னிகலமருட்
செறி $படைமான் றிறங்கிளந்தன்று. எ

### தார்நிலை

முன்னெழுதரு படைதாங்குவனென
மன்னவற்கு மறங்கிளந்தன்று. அ

---

* தலைக்கொள்ளல்—ஏற்றமடைதல்.
† காவல்செய்த. ‡ உயர்பு—எனவும் பாடம்.
§ உறுதி கூறுதற்கு. $ படை—கல்லணை.

### இதுவுமது

ஒருகுடை மன்னனைப் பலகுடை நெருங்கச்
செருவிடைத் தமியன் றாங்கற்கு றுரித்தே. ௯

### தேர்மறம்

முறிமலர்த்தார் வயவேந்தன்
செறிமணித்தேர்ச் சிறப்புரைத்தன்று. ௧0

### பாண்பாட்டு

வெண்கோட்ட களிறெறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக்
கைவல்யாழ்ப் பாணர் கடனிறுத் தன்று. ௧௧

### இருவருந் *தபுநிலை

பொருபடை களத்தவிய
இருவேந்தரு மிகலவிந்தன்று. ௧உ

### எருமைமறம்

வெயர்பொடிப்பச் சினங்†கடைஇப்
பெயர்படைக்குப் பின்னின்றன்று. ௧௩

### ஏமவெருமை

குடைமயங்கிய வாளமருட்
‡படைமயங்கப் §பாழிகொண்டன்று. ௧௪

* தபுதல்—கெடுதல், சாதல். † கடாவி.

‡ தானெறிந்தவேல் பொருகளிற்றின் மத்தகத்துக்குளிப்ப.

§ பாழி—வெற்றி.

### நூழில்

கழல்வேந்தர் படைவிலங்கி
அழல்வேறிரித் தாட்டமர்ந்தன்று. கரு

### நூழிலாட்டு

களங்கழுமிய படையிரிய
*உளங்கழிந்தவேல் பறித்தோச்சின்று. கசு

### முன்றேர்க்குரவை

எழுவுறழ் திணிதோள் வேந்தன் †வெஃறேர்
முழுவலி வயவர் முன்னா டின்று. கஎ

### பின்றேர்க்குரவை

கருங்கழன் மறவரொடு வெள்வளை விறலியர்
பெருந்தகை தேரின் பின்னா டின்று. கஅ

### பேய்க்குரவை

மன்ன னூரு மறமிகு மணித்தேர்ப்
பின்னு முன்னும் பேயா டின்று. கக

### களிற்றுடனிலை

ஒளிற்றெஃகம் படவீழ்ந்த
களிற்றின்கீழ்க் கண்படுத்தன்று. உ0

---

* உளங்கிழித்த—எனவும் பாடம்.
† வெல்+தேர்.

### ஒள்வாளமலை

வலிகெழுதோள் வாள்வயவர்
ஒலிகழலா னுடனுடின்று. உக

### தானைநிலை

இருபடையு மறம்பழிச்சப்
பொருகளத்துப் பொலிவெய்தின்று. உஉ

### வேநுவநுநிலை

விலங்கமருள் வியலகலம்
வில்லுதைத்த கணைகிழிப்ப
நிலந்தீண்டா வகைப்பொலிந்த
நெடுந்தகைநிலை யுரைத்தன்று. உங.

### சிநுங்காரநிலை

பகைபுகழக் கிடந்தானை
முகைமுறுவலார் முயக்கமர்ந்தன்று. உச

### உவகைக்கலுழ்ச்சி

வாள்வாய்த்த வடுவாழ்யாக்கைக்
கேள்கண்டு கலுழ்ந்துவந்தன்று. உ௫

### * தன்னைவேட்டல்

தம்மிறைவன் விசும்படைந்தென
வெம்முரணோ †னுயிர்வேட்டன்று.

காய்கதிர் நெடுவேர் கணவனைக் காணிய
ஆயிழை சேறலு மத்துறை யாகும்.

அழிவின்று புகழ்நிறீஇ
ஒழிவின்று களத்தொழிந்தன்று.

## ௮. வாகைப் படலம்

சீர்சால் வாகை, வாகை யரவம்,
அரச வாகை, முரச வாகை,
மறக்கள வழியொடு, களவேள் வியயே,
முன்றேர்க் குரவை; பின்றேர்க் குரவை,

---

* இத்துறை தன்னுறுதொழிலின் பாற்படும்.
† உயிரை ஆகுதி பண்ணியது.

பார்ப்பன வாகை, வாணிக வாகை,
வேளாண் வாகை, பொருந வாகை,
அறிவன் வாகை, தாபத வாகை,
கூதிர்ப் பாசறை, வாடைப் பாசறை,
அரச முல்லை, பார்ப்பன முல்லை,
அவைய முல்லை, கணிவன் முல்லை,
மூதின் முல்லை, ஏறாண் முல்லை,
வல்லாண் முல்லை, காவன் முல்லை.
பேராண் முல்லை, மறமுல் லையே,
குடைமுல் லையொடு, கண்படை நிலையே,
அவிப்பலி யென்று, சால்பு முல்லை,
கிணைநிலை, ஏனைப் பொருளொடு புகறல்,
அருளொடு நீங்கல் உளப்படத் தொகைஇ,
மூன்று *தலையிட்ட மூவி ரைந்தும்
வான்றோய் வாகைத் திணையது வகையே.

### வாகை

இலைபுனை வாகை சூடி
அலைகடற் றானை யரசட் டார்த்தன்று.

### வாகையரவம்

†வெண்கண்ணியுங் கருங்கழலும்
செங்கச்சுந் தகைபுனைந்தன்று

ப்பட்ட—எனவும் பாடம்.

† கொத்தான்வாகை.

### அரசவாகை

*பகலன்ன வாய்மொழி
இகல்வேந்த னியல்புரைத்தன்று.

### முரசவாகை

ஒலிகழலா னகனகருட்
பலிபெறுமுரசின் பண்புரைத் தன்று.

### மறக்களவழி

முழவுறழ் திணிதோளானை
உழவனாக வுரைமலிந்தன்று.

### களவேள்வி

அடுதிற லணங்கார
விடுதிறலான் களம்வேட்டன்று.

வென்றேந்திய விறற்படையோன்
முன்றேர்க் கணணங்காடின்று.

பெய்கழலான் றேரின்பின்
மொய்வளைவிறலியர் வயவரொடாடின்று.

* பகல்—நுகத்தினடுவாணி.

### பார்ப்பனவாகை

கேள்வியாற் சிறப்பெய்தியானை
வேள்வியான் விறன்மிகுத்தன்று. கூ

### வாணிகவாகை

செறுதொழிலிற் சேணீங்கியான்
அறுதொழிலு மெடுத்துரைத்தன்று. க0

### வேளாண்வாகை

மேன்மூவரு மனம்புகல
வாய்மையான் *வழியொழுகின்று. கக

### பொருநவாகை

புகழொடு பெருமை நோக்கி யாரையும்
இகழ்த லோம்பென வெடுத்துரைத் தன்று. கஉ.

### அறிவன்வாகை

புகழ்நுவல முக்காலமும்
நிகழ்பறிவ னியல்புரைத்தன்று. கங

### தாபதவாகை

தாபத முனிவர் தவத்தொடு முயங்கி
ஓவுத லறியா வொழுக்குரைத் தன்று. கச

* வழிமொழிந்தன்று—எனவும்பாடம்.

### கூதிர்ப்பாசறை

கூற்றனையான் வியன்கட்டூர்
  கூதிர்வான் * றுளிவழங்க
ஆற்றாமை நனிபெருகவு
  மயில்வேலோ னனிதுறந்தன்று. கரு

### வாடைப்பாசறை

வெந்திறலான் வியன்பாசறை
  வேல்வயவர் விதிர்ப்பெய்த
வந்துலாய்த் துயர்செய்யும்
  வாடையது † மலிபுரைத்தன்று. கசு

### அரசமுல்லை

செருமுனை யுடற்றுஞ் செஞ்சுடர் நெடுவேல்
இருநிலங் காவல னியல்புரைத் தன்று. கஎ

### பார்ப்பனமுல்லை

கான்மலியு நறுந்தெரியற் கழல்வேந்த ரிகலவிக்கும்
நான்மறையோ னலம்பெருகு நடுவுநிலை யுரைத்தன்று

### அவையமுல்லை

நவைநீங்க நடுவுகூறும்
அவைமாந்த ரியல்புரைத்தன்று. கக

---

* தளி—எனவும் பாடம்.
† மலிவு—எனவும் பாடம்.

### கணிவன்முல்லை

துணிபுணருந் தொல்கேள்விக்
கணிவனது புகழ்கிளந்தன்று. ௨0

### * மூதின்முல்லை

அடல்வே லாடவர்க் கன்றியு மவ்வில்
மடவரன் மகளிர்க்கு மறமிகுந் தன்று. ௨௧

### † ஏறாண்முல்லை

‡ மாறின்றி § மறங்கனலும்
ஏறாண்குடி யெடுத்துரைத்தன்று. ௨௨

### வல்லாண்முல்லை

இல்லும் பதியு மியல்புங் கூறி
நல்லாண் மையை நலமிகுத் தன்று. ௨௩

### காவன்முல்லை

தவழ்திரை முழங்குந் தண்கடல் வேலிக்
கமழ்தார் மன்னவன் காவன் மிகுத்தன்று. ௨௪

---

* மூதில்—பழையகுடி.

† ஏறாண் — மேன்மேலேறுகின்ற ஆண்மைத் தன்மை.

‡ எதிரின்றியொழிய.

§ மனங்—எனவும் பாடம்.

## இதுவுமது

தக்காங்குப் பிறர்கூறினும்
அத்துறைக் குரித்தாகும். உ௫

## பேராண்முல்லை

உளம்புகல மறவேந்தன்
களங்கொண்ட சிறப்புரைத்தன்று. உ௬

## மறமுல்லை

வெள்வாள் வேந்தன் வேண்டிய தீயவும்
கொள்ளா மறவன் கொதிப்புரைத் தன்று. உ௭

## குடைமுல்லை

மொய்தாங்கிய முழுவலித்தோட்
கொய்தாரான் குடைபுகழ்ந்தன்று. உ௮

## * கண்படைநிலை

மண்கொண்ட மறவேந்தன்
கண்படைநிலை மலிந்தன்று. உ௯

## † அவிப்பலி

வெள்வா ளமருட் செஞ்சோ றல்லது
உள்ளா மைந்த ருயிர்ப்பலி கொடுத்தன்று. ௩0

* கண்படை—துயில்.
† அவி—ஆவி; குறுக்கல் விகாரம்.

## சால்புமுல்லை

வான்றோயு மலையன்ன
சான்றோர்தஞ் சால்புரைத்தன்று. ரு௧

தண்பணை வயலுழவனைத்
தெண்கிணைவன் றிருந்துபுகழ்கிளந்தன்று. ரு௨

## பொருளொடுபுகறல்

வையகத்து விழைவறுத்து
மெய்யாய பொருணயந்தன்று. ரு௩

## அருளொடு நீங்கல்

ஒலிகடல் வையகத்து
நலிவுகண்டு நயப்பவிர்ந்தன்று. ரு௪

---

## ௯. பாடாண் படலம்

பாடாண் பாட்டே, வாயி னிலையே,
கடவுள் வாழ்த்தொடு, பூவை நிலையே,

இணை—மருதப்பறை.

பரிசிற் றுறையே, இயன்மொழி வாழ்த்தே,
கண்படை நிலையே, துயிலெடை நிலையே,
மங்கல நிலையொடு, விளக்கு நிலையே,
கபிலை கண்ணிய புண்ணிய நிலையே,
வேள்வி நிலையொடு, வெள்ளி நிலையே,
நாடு வாழ்த்தொடு, கிணையது நிலையே,
களவழி வாழ்த்தே,
வீற்றினி திருந்த பெருமங் கலமே,
குடுமி களைந்த புகழ்சாற்று நிலையே,
மணமங் கலமே, பொலிவுமங் கலமே,
நாண்மங் கலமே, பரிசி னிலையே,
பரிசில் விடையே, ஆள்வினை வேள்வி,
பாணாற்றுப் படையே, கூத்தராற்றுப் படையே,
*பொருநராற்றுப் படையொடு, விறலியாற்றுப் படை
வாயுறை வாழ்த்தே, செவியறி வுறூஉ, [யே
குடைமங் கலமொடு, வாண்மங் கலமே,
மண்ணுமங் கலமே, ஓம்படை, ஏனைப்
புறநிலை வாழ்த்தும் உளப்படத் தொகைஇ
அமரர்கண் † முடியு மறுவகை யாகிய
கொடிநிலை, கந்தழி, வள்ளி, குணஞ்சால்
புலவரை யவர்வயிற் புகழ்ந்தாற்றுப் படுத்தல்,
புகழ்ந்தனர் பரவல், பழிச்சினர்ப் ‡ பணிதல்
நிகழ்ந்த காமப் பகுதியுட் டோன்றிய

* பொருநராற்றுப்படை—எனவும் பாடம்.
† சேரும்.
‡ பரவல் எனவும் பாடம்.

கைக்கிளை வகையும், பெருந்திணை வகையும்,
நற்றுணி நவின்ற பாடாண் பாட்டும்,
கடவுட் பக்கத்தும், ஏனோர் பக்கத்தும்
மடவரன் மகளிர் மகிழ்ந்த பக்கமும்,
மாதர் மகிழ்ந்த குழவியும், ஊரின்
கண்ணே தோன்றிய காமப் பகுதியொடு
ஆங்க வாறெண் பகுதிம் பொருளும்
பாங்குற வுரைப்பது பாடாண் பாட்டே.

## பாடாண்பாட்டு

ஒளியு மாற்றலு மோம்பா வீகையும்
அளியு மென்றிவை யாய்ந்துரைத் தன்று. க

## வாயினிலை

புரவல னெடுங்கடை குறுகிய என்னிலை
கரவின் றுரையெனக் காவலற் குரைத் தன்று. உ

## கடவுள் வாழ்த்து

காவல் கண்ணிய கழலோன் கைதொழும்
மூவரி லொருவனை யெடுத்துரைத்தன்று ௩

## பூவைநிலை

கறவை காவல னிறனொடு பொரீஇப்
*புரவலர் †பூவைப் பூப்புகழ்ந் தன்று.

* புறவு அலர்—காட்டிடத்தலரும்.
† பூவைப்பூ—காயாம்பூ.

## பரிசிற்றுறை

மண்ணகங் காவன் மன்னன் முன்னர்
எண்ணிய பரிசி லிதுவென வுரைத்தன்று. ௫

## இயன்மொழி வாழ்த்து

இன்னோ ரின்னவை கொடுத்தார் நீயும்
அன்னோர் போல வவையெமக் கீகென
என்னோரு மறிய வெடுத்துரைத் தன்று. ௬

## இதுவுமது

மயலறு சீர்த்தி மான்றேர் மன்னவன்
இயல்பே மொழியினு மத்துறை யாகும். ௭

## கண்படைநிலை

நெடுந்தேர்த் தானை நீறுபட நடக்கும்
கடுந்தேர் மன்னவன் கண்படை மலிந்தன்று. ௮

## * துயிலெடைநிலை

அடுதிறன் மன்னரை யருளிய வெழுகெனத்
தொடுகழன் மன்னனைத் துயிலெடுப் பின்று. ௯

## மங்கலநிலை

கங்குற் கனைதுயி லெழுந்தோன் முன்னர்
மங்கலங் கூறிய மலிவுரைத் தன்று. ௧௦

* துயிலெடை—துயிலினின்றும் எழச் செய்தல்.

## இதுவுமது

மன்னிய சிறப்பின் மங்கல மரபின்
துன்னின னென்றலு மத்துறை யாகும். ௧௧

## விளக்குநிலை

அளப்பருங் கடற்றானையான்
விளக்குநிலை விரித்துரைத்தன்று. ௧௨

## இதுவுமது

* அடரவிர் பைம்பூண் வேந்தன் றன்னைச்
† சுடரொடு பொருவினு மத்துறை யாகும். ௧௩

## கபிலைகண்ணிய புண்ணியநிலை

அண்ண லான்மறை யந்தண ளர்க்குக்
கண்ணிய ‡ கபிலை நிலையுரைத் தன்று. ௧௪

## வேள்விநிலை

அந்தமில் புகழா னமரரு மகிழச்
செந்தீ வேட்ட சிறப்புரைத் தன்று. ௧௫

## § வெள்ளிநிலை

துயர்தீரப் புயறருமென
உயர்வெள்ளி நிலையுரைத்தன்று. ௧௬

---

* அடர்—பொற்றகடு. † சுடர்—ஆதித்தன்.
‡ பசு. § வெள்ளி—வெள்ளிக்கோள்.

### நாடுவாழ்த்து

தாட்டாழ் தடக்கையான்
காட்டது

திருக்கிளரு மகன்கோயில்
*அரிக்கிணைவன் வளமுரைத்தன்று.

### களவழி வாழ்த்து

செங்களத்துச் செழுஞ்செல்வம்
†வெண்டுறையாழ்ப் பாணர்விளம்பின்று.

### வீற்றினிதிருந்தபெருமங்கலம்

கூற்றிருந்த கொலைவேலான்
ன்று.      உ0

### குடுமிகளைந்தபுகழ்சாற்றுநிலை

நெடுமதி லெறிந்து நிரைதார் மன்னன்
‡குடுமி களைந்த மலிவுரைத் தன்று.      உக

---

* அரி—அழகு.

† வெண்டுறை—யாழ்ப்பாட்டு.

‡ குடுமிகளைந்த—மதிலரசர் மணிமுடி கடந்த. குடுமிகளைந்தான்—தன்மயிர்ச்சிகையைக் கூட்டி முடித்தான் என்பர் இவ்வாசிரியர்.

### மணமங்கலம்

இகலடுதோ ளெறிவேன்மன்னன்
மகளிரொடு மணந்த மங்கலங் கூறின்று. ௨௨

### பொலிவுமங்கலம்

வேல்வேந்த னுண்மகிழப்
பாலன் பிறப்பப் பலர்புகழ்ந் தன்று. ௨௩

### நாண்மங்கலம்

அறந்தருசெங்கோ லருள்வெய்யோன்
பிறந்தநாட் சிறப்புரைத்தன்று.

### பரிசினிலை

புரவலன் மகிழ்தூங்க
இரவலன் *கடைக்கூடின்று

### பரிசில்விடை

மகி
ஈந்து பரிசி லின்புற விடுத்தன்று.

### ஆள்வினைவேள்வி

வினைமுற்றிய கனைகழலோன்
‡மனைவேள்வி மலிவுரைத்தன்று.

---

* போவானாக ஒருப்பட்டது.
† முயற்சியாற் செய்யும் புண்ணியம்.
‡ விருந்தோம்பல்.

### பாணாற்றுப்படை

சேணோங்கிய வரையதரில்
பாணனை *யாற்றுப்படுத்தன்று.

### கூத்தராற்றுப்படை

எத்திச்சென்ற வீரவலன்
கூத்தரை யாற்றுப்படுத்தன்று.

### பொருநராற்றுப்படை

பெருநல்லா னுழையீராகெனப்
†பொருநனை யாற்றுப்படுத்தன்று.

### விறலியாற்றுப்படை

திறல்வேந்தன் புகழ்பாடும்
‡விறலியை யாற்றுப்படுத்தன்று.

### வாயுறைவாழ்த்து

பிற்பயக்கு மெஞ்சொல்லென
§முற்படர்ந்த மொழிமிகுத்தன்று.

மறந்திரி வில்லா மன்பெருஞ் ¶சூழ்ச்சி
அறந்தெரி கோலாற் கறிய வுரைத்தன்று.

---

* வழியிலே செலுத்தியது.
† பொருநன்-புகழ்ந்து பாடுவோன்.
‡ விறலி—பாணிச்சி. § மேம்பட்ட.
§§ நல்லறிவுபுகட்டல். ¶ நல்லெண்ணம்.

### குடைமங்கலம்

நாற்றிசையும் புகழ்பெருக
வீற்றிருந்தான் குடைபுகழ்ந்தன்று. ௩௪

### வாண்மங்கலம்

*கயக்கருங் கடற்றானை
வயக்களிற்றான் வாள்புகழ்ந்தன்று. ௩௫

### † மண்ணுமங்கலம்

எண்ணருஞ் சீர்த்தி யிறைவ னெய்தி
மண்ணு மங்கல மலிவுரைத் தன்று. ௩௬

### ‡ ஓம்படை

இன்னது செய்த லியல்பென விறைவன்
முன்னின் றறிவன் மொழிதொடர்ந் தன்று. ௩௭

### புறநிலைவாழ்த்து

வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப
வழிவழி சிறக்கென வாய்மொழிந் தன்று. ௩௮

* கயக்குதல்—மெலிவித்தல்.

† மண்ணுதல்—மஞ்சனம் பண்ணுதல்.

‡ அரசன் தன்னைத்தான் பாதுகாத்துக் கொள்ளத் தக்க மெய்ப்பொருட்களை அறிவன் எடுத்துச் சொல்வது.

மூவர்கொடி யுள்ளு மொன்றொடு பொரீஇ
மேவரு மன்னவன் கொடிபுகழ்ந் தன்று. ௩௯

### * கந்தழி

சூழுநேமியான் †சோவெறிந்த
வீழாச்சீர் விறன்மிகுத்தன்று.

### வள்ளி

பூண்முலையார் மனமுருக
வேன்முருகற்கு வெறியாடின்று.

### புலவராற்றுப்படை

இருங்கண்வானத் திமையோருழைப்
பெரும்புலவனை யாற்றுப்படுத்தன்று.

---

* தீப்பிழம்பு—என்பர் மறைமலையடிகள்.

* † சோ என்னும் அரண். (௬0)

மாயவன் மாய மதுவான் மணிநிரையு
ளாயனு வெண்ண லவனருளான்—காயக
கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்
சுழலழலுள் வைகின்று சோ. என்னும் புறப்
பொருள் வெண்பாவின் கருத்தையும் நோக்குக.

## * புகழ்ந்தனர் பரவல்

இன்னதொன் றெய்துது மிருநிலத் தியாமெனத்
துன்னருங் கடவுட் †டொடுகழ றொழுதன்று. சங

## பழிச்சினர் பணிதல்

வயங்கியபுகழ் வானவனைப்
பயன்கருதிப் ‡பழிச்சினர்ப்பணிந்தன்று. சச

## கை

தண்டாக் காதற் றளரிய றலைவன்
வண்டார் விரும்பிய வகையுரைத் தன்று. சரு

## பெருந்திணை

பெய்கழற் பெருந்தகை பேணா முயக்கிவர்ந்து
மல்கிருட் செல்வோள் வகையுரைத் தன்று. சசு

## புலவிபொருளாகத் தோன்றிய பாடாண்பாட்டு

வில்லேர் நுதலி விறலோன் மார்பம்
புல்லேம் யாமெனப் புலந்துரைத் தன்று. சஎ

## கடவுண்மாட்டுக் கடவுட்பெண்டிர் நயந்தபக்கம்

இமையா நாட்டத் திலங்கிழை மகளிர்
அமையாக் காத லமரரை மகிழ்ந்தன்று சஅ

* புகழ்ந்தனர்—புகழ்ந்தனராய்.
† கட்டும் வீரக் கழலையுடைய பாதங்கள்.
‡ பழிச்சினர் பணிந்தன்று—எனவும் பாடம்.

### கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தபக்கம்

முக்கணான் முயக்கம்வேட்ட
மக்கட்பெண்டிர் மலிவுரைத்தன்று. சக

### குழவிக்கட் டோன்றிய காமப்பகுதி

இளமைந்தர் நலம்வேட்ட
வளமங்கையர் வகையுரைத்தன்று. ரு0

### ஊரின்கட் டோன்றிய காமப்பகுதி

நீங்காக் காதன் மைந்தரு மகளிரும்
பாங்குறக் கூடும் பதியுரைத் தன்று. ருக

## க0. பொதுவியற் படலம்

### சூத்திரம்

சீர்சால் போந்தை, வேம்பொடு, ஆரே,
நிலையே, எழுக நிலையே,
கழணிலை, எனைக் கற்காண் டல்லே,
கற்கோ ணிலையே, கன்னீர்ப் படுத்தல்,
கன்னடு தல்லே, கன்முறை பழிச்சல்,
இற்கொண்டு புகுதல் †என்றபன் னிரண்டும்
பொதுவியற் பால வென்மனார் புலவர்.

† எனப்பன்—எனவும் பாடம்.

### * போந்தை

கலவா மன்னர் கண்ணுறு ஞாட்பிற்
புலவேல் †வானவன் பூப்புகழ்ந் தன்று. க

### வேம்பு

விரும்பா ரமரிடை வெல்போர் ‡வழுதி
சுரும்பார் முடிமிசைப் பூப்புகழ்ந் தன்று. உ

### § ஆர்

விறற்படை மறவர் வெஞ்சமங் காணின்
மறப்போர்ச் $செம்பியன் மலைபூ வுரைத்தன்று ௩

துன்னருஞ் சிறப்பிற் றொடுகழன் மன்னனை
¶உன்னஞ் சேர்த்தி யுறுபுகழ் மலிந்தன்று. ச

**ஏழக மூரினு மின்ன னென்றவன்
தாழ்வி லூக்கமொடு தகைபுகழ்ந் தன்று.

ஏந்துபுக ழுலகி னிளமை நோக்கான்
வேந்து நிற்றலு மேழக நிலையே.

* பனம்பூ. † சேரன். ‡ பாண்டியன்.
§ நிமித்தம் பார்க்குமரம். $ சோழன்.
¶ ஆத்தி. ** செம்மறியாட்டுக் கடா.

10

### கழனிலை

அடுமுர ணகற்று மாளுகு ஞாட்பிற்
கடுமுரண் வயவன் கழல்புனைந் தன்று.

### கற்காண்டல்

ஆறு வென்றி யமரில் வீழ்ந் தோர்க்குக்
கான நீளிடைக் கற்கண் டன்று.

### கற்கோணிலை

மண்மருளத் துடிகறங்க
விண்மேயார்க்குக் கற்கொண்டன்று.

### கன்னீர்ப்படுத்தல்

வண்டுசூழ் தாமம் புடையே யலம்வரக்
கண்டு கொண்ட கன்னீர்ப் படுத்தன்று.

### இதுவுமது

ஓங்கியகல் லுய்த்தொழுக்கல்
ஆங்கெண்ணி னுமத் துறையாகும்.

### கன்னடுதல்

அவன்பெயர்கன் மிசைப்பொறித்துக்
கவின்பெறக் கன்னாட்டின்று.

### கன்முறைபழிச்சல்

நிழலவி ழெழின்மணிப்பூட்
கழல்வெய்யோன் கல்வாழ்த்தின்று. ௨ ௩

ல்

வேத்தமருள் விளிந்தோன்கல்லென
ஏத்தினர்துவன்றி *யிற்கொண்டுபுக்கன்று. கச

---

## [சிறப்பிற் பொதுவியற்பால]

முதுபாலையே, சுரநடை, ஏனைத்
தபுதார நிலையே, தாபத நிலையே,
தலைப்பெய னிலையே, பூசன் மயக்கே,
மாலை நிலையே, மூதா னந்தம்,
ஆனந் தம்மே, ஆனந்தப் பையுள்,
கையறு நிலையுளப் படப்பதி னொன்றும்
மையறு சிறப்பிற் பொதுவியற் பால.

### முதுபாலை

†காம்புயர் கடத்திடைக் கணவனை யிழந்த
நங்கொடி மடந்தை புலம்புரைத் தன்று.

* கோயிலெடுத்துப் புக்கது.

† காம்புயர்கடம் - மூங்கில் ஓங்கின கானகம்.

### கூாநடை

*மூதரி னிவந்த †முதுகழை யாரிடைக்
காதலி யிழந்த கணவனிலை யுரைத்தன்று. ௨

### தபுதாரநிலை

புனையிழை யிழந்தபிற் புலம்பொடு வைகி
மனையகத் துறையு மைந்தனிலை யுரைத்தன்று. ௩

### தாபதநிலை

குருந்தலர் கண்ணிக் கொழுநன் மாய்ந்தெனக்
கருந்தடங் கண்ணி கைம்மைகூ றின்று. ௪

### தலைப்பெயனிலை

இன்கதிர் முறுவற் பாலக னென்னுந்
தன்கட னிறுத்ததாய் தபுநிலை யுரைத்தன்று. ௫

### பூசன் மயக்கு

‡பல்லிதழ் மழைக்கட் பாலகன் மாய்ந்தெனப்
புல்லிய பெருங்கிளைப் பூசல் கூறின்று. ௬

### இதுவுமது

வேந்தன் மாய்ந்தென வியலிடம் புலம்பினும்
ஆய்ந்த புலவ ரதுவென மொழிப. ௭

---

* மூது அரில் நிவந்த-முதிர்ந்த பிணக்க மோங்கிய.
† முது கழை ஆர் இடை - முற்றின மூங்கில் நிறைந்த இடம். ‡ மலர்.

### மாலைநிலை

கதிர்வேற் கணவனொடு கனையெரி மூழ்க
மதியேர் நுதலி மாலைநின் றன்று. அ

### மூதானந்தம்

கயலேர் கண்ணி கணவனொடு முடிய
வியனெறிச் செல்வோர் வியந்துரைத் தன்று. கூ

### இதுவுமது

கொடியான் கூர்ங்கணை குளிப்பத் தன்றொழில்
முடியா னவிதலு மூதா னந்தம். க0

### ஆனந்தம்

ஆடமைத் தோளி *விரிச்சியுஞ் †சொகினமும்
வேறுபட வஞ்சி விதுப்புற் றன்று. கக

### இதுவுமது

தவப்பெரிய வெஞ்சமங்குறுகும்
அவற்கிரங்கினு மத்துறையாகும். க௨

### ஆனந்தப் ‡பையுள்

விழுமங் கூர வேய்த்தோ ளரிவை
கொழுநன் வீயக் குழைந்துயங் கின்று. க௩

---

* நற்சொற் கேட்டல்.
† நிமித்தம்; சோகி - எனவும் பாடம். ‡ நோய்.

### கையறு நிலை

செய்கழன் மன்னன் மாய்ந்தெனச் சேர்ந்தோர்
*கையற வுரைத்துக் கைசோர்ந் தன்று.

### இதுவுமது

கழிந்தோன் றன்புகழ் காதலித் துரைப்பினும்
மொழிந்தனர் புலவ ரத்துறை யென்ப.

---

## [காஞ்சி பொதுவியற்பால]

### சூத்திரம்

முதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சி,
பெருங்காஞ் சியே, பொருண்மொழிக் காஞ்சி,
புலவ ரேத்தும் புத்தே ணட்டொடு,
முதுகாஞ் சியொடு, காடுவாழ்த் துளப்பட
மையறு சீர்த்தி வருமிரு மூன்றும்
பொய்தீர் காஞ்சிப் பொதுவியற் பால.

### முதுமொழிக் காஞ்சி

பலர்புகழ் புலவர் பன்னினர் தெரியும்
உலகியல் பொருண்முடி புணரக் கூறின்று.

---

* கையறவு - இறத்தல்.

## பெருங்காஞ்சி

மலையோங்கிய மாநிலத்து
நிலையாமை நெறியுரைத்தன்று — உ

## பொருண்மொழிக் காஞ்சி

*எரிந் திலங்கு சடைமுடி முனிவர்
புரிந்து கண்ட பொருண்மொழிந் தன்று. — ங

## புலவரேத்தும் புத்தேணடு

நுழைபுலம் படர்ந்த நோயறு காட்சி
விழைபுலங் கடந்தோர் வீடுரைத் தன்று. — ச

## முதுகாஞ்சி

தலைவரும் பொருளைத் தக்காங் குணர்த்தி
நிலைநிலை யாமை நெறிப்பட வுரைத்தன்று. — ரு

## † காடுவாழ்த்து

பல்லவர்க் கிரங்கும் பாடிமிழ் ‡நெய்தல்
கல்லென வொலிக்கும் காடுவாழ்த் தின்று. — சு

---

* அவிர்ந்து விளங்கும்.
† காடு—சுடுகாடு. ‡ சாப்பறை.

## [முல்லைப் பொதுவியற்பால]

### சூத்திரம்

சீர்சான் முல்லையொடு, கார்முல்லை யென்றா,
தேர்முல் லையொடு, நாண்முல்லை யென்றா,
இல்லாண் முல்லையொடு, பகட்டுமுல்லை யென்றா,
பான்முல் லையொடு, கற்புமுல்லை யென்றாங்கு
இருநான் முல்லையும் பொதுவியற் பால.

### முல்லை

தடவரை மார்பன் றன்னமர் காதல்
மடவரற் புணர்ந்த மகிழ்ச்சிநிலை யுரைத்தன்று.

### கார்முல்லை

அருந்திறற் கட்டு ரவர்வா ராமுன்
கருங்கடன் முகந்து கார்வந் தன்று.

### தேர்முல்லை

உருத்தெழு மன்ன ரொன்னார் தந்நிலை
திருத்திய காதலர் தேர்வர வுரைத்தன்று.

### நாண்முல்லை

செருநர் நாணச் சேயிழை யரிவை
வறுமனை வைகித் தற்காத் தன்று.

## இல்லாண்முல்லை

கழுமிய காதற் கணவனைப் பழிச்சி
இழுமென் சீர்த்தி இல்மலி புரைத்தன்று. ரு

## பகட்டுமுல்லை

வயன்மிகு சிறப்பின் வருத்தமு நோன்மையும்
வியன்மனைக் கிழவனைப் *பகட்டொடு பொரீஇயன்று.

## பான்முல்லை

அரிபா யுண்க ணாயிழைப் புணர்ந்தோன்
பரிவக லுள்ளமொடு †பால்வாழ்த் தின்று. எ

## கற்புமுல்லை

பொன்றிகழ் சுணங்கிற் பூங்க ணரிவை
நன்றறி கொழுநனை நலமிகுத் தன்று. அ

மேவருங் கணவன் றணப்பத் தன்வயிற்
காவல் கூறினு மத்துறை யாகும்.

திருவளர் நன்னக ரடைந்த கொழுநன்
பெருவள மேத்தினு மத்துறை யாகும். கo

* பகடு—உழுமாடு. † பால்—ஊழ்.

## கக. கைக்கிளைப் படலம்

### [ஆண்பாற் கூற்று]

#### சூத்திரம்

*காட்சி, ஐயம், துணிவே, உட்கோள்,*
*பயந்தோர்ப் பழிச்சல், நலம்பா ராட்டல்,*
*நயப்புற் றிரங்கல், புணரா விரக்கம்,*
*வெளிப்பட விரத்த லெனவிவ் வொன்பதும்*
*ஆண்பாற் கூற்றுக் கைக்கிளை யாகும்.*

#### காட்சி

*சுரும்பிவர் பூம்பொழிற் சுடர்வேற் காளை*
*கருந்தடங் கண்ணியைக் கண்டுநயந் தன்று.* க

#### ஐயம்

*கன்னவி றோளான் கண்டபி னவளை*
*இன்னளென் றுணரா னையமுற் றன்று.* உ

#### துணிவு

*மாநிலத் தியலு மாத ராமெனத்*
**தூமலர்க் கோதையைத் துணிந்துரைத் தன்று.* ங

#### உட்கோள்

*இணரார் கோதையென் னெஞ்சத் திருந்தும்*
*உணரா ளென்னையென வுட்கொண் டன்று.* ச

* தூய்தாங்கோதை—எனவும் பாடம்.

## பயந்தோர்ப்பழிச்சல்

இவட்பயந் தெடுத்தோர் வாழியர் நெடிதென
அவட்பயந் தோரை யானுது புகழ்ந்தன்று. ரு

## நலம்பாராட்டல்

அழிபட *ரெவ்வங் கூர வாயிழை
பழிதீர் நன்னலம் பாராட் டின்று. சு

## நயப்புற்றிரங்கல்

கொய்தழை யல்குல் கூட்டம் வேண்டி
எய்துத லருமையி னிறப்பப் புகழ்ந்தன்று. எ

## புணராவிரக்கம்

†உணரா வெவ்வம் பெருக வொளியிழைப்
புணரா விரக்கமொடு புலம்புதர வைகின்று. அ

## வெளிப்படவிரத்தல்

அந்தழை யல்கு லணிநலம் புணரா
வெந்துயர் பெருக வெளிப்பட விரந்தன்று. கூ

---

* எவ்வம்—மனக்குறை.

† பிறரறியாத.

[பெண்பாற் கூற்று]

## சூத்திரம்

காண்டல், நயத்தல், உட்கோள், மெலிதல்,
மெலிவொடு வைகல், காண்டல் வலித்தல்,
பகன்முனி வுரைத்தல், இரவுநீடு பருவரல்,
கனவி னரற்றல், நெஞ்சொடு மெலிதல்,
பெண்பாற் கூற்றுக் கைக்கிளை யாகும்.

## காண்டல்

தேம்பாய் தெரியல் விடலையைத் திருநுதற்
காம்பேர் தோளி கண்டுசோர்ந் தன்று. க

## நயத்தல்

கன்னவி றிணிதோட் காளையைக் கண்ட
நன்னுத லரிவை நயப்புரைத் தன்று. உ

## உட்கோள்

வண்டமர் குஞ்சி மைந்தனை நயந்த
ஒண்டொடி யரிவை யுட்கொண் டன்று. ௩

## மெலிதல்

ஒன்றார் கூறு முறுபழி நாணி
மென்றோ ளரிவை மெலிவொடு வைகின்று. ௪

## மெலிவொடுவைகல்

மணிவளை நெகிழ மாநலந் தொலைய
அணியிழை மெலிவி னாற்றல் கூறின்று. ௫

### காண்டல் வலித்தல்

மைவரை நாடனை மடந்தை பின்னருங்
கைவளை சோரக் காண்டல் வலித்தன்று. சு

### பகல் முனிவுரைத்தல்

புரிவளை நெகிழப் புலம்பொடு நின்றோள்
பருவர லுள்ளமொடு பகன்முனி வுரைத்தன்று. எ

### இரவுநீடு பருவரல்

புலம்பொடு வைகும் பூங்குழை கங்குற்
கலங்கினேன் பெரிதெனக் கசிந்துரைத் தன்று. அ

### கனவினரற்றல்

ஒண்டொடி மடந்தை யுருகெழு கங்குலிற்
கண்டவன் கரப்பக் கனவி னரற்றின்று. கூ

### இதுவுமது

பெய்வளை யவனொடு பேணிய கங்குல்
உய்குவன் வரினென வுரைப்பினு மதுவே. க0

### நெஞ்சொடுமெலிதல்

அஞ்சொல் வஞ்சி யல்லிருட் செலீஇய
நெஞ்சொடு புகன்ற நிலையுரைத் தன்று. கக

### இதுவுமது

வரிவளை நெகிழ்த்தோன் முன்செல வலித்தேன்
அரிவைய ரறிகென வுரைப்பினு மதுவே. கஉ

## கஉ. பெருந்திணைப் படலம்

### [பெண்பாற் கூற்று]

### சூத்திரம்

வேட்கைமுந் *துறுதல், பின்னிலை முயறல்,
பிரிவிடை †யாற்றல், வரவெதிர்ந் திருத்தல்,
வாராமைக் கழிதல், இரவுத்தலைச் சேறல்,
இல்லவை நகுதல், புலவியுட் புலம்பல்,
பொழுதுகண் டிரங்கல், பரத்தையை யேசல்,
கண்டுகண் சிவத்தல் காதலிற் களித்தல்,
கொண்டகம் புகுதல், கூட்டத்துக் குழைதல்,
ஊடலு ணெகிழ்தல், உரைகேட்டு நயத்தல்,
பாடகச் சீறடி பணிந்தபி னிரங்கல்,
பள்ளிமிசைத் தொடர்தல், செல்கென விடுத்தலென
ஒன்பதிற் றிரட்டியோ டொன்று முளப்படப்
பெண்பாற் கூற்றுப் பெருந்திணைப் பால.

### வேட்கை முந்துறுதல்

கையொளிர் வேலவன் கடவக் காமம்
மொய்வளைத் தோளி முந்துற மொழிந்தன்று. க

### பின்னிலை முயறல்

முன்னிழந்த நலனசைஇப்
பின்னிலை ‡மலைந்தன்று. உ

* உறுத்தல் எனவும் பாடம்.
† யாற்றல் எனவும் பாடம்.
‡ மலிந்தன்று எனவும் பாடம்.

## பிரிவிடையாற்றல்

இறைவளை நெகிழ வின்னா திரங்கிப்
பிறைநுதன் மடந்தை பிரிவிடை யரற்றின்று. ௩

## வரவெதிர்ந்திருத்தல்

முகைபுரை முறுவன் முள்ளெயிற் றரிவை
வகைபுனை வளமனை வரவெதிர்ந் தன்று. ௪

## வாராமைக்கழிதல்

நெடுவேய்த் தோளி நிமித்தம் வேறுபட
வடிவே லண்ணல் வாராமைக் கழிந்தன்று. ௫

## இரவுத்தலைச்சேறல்

காண்டல் வேட்கையொடு கனையிரு ணடுநாண்
மாண்ட சாயன் மனையிறந் தன்று. ௬

## இல்லவை நகுதல்

இல்லவை சொல்லி யிலங்கெயிற் றரிவை
நல்வய லூரனை நகைமிகுத் தன்று. ௭

## புலவியுட் புலம்பல்

நலவளை மடந்தை நற்றார் பரிந்து
புலவி யாற்றாள் புலம்புற் றன்று. ௮

## பொழுதுகண்டிரங்கல்

நிற்ற லாற்றா ணெடிதுயிர்த் தலமரும்
பொற்றொடி யரிவை பொழுதுகண் டிரங்கின்று. ௯

### பாத்தையை யேசல்

அணிவய லூரனொ டப்புவிழ வமரும்
பணிமொழி யரிவை பரத்தையை யேசின்று. க0

### கண்டுகண்சிவத்தல்

உறுவரை மார்ப னொள்ளிணர் நறுந்தார்
கறுவொடு மயங்கிக் கண்சிவந் தன்று. கக

### காதலிற்களித்தல்

மைவரை நாடன் மார்பகம் பொருந்திக்
கைவிட லறியாக் காதலிற் களித்தன்று. கஉ

### கொண்டகம்புகுதல்

காதல் பெருகக் கணவனைக் கண்ணுற்றுக்
கோதையாற் பிணித்துக் கொண்டகம் புக்கன்று. கந

### கூட்டத்துக் குழைதல்

பெய்தா ரகலம் பிரித லாற்றுக்
கொய்தழை யல்குல் கூட்டத்துக் குழைந்தன்று. கச

### ஊடலுணெகிழ்தல்

நள்ளிருண் மாலை நடுங்கஞர் நலிய
ஒள்வளைத் தோளி யூடலு ணெகிழ்ந்தன்று. கரு

### உரைகேட்டு நயத்தல்

துயரொடு வைகிய சூழ்வளைத் தோளி
உயர்வரை நாட னுரைகேட்டு நயந்தன்று. கசு

### பாடகச்சீறடி பணிந்தபினிரங்கல்

கோடுயர் வெற்பன் கூப்பிய கையொடு
பாடகச் சீறடி பணிந்தபி னிரங்கின்று. கஎ

### பள்ளிமிசைத் தொடர்தல்

மாயிருங் கங்குல் மாமலை நாடனைப்
பாய னீவிப் பள்ளிமிசைத் தொடர்ந்தன்று கஅ

### செல்கென விடுத்தல்

பாயிருட் கணவனைப் படர்ச்சி நோக்கிச்
சேயிழை யரிவை செல்கென விடுத்தன்று. கக

## [இருபாற் பெருந்திணை]

### சூத்திரம்

சீர்செல வழுங்கல், செழுமட லூர்தல்.
தூதிடை யாடல், துயரவற் குரைத்தல்,
கண்டிகை சோர்தல், பருவ மயங்கல்,
ஆண்பாற் கிளவி, பெண்பாற் கிளவி,
தேங்கமழ் கூந்தற் றெரிவை வெறியாட்டு,
அரிவைக் கவடுணை பாண்வர வுரைத்தல்.
பரிபுரச் சீறடிப் பரத்தை கூறல்,
விறலி கேட்பத் தோழி கூறல்,

## புறப்பொருள் விளக்கம்

வெள்வளை விறலி தோழிக்கு விளம்பல்,
பாத்தை வாயில் பாங்கிகண் டுரைத்தல்,
பிறர்மனைத் துயின்றமை விறலி கூறல்,
குற்றிசை ஏனைக் குறுங்கலி யுளப்பட
ஒத்த பண்பி னொன்றுதலை யிட்ட
ஈரெண் கிளவியும் பெருந்திணைப் பால.

### செலவழுங்கல்

நிலவுவே னெடுந்தகை நீள்கழை யாற்றிடைச்
செலவுமுன் வலித்துச் செலவழுங் கின்று.

### மடலூர்தல்

ஒன்றல்ல பலபாடி
மன்றிடை மடலூர்ந்தன்று.

### தூதிடையாடல்

*ஊழி மாலை யுறுதுயர் நோக்கித்
தோழி நீங்கா தூதிடை †யாடின்று.

### துயரவற் குரைத்தல்

‡மான்ற மாலை மயிலியல் வருத்தல்
தோன்றக் கூறித் துயரவற் குரைத்தன்று.

---

* உகம்போன்ற மாலை.
† ஆகின்று—எனவும் பாடம்.
‡ மயங்கிய.

### கண்டுகைசோர்தல்

போதார் கூந்தற் பொலந்தொடி யரிவை
காதல் கைம்மிகக் கண்டுகை சோர்ந்தன்று. ரு

### பருவமயங்கல்

உருவ வால்வளை யுயங்கத் தோழி
பருவ மயங்கிப் படருழந் தன்று. சு

### இதுவுமது

ஆங்கவர் கூறிய பருவ மன்றெனத்
தேங்கமழ் கோதை தெளிதலு மதுவே. எ

### ஆண்பாற்கிளவி

காமுறு காமம் * தளைபரிந் தேங்கி
ஏமுற் றிருந்த விறைவ னுரைத்தன்று. அ

### பெண்பாற்கிளவி

வெள்வளை நெகிழவு மெம்முள் ளாத
கள்வனைக் காணுதிவ் வூரெனக் கிளந்தன்று. கூ

### வெறியாட்டு

தேங்கமழ் கோதை செம்ம லளிநினைந்து
ஆங்கந் நிலைமை யாயறி யாமை
வேங்கையஞ் சிலம்பற்கு வெறியா டின்று. க0

* எல்லை கடப்ப.

## பாணவரவுரைத்தல்

மாணிழைக்கு வயலூரன்
பாண் வரவு பாங்கிமொழிந்தன்று. கக

## பரத்தைகூறல்

தேங்கமழ் சிலம்பன் றூரெமக் கெளிதெனப்
பாங்கவர் கேட்பப் பரத்தை மொழிந்தன்று. கஉ

## விறலி கேட்பத் தோழி கூறல்

பேணிய பிறர்முயக் காரமு தவற்கெனப்
பாணன் விறலிக்குப் பாங்கி மொழிந்தன்று. கங

## விறலி தோழிக்கு விளம்பல்

ஆங்கவன் மூப்பவர்க் கருங்களி தருமெனப்
பாங்கி கேட்ப விறலி பகர்ந்தன்று. கச

## பரத்தை வாயில் பாங்கிகண் டுரைத்தல்

உம்மி லரிவை யுரைமொழி யொழிய
எம்மில் லவனூர் தேரும் வருமெனப்
பரத்தை வாயிற்குப் பாங்கி பகர்ந்தன்று. கரு

## பிறர்மனைத்துயின்றமை விறலி கூறல்

மற்றவர் சேரியின் மைந்த னுறைந்தமை
இற்றென விறலி யெடுத்துரைத் தன்று. கசு

### தற்றிசை

பொற்று ரகலம் புல்லிய மகளிர்க்கு
*அற்றுங் கொழுகா தறங்கண்மா றின்று. கள

### தறுங்கலி

மாறுருங் கூந்தல் மகளிரை நயப்ப
வேறுபடு வேட்கை வீயக் கூறின்று. கஅ

## கரு. ஒழிபு

[பாடாண்பகுதியிலும் வாகையிலுமுள்ள
க்கிணையாமாறு உணர்த்துதல்.]

பாடாண் பகுதியுள் †தொல்காப் பியமுதல்
கோடா மரபிற் குணனொடு நிலைஇக்
கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தலும்,
விடுத்த லறியா விறல்புரி வாகையுள்
வாணிக வென்றியும், மல்ல வென்றியும்,
நீணெறி யுழவ னிலனுழு வென்றியும்,

---

* அற்றறுதிப்பட்டு நடவாது அறத்தைக் கண்
மறுத்தது.

† தொல்காப்பியன்முதல் எனவும் பாடம்.

இகல்புரி யேறொடு, கோழியும், எதிர்வல்
தகருடன், யானை, தணப்பில்வெம் பூழொடு,
சிவல், கிளி, பூவை, செழும்பரி, தேர், யாழ்,
இவர்தரு சூதிடை, ஆடல், பாடல்,
பிடியென் கின்ற பெரும்பெயர் வென்றியொடு
உடையன பிறவு முளப்படத் தொகைஇ
மெய்யி னார்தமிழ் வெண்பா மாலையுள்
ஐய னாரித னமர்ந்துரைத் தனவே.

## சூத்திரம்

வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி
உட்குடை யுழிஞை நொச்சி தும்பையென்று
இத்திற மேழும் புறமென மொழிப
வாகை பாடாண் பொதுவியற் றிணையெனப்
போகிய மூன்றும் புறப்புற மாகும்.

**புறப்பொருள் விளக்கம் முற்றும்**

# புறப்பொருள் வெண்பாமாலை

## க. வெட்சிப் படலம்

### க. வெட்சி

*மன்னுறுதொழில்*

*மண்டு மெரியுண் மரந்தடிந் * திட்டற்றூக்*
*கொண்ட கொடுஞ்சிலையன் கோவெறியக் - கண்டே*
*அடையார் முனையலற வையிலைவேற் காளை*
*விடையாயங் கொள்கென்றான் வேந்து.* க

*தன்னுறுதொழில்*

*அறாஅ நிலைச்சாடி யாடுறு தேறல்*
*மறாஅன் மழைத்தடங் கண்ணி - பொறாஅன்*
*கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை*
*நெடுங்கடைய நேரார் நிரை.* உ

### உ. வெட்சியரவம்

*நெடிபடு கானத்து நீள்வேன் மறவர்*
*அடிபடுத் தாரதர் செல்வான் - துடிபடுத்து*
*வெட்சி மலைய விரவார் மணிநிரைக்*
*கட்சியுட் காரி †கலுழும்.* ௩

---

* இட்டற்றூற்.  † எழும்.

## ந. விரிச்சி

எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றிற்
குழுவினங் கைகூப்பி நிற்பத் - தொழுவிற்
குடக்கணீ கொண்டுவா என்றாள் குனிவில்
தடக்கையாய் வென்றி தரும். ச

## ச. செலவு

கூற்றினத் தன்னார் கொடுவி லிடனேந்திப்
பாற்றினம் பின்படர முன்படர்ந் - தேற்றினம்
நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய
குன்றங் கொடுவில் லவர். ரு

## ரு. வேய்

நிலையும் நிரையும் நிரைப்புறத்து நின்ற
சிலையுஞ் செருமுனையுள் வைகி - இலைபுனைந்த
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோய் சென்றறிந்து
நள்ளிருட்கண் வந்தார் நமர். சு

## சு. புறத்திறை

உய்ந்தொழிவா ரீங்கில்லை ஊழிக்கட் டீயேபோல்
முந்தமரு ளேற்றார் முரண்முருங்கத் - தந்தமரின்
*ஒற்றின ரொற்றி உரவோர் குறும்பினைச்
சுற்றினர் போகாமற் சூழ்ந்து. எ

---

* ஒற்றினரொய்ந் தாய்ந்துறுவலி யோரரணம்.

## எ. *ஊர்கோலை

இகலே துணையா எரிதவழச் சீறிப்
புகலே யரிதென்னூர் புக்குப் - பகலே
தொலைவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு. அ

## அ. ஆகோள்

கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தால்
நெடுவரை நீள்வேய் நரலும் - நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை. கூ

## கூ. பூசன்மாற்று

சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணியத் - தாழ்ந்த
குலவுக் கொடுஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப் புள். க0

## க0. சுரத்துய்த்தல்

புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்
வின்மே லசைஇயகை வெல்கழலான் - தன்மேற்
கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்
நெடுவரை நீழல் நிரை. கக

* ஊர்க்கொலை.

## கக. தலைத்தோற்றம்

மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லும்
மையணற் காளை மகிழ்துடி - கையணல்
வைத்த எயிற்றியர் வாட்க ணிடனுடை
உய்த்தன் றுவகை யொருங்கு. கஉ

## கஉ. தந்துநிறை

தண்டா விருப்பினள் தன்னை தலைமலைந்த
வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று - கண்டாள்
அணிநிரை வாண்முறுவ லம்மா எயிற்றி
மணிநிரை மல்கிய மன்று. கங

## கங. பாதீடு

ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை. கச

## கச. உண்டாட்டு

இளிகொண்ட தீஞ்சொ லிளமா எயிற்றி
களிகொண்ட நோக்கங் கவற்றத் - தெளிகொண்ட
வெங்கண் மலிய விளிவதுகொல் வேற்றூர்மேல்
செங்கண் மறவர் சினம். கரு

## கடு. கோடை

அங்கட் கிணையன் துடியன் விறலிபாண்
வெங்கட்கு வீசும் விலையாகும் - செங்கண்
செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி
வரிச்சிலையால் தந்த வளம். கசு

## கசு. புலனறிசிறப்பு

இறுமுறை யெண்ணு திரவும் பகலும்
செறுமுனையுட் சென்றறிந்து வந்தார்-பெறுமுறையின்
அட்டுக் கனலு மயில்வேலோ யொன்றிரண்
டிட்டுக் கொடுத்த லியல்பு. கஎ

## கஎ. பிள்ளைவழக்கு

புல்லார் நிரைகருதி யாஞ்செல்லப் புண்ணலம்
பல்லா ரறியப் பகர்ந்தார்க்குச் - சொல்லாற்
கடஞ்சுட்ட வேண்டா கடுஞ்சுரையா னன்கு
குடஞ்சுட் டினத்தாற் கொடு. கஅ

## கஅ. துடிநிலை

முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வர்
எந்தைக்குத் தந்தை இவனெனக்கு - வந்த
குடியொடு கோடா மரபினோற் கின்னும்
வடியுறு தீந்தேறல் வாக்கு. கக

### ௧௯. கொற்றவைநிலை

ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக்
கூளி மலிபடைக் கொற்றவை - மீளி
அரண்முருங்க ஆகோள் கருதி னடையார்
முரண்முருங்கத் தான்முந் துறும். ௨0

### ௨0. வெறியாட்டு

காணி லரானுங் களிக்குங் கழன்மறவன்
பூணிலங்கு மென்முலைப் போதரிக்கண் - வாணுதல்
தான்முருகு மெய்ந்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப
வேன்முருகற் காடும் வெறி. ௨௧

## ௨. கரந்தைப் படலம்

### ௧. கரந்தை

அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றாற் - செழுங்குடிகள்
தாரார் கரந்தை தலைமலைந்து தாங்கோடல்
நேரார்கைக் கொண்ட நிரை.

## உ. கரந்தையரவம்

கால்லார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட
வேலார் வெருவந்த தோற்றத்தார் - காலன்
கிளர்ந்தாலும் போல்வார் கிணைப்பூசல் கேட்டே
உளர்ந்தார் நிரைப்பெயர்வு முண்டு. உ

## ங. அதரிடைச் செலவு

சங்குங் கருங்கோடுந் தாழ்பீலிப் பல்லியமும்
எங்கும் பறையோ டெழுந்தார்ப்ப - வெங்கல்
அழற்சுரந் தாம்படர்ந்தா ரான்சுவட்டின் மேலே
நிழற்கதிர்வேன் மின்ன நிரைத்து. ங

## ச. போர்மலைதல்

புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமும் மானமுந் தேசும் - ஒலிக்கும்
அருமுனை வெஞ்சுரத் தான்பூசற் கோடிச்
செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து. ச

## ரு. புண்ணொடுவருதல்

வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதொறூஉம்
இங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும் - பைங்கண்
இனம்போக்கி நின்று ரிகல்வாட்டி வேந்தன்
மனம்போல வந்த மகன். ரு

### சு. போர்க்களத்தொழிதல்

உரைப்பி னதுவியப்போ ஒன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை சென்றான் - புரைப்பின்
றுளப்பட்ட வாயெல்லா மொள்வாள் கவரக்
களப்பட்டான் தோன்றான் கரந்து. சு

### எ. ஆளெறி பிள்ளை

பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க வாளெறிந்து
கொள்ளைகொ ளாயந் தலைக்கொண்டார் - எள்ளிப்
பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளான்
ஒருதனியே நின்றா னுளன். எ

### அ. பிள்ளைத்தெளிவு

மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்
பூவா ளுறைகழியாப் போர்க்களத்துள் - ஓவான்
*துடியிரட்டி விம்மத் தொடுகழலார் முன்னின்
றடியிரட்டித் திட்டாடு மாட்டு. அ

### கூ. பிள்ளையாட்டு

மாட்டிய பிள்ளை மறவர் நிறந்திறந்து
கூட்டிய எஃகங் குடர்மாலை - சூட்டியபின்
மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட
வேறிரிய விம்முந் துடி. கூ

---

* துடியுருட்டிவிம்ம.

## க0. கையறுநிலை

*நாப்புலவர் சொன்மாலை நண்ணார் படையுழக்கித்*
*தாப்புலி யொப்பத் தலைக்கொண்டாள் - பூப்புனையும்*
*நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்*
*கற்கொலோ சோர்ந்திலஎங் கண்.* க0

## கக. நெடுமொழிகூறல்

*ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி*
*வாளொடு வைகுவேன் யானாக - நாளும்*
*கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்*
*பிழிமகி ழுண்பார் பிறர்.* கக

## கஉ. பிள்ளைப்பெயர்ச்சி

*பிணங்கமருட் பிள்ளை பெயர்ப்பப் பெயரா*
*தணங்கனூர்செய் தாளொறித னோக்கி - வணங்காச்*
*சிலையளித்த தோளான் சினவிடலைக் கன்றே*
*தலையளித்தான் தண்ணடையுந் தந்து.* கஉ

## கங. வேத்தியன்மலிபு

*அங்கையு ணெல்லி யதன்பய மாதலால்*
*கொங்கலர் தாரான் குடைநிழற்கீழ்த் - தங்கிச்*
*செயிர்வழங்கும் வாளமருட் சென்றடையார் வேல்வாய்*
*உயிர்வழங்கும் வாழ்க்கை யுறும்.* கங

### ௧௪. குடிநிலை

பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் - கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி.

## ௩. வஞ்சிப் படலம்

### ௧. வஞ்சி

செங்கண் மழவிடையிற் றண்டிச் சிலைமறவர்
வெங்கண் மகிழ்ந்து விழவமர - அங்குழைய
வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்
குஞ்சி மலைந்தானெங் கோ.

### ௨. வஞ்சியரவம்

பௌவம் பணைமுழங்கப் பற்றார்மண் பாழாக
வௌவிய வஞ்சி வலம்புனையச் - செவ்வேல்
ஒளிறும் படைநடுவ ணூழித்தீ யன்ன
களிறுங் களித்ததிருங் கார்.

## ௩. குடைநிலை

முன்னர் முரசிரங்க மூரிக் கடற்றானைத்
துன்னருந் துப்பிற் றொழுதெழா - மன்னர்
உடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக்
குடைநா ளிறைவன் கொள. ௩

## ௪. வாணிலை

அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்னன்
எறிந்தில கொள்வா ளியக்கம் - அறிந்திகலிப்
பின்பகலே யன்றியும் பேரு ரகநாட்டு
நன்பகலுங் கூகை நகும். ௪

## ௫. கொற்றவைநிலை

அணங்குடை நோலை பொரிபுழுக்கல் பிண்டி
நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக் - கணம்புகலக்
*கையிரிய மண்டைக் கணமோடி காவலற்கு
மொய்யிரியத் தான்முந் துறும். ௫

## ௬. இதுவுமது

தமருட் டலையாத ரார்தாங்கி நிற்றல்
எமருள்யா மின்னமென் றெண்ணல் - அமரின்
முடுகழலின் முந்துறுதன் முல்லைத்தார் வேந்தன்
தொடுகழன் மைந்தர் தொழில். ௬

* 'கையிரீஇ மண்டை கண' எனவும் பாடம்.

### எ. கொற்றவஞ்சி

அழலடைந்த மன்றத் *தலந்தயரா நின்றார்
நிழலடைந்தே நின்னையென் றேத்திக் - கழலடையச்
செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக்
கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ. எ

### அ. கொற்றவள்ளை

தாழார மார்பினன் றாமரைக்கண் சேந்தனவாற்
பாழாய்ப் பரிய விளிவதுகொல் - யாழாய்ப்
புடைத்தே னிமிர்கண்ணிப் பூங்கட் புதல்வர்
நடைத்தே ரொலிகறங்கு நாடு. அ

### கூ. பேராண்வஞ்சி

பலிபெறு நன்னகரும் பள்ளி யிடனும்
ஒலிகெழு நான்மறையோ ரில்லும் - நலிவொரீஇப்
புல்லா ரிரியப் பொருதார் முனைகெடுத்த
வில்லார்க் கருள்சுரந்தான் வேந்து. கூ

### க0. இதுவுமது

கூடி முரசிரங்கக் கொய்யுளைமா முன்னுகளப்
பாடி பெயர்ந்திட்டான் பல்வேலான் - கோடி
நிதியந் திறையளந்தார் நேராருந் தன்கீழ்
முதியமென் றூறி முரண். க0

* 'அரந்தயரா நின்றார்' எனவும் பாடம்.

### கக. மாராய வஞ்சி

நேராரம் பூண்ட நெடுந்தகை நேர்கழலான்
சேரார் முனைநோக்கிக் கண்சிவப்பப் - போரார்
நறவேய் கமழ்தெரிய னண்ணா ரெறிந்த
மறவே லிலைமுகந்த மார்பு. கக

### கஉ. நெடுமொழிவஞ்சி

இன்ன ரெனவேண்டா வென்னோ டெதிர்சீறி
முன்னர் வருக முரணகலும் - மன்னர்
பருந்தார் படையமருட் பல்லார் புகழ
விருந்தா யடைகுறுவார் விண். கஉ

### கங. முதுமொழி வஞ்சி

குளிறு முரசங் குணில்பாயக் கூடார்
ஒளிறுவாள் வெள்ள முழக்கிக் - களிறெறிந்து
புண்ணொடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்
தண்ணடை நல்கல் தகும். கங

### கச. உழபுல வஞ்சி

அயிலன்ன கண்புதைத் தஞ்சி யலறி
மயிலன்னார் மன்றம் படரக் - குயிலகவ
ஆடிரிய வண்டிமிருஞ் செம்ம லடையார்நாட்
டோடெரியுள் வைகின வூர். கச

### ௧௫. மழபுல வஞ்சி

களமர் கதிர்மணி காலேகஞ் செம்பொன்
வளமனை பாழாக வாரிக் - கொளன்மலிந்து
கண்ணார் சிலையார் கவர்ந்தார் கழல்வேந்தன்
நண்ணார் கிளையலற நாடு.

### ௧௬. கொடை வஞ்சி

சுற்றிய சுற்ற முடன்மயங்கித் தம்வயி
றெற்றி மடவா ரிரிந்தோட - முற்றிக்
குரிசி லடையாரைக் கொண்டகூட் டெல்லாம்
பரிசின் முகந்தன பாண்.

### ௧௭.

தாட்டாழ் தடக்கைத் தனிமதி வெண்குடையான்
வாட்டானை வெள்ளம் வரவஞ்சி - மீட்டான்
மலையா மறமன்னன் மால்வரையே போலும்
கொலையானை பாய்மாக் கொடுத்து. ௧௭

### ௧௮. இதுவுமது

அவிழ்மலர்க் கோதைய ராட வொருபால்
இமிழ்முழவம் யாழோ டியம்பக் - கவிழ்மணிய
காய்கடா யானை யொருபாற் களித்ததிரும்
ஆய்கழலான் கட்டூ ரகத்து. ௧௮

## கசு. ஒருதனிநிலை

வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற
வாடன் முதியாள் வயிற்றிடம் - கூடார்
பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா
இரும்புலி சேர்ந்த விடம். கசு

## உ0. தழிஞ்சி

கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினும்
தான்படை நீண்டாத் தறுகண்ணன் - வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறந்தொலைதல்
'எண்ணியபின் போக்குமோ வெஃகு உ0

## உக. பாசறைநிலை

கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டிப்
பெரும்புனல் வாய்திறந்த பின்னும் - சுரும்பின்
தொகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்
பகைமெலியப் பாசறையு ளான். உக

## உஉ. பெருவஞ்சி

பீலா மன்னர் நடுங்கப் பெரும்புகை
ஊடுலாய் வானத் தொளிமறைப்ப - நாடெலாம்
பின்னும் பிறங்கழல் வேய்ந்தன பெய்கழற்கால்
மன்னன் கனல மறம். உஉ

* 'எண்ணியபி னேக்குமோ' எனவும் பாடம்.

## உ௩. பெருஞ்சோற்று நிலை

இயவர் புகழ வெறிமுரசு சார்ப்பக்
குயவரி வேங்கை யனைய - வயவர்
பெறுமுறையாற் பிண்டங்கோ ளேவினன் பேணார்
இறுமுறையா லெண்ணி யிறை. உ௩

## உ௪. நல்லிசை வஞ்சி

மடங்கலிற் சீறி மலைத்தெழுந்தார் மண்மேல்
இடங்கெடச் சென்றிறுத்த பின்னும்-நுடங்கெரிபோல்
வெல்லப் பெருகும் படையாற்று வேந்தர்மேற்
செல்லப் பெருகுஞ் சினம். உ௪

## உ௫. இதுவுமது

குரையழன் மண்டிய கோடுயர் மாடம் [திண்டேர்ப்
*சுரையொடுபேய்ப் பீர்க்குஞ் சுமந்த - நிரை
பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப
நல்லிசை கொண்டடையார் நாடு. உ௫

* 'சுரையொடு பீரஞ்' எனவும் பாடம்.

# ௪. காஞ்சிப் படலம்

## க. காஞ்சி

அருவரை பாய்ந்திறுது மென்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச் - செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில். க

## உ. காஞ்சியதிர்வு

மன்மேல் வருமென நோக்கான் மலர்மார்பில்
வென்வேன் மூகந்தபுண் வெய்துயிர்ப்பத்-தன்வேல்
பிடிக்கலு மாற்றுப் பெருந்தகை யேவத்
துடிக்கண் புலையன் றொடும். உ

## ௩. தழிஞ்சி

குலாவுஞ் சிலையார் குறும்புகொள வெஃகி
உலாவு முழப்பொழிக வேந்தன் - கலாவும்
இனவேங்கை யன்ன விகல்வெய்யோர் காவல்
புனவேய் நரலும் புழை. ௩

## ௪. படைவழக்கு

ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றாலிப்ப
*ஐயிலை யெஃக மவைபலவும் - மொய்யிடை
ஆட்கடி வெல்களிற் றண்ணல் கொடுத்தளித்தான்
வாட்குடி வன்க ணவர்க்கு. ௪

---

* 'ஐயிலை வேலெஃகம்' எனவும் பாடம்.

### ௫. இதுவுமது

துன்னருந் துப்பிற் றொடுகழலார் சூழ்ந்திருப்பத்
தன்னம ரொள்வாளென் *கைதந்தான் - மன்னற்கு
மண்ணகமோ வைகின்று மாலை நெடுங்குடைக்கீழ்
விண்ணகமும் வேண்டுங்கொல் வேந்து. ௫

### ௬. பெருங்காஞ்சி

வில்லார் குறும்பிடை வேறுவே றார்த்தெழுந்த
கல்லா மறவர் கணைமாரி - ஒல்லா
வெருவி மறவேந்தர் வெல்களி றெல்லாம்
இருவி வரைபோன்ற வின்று. ௬

### ௭. வாள்செலவு

உணங்கு புலவறா வொன்னார் குரம்பை
நுணங்கரில் வெம்முனை நோக்கி - அணங்கிய
குந்த மலியும் புரவியான் கூடாதார்
வந்தபின் செல்கென்றான் வாள். ௭

### ௮. குடைசெலவு

தெம்முனை தேயத் திறல்விளங்கு தேர்த்தானை
வெம்முனை வெற்றி விறல்வெய்யோன் - தம்முனை
நாட்டிப் பொறிசெறித்து நண்ணார்மேற் செல்கென்று
கூட்டிநாட் கொண்டான் குடை. ௮

* 'கைத்தந்த மன்னற்கு' எனவும் பாடம்.

### கூ. வஞ்சினக் காஞ்சி

இன்று பகலோ னிறவாமு னென்னுரை
வென்று களங்கொள்ளா வேலுயர்ப்பின் - என்றும்
அரணவியப் பாயு மடையார்மு னிற்பேன்
முரணவிய முன்முன் மொழிந்து. கூ

### க0. பூக்கோணிலை

பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன
குருதியா றுவதுகொல் குன்றூர் - கருதி
மறத்திறத்தின் மாறு மறவருங் கொண்டார்
புறத்திறுத்த வேந்திரியப் பூ. க0

### கக. தலைக் காஞ்சி

*விட்டிடினென் வேந்தன் †விலையிடினெ னிவ்வுலகின்
இட்டுரையி னெய்துவ வெய்திற்றால் - ஒட்டாதார்
போர்தாங்கி மின்னும் புலவா ளுறைகழியாத்
தார்தாங்கி வீழ்ந்தான் றலை. கக

### கஉ. தலைமாராயம்

உவன்றலை யென்னு முறழ்வின்றி யொன்னார்
இவன்றலையென் றேத்த வியலும் - அவன்றலை
தந்தாற்கு நல்கல் வியப்போ ‡கிளந்தேத்தி
வந்தார்க் குவந்தீயும் வாழ்வு. கஉ

---

* 'விட்டிடிலென்' எனவும் பாடம்.

† 'விலையிடிலென்' எனவும் பாடம்.

‡ 'கிளர்ந்து' எனவும் பாடம்.

### கங. தலையோடுமுடித்தல்

கொலையானுக் கூற்றங் கொடிதே கொழுநன்
தலையானு டையலாள் கண்டே - முலையால்
முயங்கினாள் வாண்முகஞ் சேர்த்தினா ளாங்கே
உயங்கினா ளோங்கிற் றுயிர். கங

### கச. மறக்காஞ்சி

கருந்தலையும் வெண்ணிணமுஞ் செந்தடியு மீராப்
பருந்தோ டெருவை படர - அருந்திறல்
வேறாய மன்னர் வியப்பக் கடாயினான்.
மாறா மறவன் மறம். கச

### கரு. இதுவுமது

நகையம ராய நடுங்க நடுங்கான்
தொகையம ரோட்டிய துப்பிற் - பகைவர்முன்
நுங்கிச் சினவுத னோனு திவேலாற்
பொங்கிப் பரிந்திட்டான் புண். கரு

### கசு. பேய்நிலை

ஆயு மடுதிறலாற் கன்பிலா ரில்போலும்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப் - பேயும்
களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தான்
உளம்புகல வோம்ப லுறும். கசு

### கள. பேய்க்காஞ்சி

கொட்கு நிமிருங் குறுகுங் குடர்சூடிப்
பெட்ப நகும்பெயரும் பேய்மகள் - உட்கப்
புனலங் குருதிப் புலால்வாய்க் கிடந்து
கனல விழிப்பவற் கண்டு. கள

### கஅ. தொட்ட காஞ்சி

கொன்றுருத்த கூர்வே லவற்குறுகிக் கூரிருள்வாய்
நின்றுருத்து நோக்கி நெருப்புமிழாச்-சென்றொருத்தி
ஒட்டார் படையிடந்த வாருப்பு ணேந்தகலம்
தொட்டாள் பெருகத் துயில். கஅ

### ககூ. தொடாக் காஞ்சி

ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர்தூய்க்
கொய்யாக் குறிஞ்சி பலபாடி - மொய்யிணர்ப்
பூப்பெய் தெரிய னெடுந்தகைபுண் யாங்காப்பப்
பேய்ப்பெண் பெயரும் வரும். ககூ

### உ0. மன்னைக் காஞ்சி

போர்க்குப் புணைமன் புரையோர்க்குத் தாணுமன்
ஊர்க்கு முலகிற்கு மோருயிர்மன் - யார்க்கும்
அறந்திறந்த வாயி லடைத்ததா லண்ணல்
நிறந்திறந்த நீளிலை வேல். உ0

## உக. கட்காஞ்சி

ஒன்று முனையோர்க் கொழிக வினித்துயில்
மன்னன் மறவர் மகிழ்தூங்கா - முன்னே
படலைக் குரம்பைப் பழங்கண் முதியாள்
விடலைக்கு வெங்கள் விடும். ௨௧

## உஉ. ஆஞ்சிக் காஞ்சி

தாங்கிய கேளொடு தானு *மெரிபுகப்
பூங்குழை யாயம் புலர்கென்னும் - நீங்கா
விலாழிப் பரித்தானை வெந்திறலார் சீறார்ப்
புலாழித் தலைக்கொண்ட புண். ௨௨

## உங. இதுவுமது

கவ்வைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோன் -
அம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற் [அவ்வேலே
கொம்பிற்கு மாயிற்றே கூற்று. ௨௩

## உச. மகட்பாற் காஞ்சி

அளிய கழல் †வேந்த ரம்மா வரிவை
எளியளென் றெள்ளி யுரைப்பிற் - குளியாவோ
பண்பொற் கிளவியப் பல்வளையாள் வான்முகத்த
கண்போற் பகழி கடிது. ௨௪

---

* 'எரிபுகீஇ' எனவும் பாடம்.

† 'வேந்தன்' எனவும் பாடம்.

### உ௫. மூனைகடி மூன்னிருப்பு

கடிகமழ் வேறிக் கடைதோறுஞ் செல்லக்
கொடிமலி கொல்களி றேவித் - *துடிமகிழ
ஆர்த்திட் டமரு ளடையாரை யம்மூனையிற்
பேர்த்திட்டான் பெய்கழலி னான். உ௫

## ௫. நொச்சிப் படலம்

### க. நொச்சி

ஆடரவம் பூண்டா னழலுணச் சீறிய
கூடரணங் காப்போர் குழாம்புரையச் - சூடினார்
உச்சி மதி †வழங்கு மோங்கு மதில்காப்பான்
நொச்சி நுதிவே லவர்.

### உ. மறனுடைப் பாசி

பாயினார் மாயும் வகையாற் பலகாப்பும்
ஏயினா ரேய விகன்மறவர் - ஆயினார்
ஒன்றி யவரற வூர்ப்புலத்துத் தார்தாங்கி
வென்றி யமரார் விருந்து.

---

* 'துடியுகள' எனவும் பாடம்.

† 'தவழும்' எனவும் பாடம்.

### ௩. ஊர்ச்செரு

வளையும் வயிரு மொலிப்பவாள் வீசி
இளையுங் கிடக்குஞ் சிதையத் - தளைபரிந்த
நோனார் படையிரிய நொச்சி விறன்மறவர்
ஆனா ரமர்விலக்கி யார்ப்பு. ௩

### ௪. செருவிடை வீழ்தல்

ஈண்டரில் சூழ்ந்த விளையு மெரிமலர்க்
காண்டகு நீள்கிடங்குங் காப்பாராய் - வேண்டார்
மடங்க லனைய மறவேலோர் தத்தம்
உடம்பொடு காவ லுயிர். ௪

### ௫. குதிரைமறம்

தாங்கன்மின் றாங்கன்மின் றானை விறன்மறவிர்
ஓங்கன் மதிலு ளொருதனிமா - ஞாங்கர்
மயிரணியப் பொங்கி மழைபோன் று மாற்றார்
உயிருணிய வோடி வரும். ௫

### ௬. எயிற்போர்

மிகத்தாய செங்குருதி மேவரு மார்பின்
உகத்தா முயங்கியக் கண்ணும் - அகத்தார்
புறத்திடைப் போதந் தடல்புரிந்தார் பொங்கி
மறத்திடை மானமேற் கொண்டு. ௬

## எ. எயிறனையழித்தல்

அகத்தன வார்கழ னேன்று ளாணின்
புறத்தன போரெழிற் றிண்டோள் - உறத்தழீஇத்
தோட் குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான். எ

## அ. அழிபடை தாங்கல்

பரிசை பலகடந்து பற்று ரெதிர்ந்தார்
எரிசெ யிகலரணங் கொண்மார் - புரிசை
அகத்தடி யுய்யாமை யஞ்சுடர்வா ளோச்சி
மிகத்தடிந்தார் மேனின் றவர். அ

## கூ. மகண்மறுத்து மொழிதல்

ஒள்வாண் மறவ ருருத்தெழுந் தும்பர்நாட்
கள்வார் நறுங்கோதை காரணமாக் - கொள்வான்
மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
கருங்கண்ணி வெண்கட்டிற் கால். கூ

## ௬. உழிஞைப் படலம்

### க. உழிஞை

உழிஞை முடிபுனைந் தொன்றூப்போர் மன்னர்
விழுமதில் வெல்களிறு பாயக் - கழி* மகிழ்
வெய்தாரு மெய்தி யிசைநுவலுஞ் சீர்த்தியனே
கொய்தார மார்பினெங் கோ.

### உ. குடைநாட்கோள்

நெய்யணிக செவ்வே னெடுந்தேர் நிலைபுகுக
கொய்யுளைமா கொல்களிறு பண்விடுக - வையகத்து
முற்றக் கடியரண மெல்லா முரணவிந்த
கொற்றக் குடைநாட் கொள.

### ௩. வாணாட்கோள்

வாணாட் கொளலும் வழிமொழிந்து வந்தடையாப்
பேணார் பிறைதொடும் பேமதிற் - பூணார்
அணிகொள் வனமுலையா ராடரங்க மேறிப்
பிணிகொள்பே யாடும் பெயர்த்து.

### ௪. முரச வுழிஞை

கதிரோடை வெல்களிறு பாயக் கலங்கி
உதிரா மதிலு முளகொல் - அதிருமால்
பூக்கண் மலிதார்ப் புகழ்வெய்யோன் கோயிலுள்
மாக்கண் முரச மழை.

---

* 'மகிழ்பு' எனவும் பாடம்.

## ரு. கொற்ற வுழிஞை

வெள்வாட் கருங்கழற்கால் வெஞ்சுடர்வேற் றண்ணளியான்
கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தான் - அஞ்சுவரு வாயி லருமிளைக் குண்டகழி [நள்ளாதார்
மஞ்சிவரு ஞாயின் மதில். ரு

## சு. அரச வுழிஞை

ஊக்க முரண்மிகுதி யொன்றிய நற்சூழ்ச்சி
ஆக்க மவன்க ணகலாவால் - வீக்கம்
நகப்படா வென்றி நலமிகு தாராற்
ககப்படா வில்லை யரண். சு

## எ. கந்தழி

அன்றெறிந் தானு மிவனு லரண்வலித்
தின்றிவன் மாறு வெதிர்வார்யார் - என்றும்
மடையார் மணிப்பூ ணடையாதார் மார்பிற்
சுடராழி நின்றெரியச் சோ. எ

## அ. முற்றுழிஞை

மயங்காத தார்ப்பெருமை மற்றறிவார் யாரே
இயங்கரண மூன்று மெரித்தான் - தயங்கிணர்ப்
பூக்கொ ளிதழிப் புரிசெஞ் சடையானும்
மாக்கொ ளுழிஞை மலைந்து. அ

௯. காந்தள்

குருகு பெயரிய குன்றெறிந் தானும்
உருகெழு காந்தண் மலைந்தான் - பொருகழற்
கார்கருதி வார்முரச மார்க்குங் கடற்றானைப்
போர்கருதி யார்மலையார் பூ. ௯

க0. புறத்திறை

புல்லார் புகலொடு போக்கொழியப் பொங்கினனாய்ப்
பல்லார் மருளப் படைபரப்பி - ஒல்லார்
நிறத்திறுத்த வாட்டானை நேரார் மதிலின்
புறத்திறுத்தான் பூங்கழலி னான். க0

கக. ஆரெயிலுழிஞை

மயிற்கணைத் தன்னார் மகிழ்தேற லூட்டக்
கயிற்கழலார் கண்கனல் பூப்ப - எயிற்கண்ணார்
வீயப்போர் செய்தாலும் வென்றி யரிதரோ
மாயப்போர் மன்னன் மதில். கக

கஉ. தோலுழிஞை

நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி
இன்றுநாம் வைகல் இழிவாகும் - வென்றொளிரும்
பாண்டி னிரைதோல் பணியார் பகையரணம்
வேண்டி னெளிதென்றான் வேந்து. கஉ

## கா. தற்றுழிஞை

குளிறு முரசினுன் கொண்டா னரணம்
களிறுங் கதவிறப் பாய்ந்த - ஒளிறும்
அயிற்றுப் படைந்த வணியெழு வெல்லாம்
எயிற்றுப் படையா விடைந்து. கங

அந்தரந் தோயு மமையோங் கருமிளை
மைந்தர் மறிய மறங்கடந்து - பைந்தார்
விரைமார்பின் வின்னரல வெங்கணை தூவார்
வரைமார்பின் வைகின வாள்.

நிரைபொறி வாயி னெடுமதிற் சூழி
வரைபுகு புள்ளின மான - விரைபடைந்தார்
வேலேந்து தானை விறலோன் விறன்மறவர்
தோலேந்தி யாட ஞெடர்ந்து.

கோள்வாய் முதலைய குண்டகழி நீராக
வாள்வாய் மறவேந்தன் வந்திறுத்தான் - நீள்வாயில்
ஓங்க லரணத் தொளிவளையார் வெய்துயிர்ப்ப
ஆங்கொ லரிய வமர். க

## கஎ. பாசிநிலை

நாவாயுந் தோணியு மேல்கொண்டு நள்ளாதார்
ஓவார் விலங்கி யுடலவும் - பூவார்
அகழி பரந்தொழுகு மங்குருதிச் சேற்றுப்
பகழிவாய் வீழ்ந்தார் பலர். கஎ

## கஅ. ஏணிநிலை

கற்பொறியும் பாம்புங் கனலுங் கடிகுரங்கும்
விற்பொறியும் வேலும் விலக்கவும் - பொற்புடைய
பாணி நடைப்புரவிப் பல்களிற்றார் சாத்தினார்
ஏணி பலவு மெயில். கஅ

## ககூ. எயிற்பாசி

சுடும ணெடுமதில் சுற்றிப் பிரியார்
கடுமுரா ணெஃகங் கழிய - அடுமுரண்
ஆறினா ரன்றி யரவு முடும்பும்போல்
ஏறினா ரேணி பலர். ககூ

## உ௦. முதுவுழிஞை

கோடுயர் வெற்பி னிலங்கண் டிரைகருதும்
தோடுகொள் புள்ளின் *றொகையொப்பக் - கூடார்
முரணகத்துப் பாற முழவுத்தோண் மள்ளர்
அரணகத்துப் பாய்ந்திழிந்தா ரார்த்து. உ௦

* 'றொகையேய்ப்ப' எனவும் பாடம்.

### உ.க. இதுவுமது

அறியார் வயவ ரகத்திழிந்த பின்னும்
நெறியார் நெடுமதிலு ணோரார் - மறியாம்
கிளியொடு நேராங் கிளவியார் வாட்கட்
களியுறு காமங் கலந்து. உக

### உஉ. அகத்துழிஞை

செங்கண் மறவர் சினஞ்சொரிவாள் சென்றியங்க
அங்கண் விசும்பி னணிதிகழும் - திங்கள்
முகத்தா ரலற முகிலுரிஞ்சுஞ் சூழி
அகத்தாரை வென்ற ரமர். உஉ

### உரு. முற்றுழிதிர்வு

காலை முரச மதிலியம்பக் கண்கனன்று
வேலை விறல்வெய்யோ னோக்குதலும் - மாலை
அடுக மடிசிலென் றம்மதிலு ளிட்டார்
தொடுகழலார் மூழை துடுப்பு. உரு

### உச. யானை கைக்கோள்

ஏவ லிகழ்மறவர் வீய விகல்கடந்து
காவலும் யானையுங் கைக்கொண்டான் - மாவலான்
வம்புடை யொள்வாண் மறவர் தொழுதேத்த
அம்புடை ஞாயி லரண். உச

### உரு. வேற்றுப்படை வரவு

உவனின் றுறுதுயர முய்யாமை நோக்கி
அவனென் றுலகேத்து மாண்மை - இவனன்றி
மற்றியார் செய்வார் மழைதுஞ்சு நீளரணம்
முற்றியார் முற்று விட. உரு

### உசு. உழுது வித்திடுதல்

எழுதெழின் மாடத் திடனெலா நூறிக்
கழுதையேர் கையொளிர்வேல் கோலா - உழுதபின்
வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற்
கள்விரவு தாரான் கதம். உசு

### உஎ. வாண்மண்ணுநிலை

தீர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்
கூர்த்தவாண் மண்ணிக் கொடித்தேரான் - பேர்த்தும்
இடியார் பணைதுவைப்ப விம்மதிலுள் வேட்டான்
புடையா ரறையப் புகழ். உஎ

### உஅ. மண்ணுமங்கலம்

எங்கண் மலர வெயிற்குமரி கூடிய
மங்கல நாள்யா மகிழ்தூங்கக் - கொங்கலர்தார்ச்
செய்சுடர்ப்பூண் மன்னவன் சேவடிக்கீழ் வைகினவே
மொய்சுடர்ப்பூண் மன்னர் முடி. உஅ

## ௨௯. மகட்பாலிகல்

அந்தழை யல்குலு மாடமை மென்றோளும்
பைந்தளிர் மேனியும் பாராட்டித் - தந்தை
புறமதில் வைகும் புலம்பே தருமே
மறமதின் மன்னன் மகள். ௨௯

## ௩0. திறைகொண்டு பெயர்தல்

கோடும் வயிரு மிசைப்பக் குழுமிளை
ஓடெரி வேய வுடன்றுலாய்ப் - பாடி
உயர்ந்தோங் கரணகத் தொன்னார் பணியப்
பெயர்ந்தான் பெருந்தகையி னன். ௩0

## ௩௧. அடிப்பட விருத்தல்

ஒன்றி யவர்நா டொருவழித்தாய்க் கூக்கேட்ப
வென்றி விளையா விழுமதிலோர் - என்றும்
பருந்தார் செருமலையப் பாடி பெயரா
திருந்தா னிகன்மறவ ரேறு. ௩௧

## ௩௨. தொகைநிலை

நாவல் பெயரிய ஞாலத் தடியடைந்
தேவ லெதிரா திகல்புரிந்த - காவலர்
வின்னின்ற தானை விறல்வெய்யோற் கம்மதிலின்
முன்னின் றவிந்தார் முரண். ௩௨

# எ. தும்பைப் படலம்

## க. தும்பை

கார்கருதி நின்றதிருங் கௌவை விழுப்பணையான்
சோர்குருதி சூழா நிலனனைப்பப் - போர்கருதித்
துப்புடைத் தும்பை மலைந்தான் றுகளறுசீர்
வெப்புடைத் தானையெம் வேந்து. க

## உ. தும்பை அரவம்

வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தண்ணடையும்
கொல்களிறு மாவுங் கொடுத்தளித்தான் - பல்புரவி
நன்மணித் திண்டேர் நயவார் தலைபணிப்பப்
பன்மணிப் பூணான் படைக்கு. உ

## ங. தானைமறம்

கழுதார் பறந்தலைக் கண்ணுற்றுத் தம்முள்
இழுதார்வேற் றானை யிகலிற் - பழுதாம்
செயிர்காவல் பூண்டொழுகுஞ் செங்கோலார் செல்வம்
உயிர்காவ லென்னு முரை. ங

## ச. இதுவுமது

வயிர்மேல் வளைஞரல வைவேலும் வாளும்
செயிர்மேற் கனல்விழிப்பச் சீறி - உயிர்மேற்
பலகழியு மேனும் பரிமான்றேர் மன்னர்க்
குலகழியு மோர்த்துச் செயின். ச

## ரு. இதுவுமது

மின்னார் சினஞ்சொரிவேன் மீளிக் கடற்றானை
ஒன்னார் நடுங்க வுலாய்நிமிரின் - என்னாங்கொல்
ஆழித்தேர் வெல்புரவி யண்ணன் மதயானைப்
பாழித்தோண் மன்னர் படை. ரு

## சு. யானைமறம்

அடக்கருந் தானை யலங்குதார் மன்னர்
விடக்கு முயிரு மிசையக் - கடற்படையுள்
பேயு மெருவையுங் கூற்றுந்தன் பின்படரக்
காயுங் கழலான் களிறு. சு

குந்தங் கொடுவில் குருதிவேல் கூடாதார்
வந்த வகையறியா வாளமருள் - வெந்திறல்
ஆர்கழன் மன்ன னலங்குளைமா வெஞ்சிலை
வார்கணையின் முந்தி வரும். ௭

## அ. தார்நிலை

உறுசுடர் வாளோ டொருகால் விலங்கின்
சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டாய் - எறிசுடர்வேற்
றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்தே நின்னோடு
பாங்கலா மன்னர் படை.

### கூ. இதுவுமது

காலான் மயங்கிக் கதிர்மறைத்த கார்முகில்போல்
வேலான்கை வேல்பட *வீழ்ந்தனவே - தோலா
இலைபுனை தண்டா ரிறைவன்மேல் வந்த
மலைபுரை யானை மறிந்து.

### க0. தேர்மறம்

செருமலி வெங்களத்துச் செங்குருதி வெள்ளம்
அருமுரா ணாழி தொடர - வருமரோ
கட்டார் கமழ்தெரியற் காவலன் காமர்தேர்
ஒட்டார் புறத்தின்மே லூர்ந்து. ௯0

### கக. பாண்பாட்டு

தளரிய ரூய்புதல்வர் தாமுண ராமைக்
களரிக் கனன்முழங்க மூட்டி - விளரிப்பண்
கண்ணினார் பாணர் களிறெறிந்து வீழ்ந்தார்க்கு
விண்ணினார் செய்தார் விருந்து. கக

### கஉ. இருவருந்தபுநிலை

காய்ந்து கடுங்களிறு கண்கனலக் கைகூடி
வேந்த ரிருவரும் விண்படர - ஏந்து
பொருபடை மின்னப் புறங்கொடா பொங்கி
இருபடையு நீங்கா விகல். கஉ.

* வேல்விட.

## ௧௩. எருமை மறம்

கடுங்கண் மறவன் கனல்விழியாச் சீறி
நெடுங்கைப் பிணத்திடை நின்றான் - நடுங்கமருள்
ஆள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வாள்வெள்ளந் தன்மேல் வர. ௧௩

## ௧௪. ஏம வெருமை

மருப்புத்தோ ளாக மதர்விடையிற் சீறிச்
செருப்புகன் று செங்கண் மறவன் - நெருப்பிமையாக்
கைக்கொண்ட வெஃகங் கடுங்களிற்றின் மேற்போக்கி
மெய்க்கொண்டான் பின்னரு மீட்டு. ௧௪

## ௧௫. நூழில்

ஆட லமர்ந்தா னமர்வெய்யோன் வீழ்குடர்
சூடன் *மலைந்த சுழல்கட்பேய் - மீடல்
மறந்தவேன் ஞாட்பின் மலைந்தவர் மார்பம்
திறந்தவேல் கையிற் றிரித்து. ௧௫

## ௧௬. நூழிலாட்டு

மொய்யகத்து மன்னர் முரணினி யென்னுங்கொல்
கையகத்துக் கொண்டான் கழல்விடலை - வெய்ய
விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த
படுசுட ரெஃகம் பறித்து. ௧௬

* மலிந்த.

### கஎ. முன்றேர்க் குரவை

ஆனா வயவர்முன் னாட வமர்க்களத்து
வானார்மின் னாகி வழிநுடங்கும் - தோனாக்
கழுமணிப் பைம்பூட் *கழல்வேந்த னூறும்
குழுமணித் திண்டேர்க் கொடி. கஎ

### கஅ. பின்றேர்க் குரவை

இளையாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்
வளையா வயவரும் பின்னாக் - கொளையாய்ந்
தசைவிளங்கும் பாடலொ டாட வருமே
திசைவிளங்குந் தானையான் றேர். கஅ

### கசு. பேய்க்குரவை

முன்னரும் பின்னரும் மூரிக் கடற்றானை
மன்ன னெடுந்தேர் மறனேத்தி - ஒன்னார்
நிணங்கொள்பேழ் வாய நிழல்போ னுடங்கிக்
கணங்கொள்பே யாடுங் களித்து. கசு

### உ0. களிற்றுடனிலை

இறுவரை ;
தறுகட் டகையரிமாப் போன்றான் - சிறுகட்
பெருங்கைக் களிறெறிந்து பின்ன தன்கீழ்ப் பட்ட
கருங்கழற் செவ்வே லவன். உ0

* கழல்வெய்யோன்.

### உக. ஒள்வாளமலை

வாளை பிறழுங் கயங்கடுப்ப வந்தடையார்
ஆளமர் வென்றி யடுகளத்துத் - தோள்பெயராக்
காய்ந்தடு துப்பிற் கழன்மறவ ராடினார்
வேந்தொடு வெள்வாள் விதிர்த்து. உக

### உஉ. தானைநிலை

நேரார் படையி னிலைமை நெடுந்தகை
ஓரா னுறைகழியா னொள்வாளும் - தேரார்க்கும்
வெம்பரிமா வூர்ந்தார்க்கும் வெல்களிற்றின் மேலார்க்கும்
கம்பமா நின்றான் களத்து. உஉ

### உ௩. வேநுவநு நிலை

வெங்கண் முரசதிரும் வேலமருள் வில்லுதைப்ப
எங்கு மருமத் திடைக்குளிப்பச் - செங்கட்
புலவா னெடுந்தகை பூம்பொழி லாகம்
கலவாமற் காத்த கணை. உ௩

### உ௪. சிருங்கார நிலை

எங்கணவ னெங்கணவ னென்பா ரிகல்வாடத்
தங்கணவன் றார்தம் முலைமுகப்ப - வெங்கணைசேர்
புண்ணுடை மார்பம் பொருகளத்துப் புல்லினார்
நுண்ணிடைப் பேரல்கு லார். உ௪

## உரு. உவகைக் கலுழ்ச்சி

வெங்தொழிற் கூற்றமு நாணின்று வெங்களத்து
வந்த மறவர்கை வாடுமிப்பப் - பைங்தொடி
ஆடரிமா வன்னான் கிடப்ப வகத்துவகை
ஓடரிக்க ணீர்பா யுக.

## உசு. தன்னை வேட்டல்

வான மிறைவன் படர்ந்தென வாடுடுப்பா
மானமே செய்யா மறம்விறகாத் - தேனிமிரும்
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளமர்
ஒள்ளழலுள் வேட்டா னுயிர். உசு

## உஎ. இதுவுமது

கற்பின் விழுமிய தில்லைக் கடையிறந்
திற்பிறப்பு நாணு மிடையொழிய - நற்போர்
அணங்கிய வெங்களத் தாருயிரைக் காண்பான்
வணங்கிடை தானே வரும். உஎ

## உஅ. தொகைநிலை

மண்டமர்த் திண்டோள் மறங்கடைஇ மண்புலம்பக்
கண்டிரள்வேன் மன்னர் களம்பட்டார் - பெண்டிர்
கடிதெழு செந்தீக் கழுமினா ரின்னும்
கொடிதேகா னார்ந்தின்று கூற்று. உஅ

## அ. வாகைப் படலம்

### க. வாகை

சூடினுன் வாகைச் சுடர்த்தெரியல் சூடுதலும்
பாடினுர் வெல்புகழைப் பல்புலவர் - கூடார்
உடல்வே லழுவத் தொளிதிகழும் பைம்பூண்
அடல்வேந்த னட்டார்த் தரசு. க

### உ. வாகை அரவம்

அனைய வமரு ளயில்போழ் விழுப்புண்
இனைய வினிக்கவலை யில்லை - புனைக
அழலோ டிமைக்கு மணங்குடைவாண் மைந்தர்
கழலோடு பூங்கண்ணி கச்சு. உ

### ந. அரச வாகை

காவ லமைந்தான் கடலுலகங் காவலால்
ஓவ லறியா துயிர்க்குவகை - மேவருஞ்சீர்
ஐந்தொழி லுன்மறை முத்தீ யிருபிறப்பு
வெந்திறற் றண்ணளியெம் வேந்து. ந

### ச. முரச வாகை

மதியேர் நெடுங்குடை மன்னர் பணிந்து
புதிய புகழ்மாலை வேய - நிதியம்
வழங்குந் தடக்கையான் வான்ரோய் நகருள்
முழங்கு மதிரு முரசு. ச

## ரு. மறக்களவழி

அஞ்சுவரு தானை யமரென்னு நீள்வயலுள்
வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்கும் - வெஞ்சுடர்வேற்
பைங்கட் பணைத்தாட் பகட்டுழவ னல்கலான்
எங்கட் கடையா விடர். ரு

## சு. களவேள்வி

பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக்
கொடித்தானை மன்னன் கொடுத்தான் - முடித்தலைத்
தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக
மூளையஞ் சோற்றை முகந்து. சு

## எ. முன்றேர்க் குரவை

உலவா வளஞ்செய்தா னூழிவாழ் கென்று
புலவாய புன்றலைப்பே யாடும் - கலவா
அரசதிர நூறி யடுகளம் வேட்டான்
முரசதிர வென்றதேர் முன். எ

## அ. பின்றேர்க் குரவை

வஞ்சமில் கோலானை வாழ்த்தி வயவரும்
அஞ்சொல் விறலியரு மாடுபவே - வெஞ்சமரில்
குன்றேர் மழகளிறுங் கூந்தற் பிடியும்போற்
பின்றேர்க் குரவை பிணைந்து. அ

### ௯. பார்ப்பன வாகை

ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினுள்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கும் - ஏதம்
சுடுசுடர் தாழுகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து. ௯

### க0. வாணிக வாகை

உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து - முழுதுணர
ஓதி யழல்வழிபட் டோம்பாத ஈகையான்
ஆதி வணிகர்க் கரசு க0

### கக. வேளாண் வாகை

மூவரு நெஞ்சமர முற்றி யவரவர்
ஏவ லெதிர்கொண்டு மீண்டுரையான் - ஏவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலுள்
உழுவா னுலகுக் குயிர். கக

### கஉ. பொருந வாகை

வெள்ளம்போற் றானை வியந்து விரவாரை
எள்ளி யுணர்த லியல்பன்று - தெள்ளியார்
ஆறுமே லாறியபி னன்றித்தங் கைக்கொள்ளார்
நீறுமேற் பூத்த நெருப்பு. கஉ

### ௧௩. அறிவன் வாகை

இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போல்
அம்மூன்று முற்ற வறிதலால் - தம்மின்
உறழா மயங்கி யுறழினு மென்றும்
பிறழா பெரியோர்வாய்ச் சொல். ௧௩

### ௧௪. தாபத வாகை

நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇச்
சோர்சடை தாழச் சுடரோம்பி - ஊரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி. ௧௪

### ௧௫. கூதிர்ப் பாசறை

கவலை மறுகிற் கடுங்கண் மறவர்
உவலைசெய் கூரை யொடுங்கத் - துவலைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்
மூதின் மடவாள் முயக்கு. ௧௫

### ௧௬. வாடைப் பாசறை

வாடை நலிய வடிக்கண்ணா டோணசை
ஓடை மழகளிற்றா னுள்ளான்கொல் - கோடல்
முகையோ டலம்வர முற்றெரிபோற் பொங்கிப்
பகையொடு பாசறையு ளான். ௧௬

## கள. அரச முல்லை

செயிர்க்க ணிகழாது செங்கோ லுயரி
மயிர்க்கண் முரச முழங்க - உயிர்க்கெல்லாம்
நாவ லகலிடத்து ஞாயி றனையனுய்க்
காவலன் சேறல் கடன். கள

## கஅ. பார்ப்பன முல்லை

ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
நல்லிசை முச்செந்தீ நான்மறையோன் - செல்லலும்
வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
என்றன்றி மீண்ட திலர். கஅ

## கக. அவைய முல்லை

தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னித்
தொடைவிடை யூழிவைத் தோலாத் - தொடைவே'.
டழிபட லாற்ற லறிமுறையேன் றெட்டின்
வழிபடர்தல் வல்ல தவை. கக

## உ0. கணிவன் முல்லை

புரிவின்றி யாக்கைபோற் போற்றுவ போற்றிப்
பரிவின்றிப் பட்டாங் கறியத் - திரிவின்றி
விண்ணிவ் வுலகம் விளைக்கும் விளைவெல்லாம்
**கண்ணி யுரைப்பான் கணி.** உ0

### ௨௧. மூதின் முல்லை

வந்த படைநோனாள் வாயின் முலைபறித்து
வெந்திற லெஃக மிறைக்கொளீஇ - முந்தை
முதல்வர்கற் றான்காட்டி மூதின் மடவாள்
புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு.

### ௨௨. ஏறாண் முல்லை

கன்னின்றா னெந்தை கணவன் களப்பட்டான்
முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று
கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி
எய்போற் கிடந்தானென் னேறு. ௨௨

### ௨௩. வல்லாண் முல்லை

வின்முன் கணைதெரியும் வேட்டைச் சிறுசிறார்
முன்முன் முயலுகளு முன்றிற்றே - மன்முன்
வரைமார்பின் வேல்மூழ்க வாளழுவந் தாங்கி
உரைமாலை சூடினா னூர்.

### ௨௪. காவன் முல்லை

பெரும்பூட் சிறுதகைப் பெய்ம்மலர்ப் பைந்தார்க்
கருங்கழல் வெண்குடையான் காவல் - விரும்பான்
ஒருநாள் மடியி னுலகின்மே னில்லா
திருநால் வகையா ரியல்பு.

## ௨௫. இதுவுமது

ஊறின் றுவகையுள் வைக வுயிரோம்பி
ஆறிலொன் றாணா தளித்துண்டு - மாறின்றி
வான்காவல் கொண்டான் வழிநின் றுவைகலும்
தான்காவல் கொண்ட றகும். ௨௫

## ௨௬. பேராண் முல்லை

ஏந்துவாட் டானை யிரிய வுறைகழித்துப்
போந்துவாண் மின்னும் பொருசமத்து - வேந்தர்
இருங்களி யானை யினமிரிந் தோடக்
கருங்கழலான் கொண்டான் களம். ௨௬

## ௨௭. மற முல்லை

வின்னவி றோளானும் வேண்டிய கொள்கென்னும்
கன்னவி றிண்டோட் கழலானும் - மன்னன்முன்
ஒன்றா னழல்விழியா வொள்வாள் வலனேந்தி
நின்றா னெடிய மொழிந்து. ௨௭

## ௨௮. குடை முல்லை

வேயுள் விசும்பு விளங்கு கதிர்வட்டம்
தாய புகழான் றனிக்குடைக்குத் - தோயம்
எதிர்வழங்கு கொண்மூ விடைபோழ்ந்த சுற்றுக்
கதிர்வழங்கு மாமலை காம்பு. ௨௮

### உகூ. கண்படை நிலை

கொங்கலர்தார் மன்னருங் கூட்டளப்பக் கூற்றணங்கும்
வெங்கதிர்வேற் றண்டெரியல் வேந்தற்குப்-பொங்கும்
புனலாடை யாளும் புனைகுடைக்கீழ் வைகக்
கனலா துயிலேற்ற கண். உகூ

### ௩0. அவிப்பலி

சிறந்த திதுவென்னச் செஞ்சோறு வாய்ப்ப
மறந்தரு வாளம ரென்னும் - பிறங்கழலுள்
ஆருயி ரென்னு மவிவேட்டா ராங்கஃதால்
வீரியரெய் தற்பால வீடு. ௩0

### ௩க. சால்பு முல்லை

உறையார் விசும்பி னுவாமதி போல
நிறையா நிலவுத லன்றிக் - குறையாத
வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறுமோ
சங்கம்போல் வாய்மையார் சால்பு. ௩க

### ௩உ. கிணைநிலை

பகடுவாழ் கென்று பனிவயலு ளாமை
அகடுபோ லங்கட் டடாரித் - துகடுடைத்துக்
குன்றுபோற் போர்விற் குருசில் வளம்பாட
இன்றுபோ மெங்கட் கிடர். ௩உ

### ௬௩. பொருளொடு புகறல்

ஆமினி மூப்பு மகன்ற திளமையும்
தாமினி நோயுந் தலைவரும் - யாமினி
மெய்யைந்து மீதூர வைகாது மேல்வந்த
ஐயைந்து மாய்வ தறிவு. ௬௩

### ௬௪. அருளொடு நீங்கல்

கயக்கிய நோயவாய்க் கையிகந்து நம்மை
இயக்கிய யாக்கை யிறுமுன் - மயக்கிய
பட்படா வைகும் பயன்ஞால நீள்வலை
யுட்படாம் போத லுறும். ௬௪

# ௯. பாடாண் படலம்

## ௧. பாடாண்பாட்டு

மன்னர் மடங்கல் மறையவர் சொன்மாலை
அன்ன நடையினார்க் காரமுதம் - துன்னும்
பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப் பைந்தார்
எரிசினவேற் றானையெங் கோ.

## ௨. வாயினிலை

நாட்டிய வாய்மொழி நாப்புலவர் நல்லிசை
ஈட்டிய சொல்லா னிவனென்று - காட்டிய
காயலோங் கெஃகிமைக்குங் கண்ணார் கொடிமதில்
வாயிலோய் வாயி லிசை.

## ௩. கடவுள் வாழ்த்து

வைய மகளை யடிப்படுத்தாய் வையகத்தார்
உய்ய வுருவம் வெளிப்படுத்தாய் - வெய்ய
அடுந்திற லாழி யரவணையா யென்றும்
நெடுந்தகை நின்னையே யாம்.

## ௪.

பூவை விரியும் புதுமலரிற் பூங்கழலோய்
யாவை விழுமிய யாமுணரேம் - மேவார்
மறத்தொடு மல்லர் மறங்கடந்த காளை
நிறத்தொடு நேர்தருத லான்.

### ரு. பரிசிற்றுறை

வரிசை கருதாது வான்போற் றடக்கைக்
குரிசினீ நல்கயாங் கொள்ளும்—பரிசில்
அடுகளை மார்ப்ப அமரோட்டித் தந்த
படுகளி நால்வாய்ப் பகடு. ரு

### ௬. இயன்மொழி வாழ்த்து

முல்லைக்குத் தேரு மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை
இரவாம லீந்த விறைவர்போ னீயும்
கரவாம லீகை கடன். ௬

### எ. இதுவுமது

ஒள்வா ளமரு ளுயிரோம்பான் றூனீயக்
கொள்வார் நடுவட் கொடையோம்பான்—வெள்வாள்
கழியாமே மன்னர் கதங்காற்றும் வேலான்
ஒழியாமே யோம்பு முலகு. எ

### அ. கண்படைநிலை

மேலா ரிறையமருள் மின்னார் சினஞ்சொரியும்
வேலான் விறன்முனை வென்றடக்கிக்—கோலால்
கொடிய வுலகிற் குறுகாமை யெங்கோன்
கடியத் துயிலேற்ற கண். அ

### கூ. துயிலெடைநிலை

அளந்த திறையா ரகலிடத்து மன்னர்
வளந்தரும் வேலோய் வணங்கக்—களந்தயங்கப்
பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கைசூழ் தாமரைத்
தூமலர்க்க ணேற்க துயில். கூ

### க0. மங்கலநிலை

விண்வேண்டின் வேறுதன் மங்கலம் வேந்தர்க்கு
மண்வேண்டிற் கைகூப்பன் மங்கலம்-பெண்வேண்டின்
றுன்னன் மடவார்க்கு மங்கலந் தோலாப்போர்
மன்னன் வரைபுரையு மார்பு. க0

### கக. இதுவுமது

நீண்டியுங் கண்டும் பயிற்றியுந் தன்செவியால்
வேண்டியுங் கங்குல் விடியலும் - ஈண்டிய
மங்கல மாய நுகர்ந்தான் மறமன்னர்
வெங்களத்து வேலுயர்த்த வேந்து. கக

### கஉ. விளக்குநிலை

வளிதுரந்த கண்ணும் வலந்திரியாப் பொங்கி
ஒளிசிறந் தோங்கி வரலால் - அளிசிறந்து
நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு
வென்னெறியே காட்டும் விளக்கு. கஉ.

### கரு. இதுவுமது

வெய்யோன் கதிர்விரிய விண்மே லொளியெல்லாம்
மையார் தொடுங்கி மறைந்தாங்கு - வையகத்து
கூத்தவை யேத்துங் கொடித்தேரான் கூடியபின்
வேத்தவையுண் மையாக்கும் வேந்து. கரு

### கசா. கபிலைகண்ணிய புண்ணியநிலை

பருக்காழுஞ் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்
குருக்கட் கபிலை கொடுத்தான் - செருக்கோ
டிடிமுரசத் தானை யிகலிரிய எங்கோன்
கடிமுரசங் காலை செய. கசா

### கடு. வேள்விநிலை

கேள்வி மறையோர் கிளைமகிழ்த லென்வியப்பாம்
வேள்வி விறல்வேந்தன் றான்வேட்ப - நீள்விசும்பின்
ஈர்ந்தா ரிமையோரு மெய்தி அழல்வாயால்
ஆர்ந்தார் முறையா லவி. கடு

### கசு. வெள்ளிநிலை

சூழ்கதிர் வான்விளக்கும் வெள்ளி சுடர்விரியத்
தாழ்புயல் வெள்ளந் தருமரோ - சூழ்புரவித்
தேர்விற்றூர் தாங்கித் திகழ்ந்திலங்கு வேலோய்நின்
மார்விற்றூர் கோலி மழை. கசு

### கஎ. நாடு வாழ்த்து

எண்ணி னிடரெட்டு மின்றி வயற்செந்நெற்
கண்ணின் மலரக் கருநீலம் - விண்ணின்
வகைத்தாய் வளனொடு வைகின்று வென்வேல்
நகைத்தாரான் றன்விரும்பு நாடு. கஎ

### கஅ. கிணைநிலை

வெள்ளி முளைத்த விடியல் வயல்யாமை
அள்ளகட் டன்ன வரிக்கிணை - வள்ளியோன்
முன்கடை தட்டிப் பகடுவாழ் கென்னுமுன்
என்கடை நீங்கிற் றிடர். கஅ

### கக. களவழி வா

ஈண்டி யெருவை யிறகுளரும் வெங்களத்து
வேண்டியாங் கொண்ட விறல்வேழம் - வேண்டாள்
வளைகள் வயிரியம்பும் வாட்டானை வேந்தே
விளைகட் பகர்வாள் விலை. கக

### உ0. வீற்றினிதிருந்த பெருமங்கலம்

அழலவிர் பைங்க ணரிமா னமளி
நிழலவிர்பூண் மன்னர்நின் றேத்தக் - கழல்புனைந்து
வீமலிதார் மன்னவனும் வீற்றிருந்தான் வீங்கொலிநீர்ப்
பூமலி நாவற் பொழிற்கு. உ0

## ௨௧. குடுமிகளைந்த புகழ்சாற்றுநிலை

பூந்தா மரையிற் பொடித்துப் புகல்விசும்பின்
வேந்தனை வென்றான் விறன்முருகன் - ஏந்தும்
நெடுமதில் கொண்டு நிலமிசையோ ரேத்தக்
குடுமி களைந்தானெங் கோ. ௨௧

## ௨௨. மணமங்கலம்

அணக்கருந் தானையா னல்லியந்தார் தோய்ந்தோள்
மணக்கோல மங்கலம்யாம் பாட - வணக்கருஞ்சீர்
ஆரெயின் மன்னன் மடமக ளம்பணைத்தோட்
கூரெயிற்றுச் செவ்வாய்க் கொடி. ௨௨

## ௨௩. பொலிவுமங்கலம்

கருங்கழல் வெண்குடைக் காவலற்குச் செவ்வாய்ப்
பெருங்கட் புதல்வன் பிறப்பப் - பெரும்பெயர்
விண்ணோர் மகிழ்ந்தார் வியலிடத்தா ரேத்தினார்
எண்ணா ரவிந்தா ரிகல். ௨௩

## ௨௪. நாண்மங்கலம்

கரும்பகடுஞ் செம்பொன்னும் வெள்ளணிநாட் பெற்றார்
விரும்பி மகிழ்தல் வியப்போ - சுரும்பிமிர்தார்
வெம்முரண் வேந்தரும்வெள் வளையார் தோள்விழைந்து
தம்மதி றூந்திறப்பர் தாள். ௨௪

## உரு. பரிசினிலை

வெல்புரவி பூண்ட விளங்கு மணித்திண்டேர்
நல்கிய பின்னு நனிநீட்டப் - பல்போர்
விலங்குங் கடற்றானை வேற்றார் முனைபோற்
கலங்கு மனித்தென் கடும்பு. உரு

## உசு. பரிசில்விடை

படைநவின்ற பல்களிறும் பண்ணமைந்த தேரும்
நடைநவின்ற பாய்மாவு நல்கிக் - கடையிறந்து
முன்வந்த மன்னர் முடிவணங்குஞ் சேவடியாற்
பின்வந்தான் பேரருளி னான். உசு

## உஎ. ஆள்வினை வேள்வி

நின்றபுகழொடு நீடுவாழ் கிவ்வுலகில்
ஒன்ற வுயிர்களிப்ப வோம்பலால் - வென்றமருள்
வாள்வினை நீக்கி வருக விருந்தென்னும்
ஆள்வினை வேள்வி யவன்.

## உஅ. பாணாற்றுப்படை

இன்றொடை நல்லிசை யாழ்ப்பாண வெம்மைப்போற்
கன்றுடை வேழத்த கான்கடந்து - சென்றடையிற்
காமரு சாயலாள் கேள்வன் சயமலராத்
தாமரை சென்னி தரும். உஅ

## உகூ. கூத்தராற்றுப்படை

*கோலவிற் புருவத்துக் கொம்பன்னார் கூத்தின்*
*தலைவ தவிராது சேறி - சிலைகுலாங்*
*காரினை வென்ற கவிகையான் கைவளம்*
*வாரினை கொண்டு வரற்கு.* உகூ

## ௩௦. பொருநராற்றுப்படை

*தெருவி லலமருந் தெண்கட் டடாரிப்*
*பொருவில் பொருநநீ செல்லிற் - செருவில்*
*அடுந்தடக்கை நோன்றா ளமர்வெய்யோ னீயும்*
*நெடுந்தடக்கை யானை நிரை.* ௩௦

## ௩க. விறலியாற்றுப்படை

*சில்வளைக்கைச் செவ்வாய் விறலி செருப்படையான்*
*பல்புகழ் பாடிப் படர்தியேல் - நல்லவையோர்*
*ஏத்த விழையணிந் தின்னே வருதியாற்*
*பூத்த கொடிபோற் பொலிந்து.* ௩க

## ௩உ. வாயுறைவாழ்த்து

*எஞ்சொ லெதிர்கொண் டிகழான் வழிநிற்பிற்*
*குஞ்சர வெல்படையான் கொள்ளானோ - எஞ்சும்*
*இகலிட னின்றி யெறிமுந்நீர் சூழ்ந்த*
*அகலிட மங்கை யகத்து.* ௩உ

## ௩௩. செவியறிவுறூஉ

அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே - முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டன் முறை. ௩

## ௩௪. குடைமங்கலம்

தன்னிழலோ ரெல்லோர்க்குந் தண்கதிராந் தற்சேரா
வென்னிழலோ ரெல்லோர்க்கும் வெங்கதிராம்-இன்னிழல்
மூவா விழுப்புகழ் முல்லைத்தார்ச் செம்பியன் [வேல்
கோவா யுயர்த்த குடை. ௩௪

## ௩௫. வாண்மங்கலம்

கொங்கவி ழைம்பான் மடவார் வியன்கோயில்
மங்கலங் கூற மறங்கனலும் - செங்கோல்
நிலந்தரியச் செல்லு நிரைதண்டார்ச் சேரன்
வலந்தரிய வேந்திய வாள். ௩௫

## ௩௬. மண்ணுமங்கலம்

கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாள்
மங்கலங் கூற மலிபெய்திக் - கங்கையாள்
பூம்புன லாகங் கெழீஇயினன் போரடுதோள்
வேம்பார் தெரியலெம் வேந்து. ௩௬

## ௧௭. ஓம்படை

*ஒன்றி விரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்*
*வென்று களங்கொண்ட வேல்வேந்தே - சென்றுலாம்*
*ஆழ்கடல்சூழ் வையகத்து ளைந்துவென் றாறகற்றி*
*எழ்கடிந் தின்புற் றிரு.* ௧௭

## ௧௮. புறநிலைவாழ்த்து

*கொடிபடு மூத்தலைவேற் கூற்றக் கணிச்சிக்*
*கடிபடு கொன்றையான் காப்ப - நெடிதுலகிற்*
*பூமலி நாவற் பொழிலகத்துப் போய்நின்ற*
*மாமலைபோன் மன்னுக நீ.* ௧௮

## ௧௯. கொடிநிலை

*பூங்க ணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்*
*பாம்புண் பறவைக் கொடிபோல - ஓங்குக*
*பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்*
*கொல்யானை மன்னன் கொடி.* ௧௯

## ௨0. கந்தழி

*மாயவன் மாய மதுவான் மணிநிரையுள்*
*ஆயனு எண்ண லவனருளான் - காயக்*
*கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்*
*சுழலழலுள் வைகின்று சோ.* ௨0

## ௪௧. வள்ளி

வேண்டுதியா னீயும் விழைவோ விழுமிதே
ஈண்டியம் விம்ம இனவளையார் - பூண்டயங்கச்
சூலமொ டாடுஞ் சுடர்ச்சடையோன் காதலற்கு
வேலனொ டாடும் வெறி. ௪௧

## ௪௨. புலவராற்றுப்படை

வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் செல்லின்
நெறிகொள் படிவத்தோய் நீயும் - பொறிகட்
கிருளீயு ஞாலத் திடரெல்லா நீங்க
அருளீயு மாழி யவன். ௪௨

## ௪௩. புகழ்ந்தனர்பரவல்

சூடிய வான்பிறையோய் சூழ்சடலை நீற்றரங்கத்
தாடி யசையா அடியிரண்டும் - பாடி
உரவுநீர் ஞாலத் துயப்போக என்று
பரவுதும் பல்காற் பணிந்து. ௪௩

## ௪௪. பழிச்சினர்பணிதல்

ஆட லமர்ந்தா னடியடைந்தா ரென்பெறார்
ஓடரி யுண்க ணுமையொருபாற் - கூடிய
சீர்சா லகலத்தைச் செங்க ணழலுகம்
தாராய்த் தழுவப் பெறும். ௪௪

## ௬௫. கைக்கிளை

மங்குல் மனங்கவர மான்மாலை நின்றேற்குப்
பொங்கு மருவிப் புனனாடன் - கங்குல்
வருவான்கொல் வந்தென் வனமுலைமேல் வைகித்
தருவான்கொல் மார்பணிந்த தார். ௬௫

## ௬௬. பெருந்திணை

வயங்குளைமான் றென்னன் வரையகலந் தோய
இயங்கா இருளிடைச் செல்வேன் - மயங்காமை
ஓடரிக் கண்ணு யுறைகழிவாள் மின்னிற்றால்
மாட மறுகின் மழை. ௬௬

## ௬எ. புல்விபொருளாகத் தோன்றிய பாடாண்பாட்டு

மலைபடு சாந்த மலர்மார்ப யாநின்
பலர்படி செல்வம் படியேம் - புலர்விடியல்
வண்டினங்கூட் டுண்ணும் வயல்சூழ் திருநகரிற்
கண்டனங் காண்டற் கினிது. ௬எ

## ௬அ. கடவுண்மாட்டுக் கடவுட்பெண்டிர் நயந்தபக்கம்

நல்கெனி னாமிசையா ளோமென்னுஞ் சேவடிமேல்
ஒல்கெனி னுச்சியா ளோமென்னும் - மல்கிருள்
ஆட லமர்ந்தாற் கரிதா லுமையாளை
ஊட லுணர்த்துவதோ ராறு. ௬அ

சக. கடவுண்மாட்டு மானிடப்பெண்டிர் நயந்தபக்கம்

அரிகொண்ட கண்சிவப்ப அல்லினென் னாகம்
புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி - வரிவண்டு
பண்ணலங்கூட் டுண்ணும் பனிமலர்ப் பாசூரென்
உண்ணலங் கூட்டுண்டா னூர். சக

ருo. குழவிக்கட் டோன்றிய காமப்பகுதி

வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்தா
அரிக்கண்ணி யஞ்சி யலற-எரிக்கதிர்வேற்
செங்கோலன் நுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினும்
எங்கோலந் தீண்ட லினி. ருo

ருக. ஊரின்கட் டோன்றிய காமப்பகுதி

ஊடிய வூட லகல வுளநெகிழ்ந்து
வாடிய மென்றோள் வளையொலிப்பக் - கூடியபின்
யாமநீ டாகென்ன யாழ்மொழியார் கைதொழூஉம்
ஏமநீர்க் கச்சியெம் மூர்.

# ௧௦. பொதுவியற் படலம்

## ௧. போந்தை

குடையலர் காந்தட்டன் கொல்லிச் சுனைவாய்த்
தொடையவிழ் தண்குவளை சூடான் - புடைதிகழும்
தேரதிரப் பொங்குந் திருந்துவேல் வானவன்
போரெதிரிற் போந்தையாம் பூ. ௧

## ௨. வேம்பு

தொடியணிதோ ளாடவர் தும்பை புனையக்
கொடியணிதேர் கூட்டணங்கும் போழ்தின்-முடியணி
காத்தல்சால் செங்கோற் கடுமா னெடுவழுதி [யும்
ஏத்தல்சால் வேம்பி னிணர். ௨

## ௩.

கொல்களி றூர்வர் கொலைமலி வாள்மறவர்
வெல்கழல் வீக்குவர் வேலிளையர் - மல்கும்
கலங்க லொலிபுனற் காவிரி நாடன்
அலங்க லமரழுவத் தார். ௩

துன்னருந் தானைத் தொடுகழலான் றப்பெதிர்ந்து
முன்னர் வணங்கார் முரண்முருங்க - மன்னரும்
ஈடெலாந் தாங்கி யிகலவிந்தார் நீயுநின்
கோடெலா முன்னங் குழை.

### ௫. எழுகநிலை

எம்மனை யாமகிழ எழுக மேற்கொளினும்
தம்மதி ருழ்வீழ்த் திருக்குமே - தெம்முனையுள்
மாவொடு தோன்றி மறலுங்கா லேழுகத்
தாவொடு நேரா மரசு. ௫

### ௬. இதுவுமது

வேண்டார் பெரியர் விறல்வேலோன் ஞனிலையன்
பூண்டான் பொழில்காவ லென்றுரையாம் - ஈண்டு
மருளன்மின் கோள்கருது மால்வரை யாளிக்
குருளையுங் கொல்களிற்றின் கோடு. ௬

வாளமரின் முன்விலக்கி வான்படர்வார் யார்கொலோ
கேளலார் நீக்கிய கிண்கிணிக்காற் - காளை
கலங்கழல் வாயிற் கடுத்தீற்றி யற்றால்
பொலங்கழல் கான்மேற் புனைவு. ௭

### ௮. கற்காண்டல்

மிகையணங்கு மெய்ந்நிறீஇ மீளி மறவர்
புகையணங்கப் பூமாரி சிந்திப் - பகையணங்கும்
வீளைக் கடுங்கணையால் வேறுகி விண்படர்ந்த
காளைக்குக் கண்டமைத்தார் கல். ௮

### ௯. கற்கோணிலை

பூவொடு நீர்தூவிப் பொங்க விரைபுகைத்து
நாவுடை நன்மணி நன்கியம்ப - மேவார்
அழன்மறங் காற்றி யவிந்தாற்கென் றேத்திக்
கழன்மறவர் கைக்கொண்டார் கல். ௯

### ௧௦. கன்னீர்ப் படுத்தல்

காடு கனலக் கனலோன் சினஞ்சொரியக்
கூடிய வெம்மை குளிர்கொள்ளப் - பாடி
நயத்தக மண்ணி நறுவிரைகொண் டாட்டிக்
கயத்தகத் துய்த்திட்டார் கல். ௧௦

### ௧௧. இதுவுமது

கணையூர்ந் துவப்பக் கடுங்கண் மறவர்
பிணையூர்ந்து பேய்வழங்கு ஞாட்பின் - நிணனூர்
விழுக்கினுல் வேய்ந்த விறல்வேலோர் கல்லை
ஒழுக்கினு ரொன்றொருவர் முன். ௧௧

### ௧௨. கன்னடுதல்

மாலை துயல மணியெறிந்து மட்டுகுத்துப்
பீலி யணிந்து பெயர்பொறித்து - வேலமருள்
ஆண்டக நின்ற அமர்வெய்யோற் காகென்று
காண்டக நாட்டினுர் கல். ௧௨.

## ௧௬. கன்முறை பழிச்சல்

அடும்புகழ் பாடி யழுதழுது நோனா
திடும்பையுள் வைகி யிருந்த - கடும்பொடு
கைவண் குருசில்கற் கைதொழூஉச் செல்பாண
தெய்வமாய் நின்றான் றிசைக்கு. ௧௬

## ௧௭. இற்கொண்டு புகுதல்

வாட்புகா வூட்டி வடிமணி நின்றியம்பக்
கோட்புலி யன்ன குருசில்கல் - ஆட்கடிந்து
விற்கொண்ட வென்றி விறன்மறவ ரெல்லோரும்
இற்கொண்டு புக்கா ரியைந்து. ௧௭

## [சிறப்பிற் பொதுவியற்பால]

### ௧. முதுபாலை

நீர்மலி கண்ணொடு நின்றே னிலையிரங்காய்
தார்மலி மார்பன் றகையகலம் - சூர்மகளே
வெள்ளில் விளைவுதிரும் வேயோங்கும் வெஞ்சுரத்துக்
கொள்ளணீ கோடல் கொடிது. ௧

### உ. சுரநடை

உரவெரி வேய்ந்த உருப்பவிர் கானுள்
வரவெதிரின் வைவேல்வாய் வீழ்வாய் - கரவினால்
பேதையைப் பெண்ணியலைப் பெய்வளையை யென்மார்
கோதையைக் கொண்டொளித்த கூற்று. [பிற்

## ௫. தபுதாரநிலை

பைந்தொடி மேலுலக மெய்தப் படருழந்த
மைந்தன் குருசின் மழைவள்ளல் - எந்தை
தவுதாரத் தாழ்ந்த தனிநிலைமை கேளாச்
செவிடா யொழிகென் செவி. ௫

## ௬. தாபதநிலை

கலந்தவனைக் கூற்றங் கரப்பக் கழியா
தலந்தினையு மவ்வளைத் தோளி - உலந்தவன்
தாரொடு பொங்கி நிலனசைஇத் தான்மிசையும்
காரடகின் மேல்வைத்தாள் கை. ௬

## ௭. தலைப்பெயனிலை

இடம்படு ஞாலத் தியல்போ கொடிதே
தடம்பெருங்கட் பாலக னென்னும் - கடன்கழித்து
முள்ளெயிற்றுப் பேதையாள் புக்காள் முரணவியா
வள்ளெயிற்றுக் கூற்றத்தின் வாய். ௭

## ௮. பூசன்மயக்கு

அலர்முலை யஞ்சொ லவணொழிய வவ்விற்
குலமுதலைக் கொண்டொளித்த லன்றி - நிலமுறப்
புல்லிய பல்கிளைப் பூசல் பரியுமோ
கொல்லிய வந்தொழியாக் கூற்று. ௮

### எ. இதுவுமது

எண்ணி னிகல்புரிந்தோ ரெய்தாத தில்போலும்
கண்ணிறைந்தொளிர் வேலான் கரந்தபின் - அண்ணல்
புகழொடு பூசன் மயங்கிற்றுற் பொங்கும்
அகழ்கடல் வேலி யகத்து. எ

### அ. மாலைநிலை

சோலை மயிலன்னா டன்கணவன் சொல்லியசொல்
மாலை நினையா மனங்கடைஇக் - காலைப்
புகையழல் வேலோன் புணர்ப்பாகி நின்றாள்
அகையழ லீமத் தகத்து. அ

### க. மூதானந்தம்

ஒருயி ராக வுணர்க உடன்கலந்தார்க்
கீருயி ரென்ப ரிடைதெரியார் - போரில்
விடனேந்தும் வேலோற்கும் வெள்வளையி னாட்கும்
உடனே யுலந்த துயிர். க

### க0. இதுவுமது

முந்தத்தான் மாவொடு புக்கு முனையமருட்
சிந்தத்தான் வந்தார் செருவிலக்கிக் - குந்தத்தாற்
செல்கணை மாற்றிக் குருசில் சிறைநின்றான்
கொல்கணைவாய் வீழ்தல் கொடிது. க0

### ௧௧. ஆனந்தம்

வேந்தார்ப்ப வெஞ்சமத்து வேலமுழவந் தாங்கினான்
சாந்தா ரகலத்துத் தாழ்வடுப்புண் - தாந்தணியா
மன்னா சொகின மயங்கின வாய்ப்புளும்
என்னுங்கொல் பேதை யினி. ௧௧

### ௧௨. இதுவுமது

இன்னா சொகின மிசையா விரிச்சியும்
அன்னா வலம்வருமென் னாருயிரும் - என்னுங்கொல்
தொக்கார் மறமன்னர் தோலாத் துடிகறங்கப்
புக்கான் விடலையும் போர்க்கு. ௧௨

### ௧௩. ஆனந்தப்பையுள்

புகழொழிய வையகத்துப் பூங்கழற் காளை
திகழொளிய மாவிசும்பு சேர - இகழ்வார்முன்
கண்டே கழிகாத வில்லையாற் கைசோர்ந்தும்
உண்டே யளித்தெ னுயிர். ௧௩

### ௧௪. கையறுநிலை

தாயன்னான் றூர்விலங்கி வீழத் தளர்வொடு
நீயென்னாய் நின்றாயென் னெஞ்சளியை - ஈயென்றார்க்
கில்லென்ற றேற்றா இகல்வெய்யோன் விண்படரப்
புல்லென்ற நாப்புலவர் போன்று. ௧௪

### கரு. இதுவுமது

நின்று நிலமிசையோ ரேத்த நெடுவிசும்பில்
சென்று கழிந்தான் செருவெய்யோன் - என்றும்
அழலுங் கதிர்வே லவன்புகழ் பாடி
உழலு முலகத் துயிர். கரு

## [காஞ்சிப் பொதுவியற்பால]

### கசு. முதுமொழிக் காஞ்சி

ஆற்றி னுணரி னருளறமா மாற்றார்க்குப்
போற்றார் வழங்கிற் பொருள்பொருளாம் - மாற்றிப்
புகலா தொழுகும் புரிவளையார் மென்றோள்
அகலா தளித்தொழுக லன்பு. கசு

### கஎ. பெருங்காஞ்சி

ஆயா தறிவயர்ந் தல்லாந் தகலிடத்து
மாயா நிதிய மனைச்செறீஇ - ஈயா
திறுகப் பொதியன்மி னின்றொடு நாளைக்
குறுக வருமரோ கூற்று. கஎ

### கஅ. பொருண்மொழிக் காஞ்சி

ஆய பெருமை யவிர்சடையோ ராய்ந்துணர்ந்த
பாய நெறிமேற் படர்ந்தொடுங்கித் - தீய
இருளொடு வைகா திடம்படு ஞாலத்
தருளொடு வைகி யகல். கஅ

### ௧௯. புலவரேத்தும் புத்தேணாடு

பொய்யில் புலவர் புரிந்துறையு மேலுலகம்
ஐயமொன் றின்றி யறிந்துரைப்பின் - வெய்ய
பகலின் றிரவின்று பற்றின்று துற்றின்
றிகலின் றிளிவரவு மின்று.

### ௨0. முதுகாஞ்சி

இளமை நிலைதளர மூப்போ டிறைஞ்சி
உளமை யுணரா தொடுங்கி - வளமை
வியப்போவ வில்லா வியலிடத்து வெஃகா
துயப்போக லெண்ணி னுறும். ௨0

### ௨௧. காடு வாழ்த்து

முன்புறந் தான்காணு மிவ்வுலகை யிவ்வுலகில்
தன்புறங் கண்டறிவார் தாமில்லை - அன்பின்
அழுதார்க ணீர்விடுத்த வாறாடிக் கூகை
கழுதார்ந் திரவழங்குங் காடு.

## [முல்லைப் பொதுவியற்பால]

### ௨௨. முல்லை

ஊதை யுளர வொசிந்து மணங்கமழும்
கோதைபோன் முல்லைக் கொடிமருங்குற் - பேதை
குழைவிழி யிணைந்த குவிமுலை யாகம்
கவைஇக் கவலை இலம். ௨௨

## உரு. கார் முல்லை

புனையும் பொலம்படைப் பொங்குளைமான் றிண்டேர்
துனையுந் துனைபடைத் துன்னார் - முனையுள்
அடன்முகந்த தானை யவர்வாரா முன்னம்
கடன்முகந்து வந்தன்று கார். உரு

## உசா. தேர் முல்லை

தீர்ந்து வணங்கித் திறையளப்பத் தெம்முனையுள்
ஊர்ந்துநங் கேள்வ ருழைவந்தார் - சார்ந்து
பரிகோட்ட மின்றிப் பதவார்ந் துகளும்
திரிகோட்ட மாவிரியத் தேர். உசா

## உரு. நாண் முல்லை

கொய்தார மார்பிற் கொழுநன் றணந்தபின்
பெய்வளை யாட்குப் பிறிதில்லை - வெய்ய
வளிமறையு மின்றி வழக்கொழியா வாயில்
நளிமனைக்கு நற்றுணை நாண். உரு

## உசு. இல்லாண் முல்லை

கல்லெனீர் வேலிக் கணவன் கழல்வாழ்த்தி
ஒல்லும் வகையால் விருந்தோம்பிச் - செல்லுந்தம்
இற்செல்வ மன்றி யிரந்தவர்க் கீகல்லாப்
புற்செல்வம் பூவா புகழ். உசு

## உ௭. பகட்டு முல்லை

உய்த்தல் பொறுத்த லொழிவின் றுலிவயலுள்
எய்த்த லறியா திடையின்றி - வைத்த
படுநுகம் பூண்ட பகட்டொடு மானும்
நெடுமொழி யெங்கணவ னோர். உ௭

## உ௮. பான் முல்லை

திங்கள் விளங்குந் திகழ்ந்திலங்கு பேரொளி
அங்கண் விசும்பி னகத்துறைக - செங்கட்
குயிலனைய தேமொழிக் கூரெயிற்றுச் செவ்வாய்ப்
பயில்வளையை நல்கிய பால். உ௮

## உ௯. கற்பு முல்லை

நெய்கொ ணிணந்தா நிறைய வமைத்திட்ட
குய்கொ ளடிசில் பிறர்நுகர்க - வைகலும்
அங்குழைக் கீரை யடகு மிசையினும்
எங்கணவ னல்க வினிது. உ௯

## ௩0. இதுவுமது

மௌவல் விரியு மணங்கமழ் மான்மாலைத்
தெளவன் முதுகுரம்பைத் தான்றமியள் - செவ்வன்
இறைகாக்கு மிவ்வுலகி னிற்பிறந்த நல்லாள்
நிறைகாப்ப வைகு நிறை. ௩0

௩௧.

ஊழிதோ றூழி தொழப்பட் டுலைவின்றி
ஆழிசூழ் வையத் தகமலிய - வாழி
கருவரை மார்பினெங் காதல னல்க
வருவிருந் தோம்பும் வளம்.

## கக. கைக்கிளைப் படலம்

### [ஆண்பாற் கூற்று]

### க. காட்சி

கருந்தடங்கண் வண்டாகச் செவ்வாய் தளிரா
அரும்பிவர் மென்முலை தொத்தாப் - பெரும்பணைத்
பெண்டகைப் பொலிந்த பூங்கொடி [தோட்
கண்டேங் காண்டலுங் களித்தவெங் கண்ணே. க

### உ. ஐயம்

தாமரைமேல் வைகிய தையல்கொ ருழ்தளிரிற்
காமருவும் வானோர்கள் காதலிகொல் - தேமொழி
மையமருண்கண் மடந்தைகண்
ஐய மொழியா தாழுமென் னெஞ்சே. உ

### ங. துணிவு

திருநுதல் வேரரும்புந் தேங்கோதை வாடும்
இருநிலஞ் சேவடியுந் தோயும் - அரிபரந்த
போகித ழுண்கணு மிமைக்கும்
ஆகு மற்றிவ ளகலிடத் தணங்கே. ங

### ச. உட்கோள்

கவ்வை பெருகக் கரந்தென் மனத்திருந்தும்
செவ்வாய்ப் பெருந்தோட் டிருநுதலாள்-அவ்வாயில்
அஞ்சொன் மாரிபெய் தவியாள்
நெஞ்சம் பொத்தி நிறைசுடு நெருப்பே. ச

### ரு. பயந்தோர்ப் பழிச்சல்

கல்லருவி யாடிக் கருங்களிறு காரதிரும்
மல்லலஞ் சாரன் மயிலன்ன - சில்வளைப்
பலவொலி கூந்தலைப் பயந்தோர்
நிலவரை மலிய நீடுவா ழியரே.

### சு. நலம் பாராட்டல்

அம்மென் கிளவி கிளிபயில ஆயிழை
கொம்மை வரிமுலை கோங்கரும்ப - இம்மலை
நறும்பூஞ் சார லாங்கண்
குறுஞ்சுனை மலர்ந்தன தடம்பெருங் கண்ணே:

### எ. நயப்புற்றிரங்கல்

பெருமட நோக்கிற் சிறுநுதற் செவ்வாய்க்
கருமழைக்கண் வெண்முறுவற் பேதை - திருமுலை
புல்லும் பொறியி லேனுழை
நில்லா தோடுமென் னிறையி னெஞ்சே.

### அ. புணரா இரக்கம்

இணரார் நறுங்கோதை யெல்லளையாள் கூட்டம்
புணராமற் பூச றரவும் - உணராது
தண்டா விழுப்படர் நலியவும்
உண்டா லென்னுயி ரோம்புதற் கரிதே.

### க. வெளிப்பட இரத்தல்

உரவொலி முந்நீ ருலாய்நிமிர்ந் தன்ன
கரவருங் காமங் கனற்ற - இரவெதிர
முள்ளெயி றிலங்கு முகிழ்நகை
வெள்வளை நல்காள் விடுமென் னுயிரே.

## [பெண்பாற் கூற்று]

### க0. காண்டல்

கடைநின்று காம நலியக் கலங்கி
இடைநின்ற ஊரலர் தூற்றப் - புடைநின்ற
எற்கண் டிலனாந் நெடுந்தகை
தற்கண் டனென்யான் கண்ட வாறே. க0

### கக. நயத்தல்

கன்னவி றோளானைக் காண்டலுங் கார்க்குவளை
அன்னவென் கண்ணுக் கமுதமாம் - என்னே
மலைமலிந் தன்ன மார்பம்
முலைமலிந் தாழும் முயங்குங் காலே. கக

### கஉ. உட்கோள்

உள்ள முருக வொளிவளையுங் கைநில்லா
கள்ளவிழ் தாரானுங் கைக்கணையான் - எள்ளிச்
சிறுபுன் மாலை தலைவரின்
உறுதுய ரவலத் துயலோ வரிதே. கஉ

### கங. மெலிதல்

குரும்பை வரிமுலைமேற் கோல நெடுங்கண்
அரும்பிய வெண்முத் துகுப்பக் - கரும்புடைத்தோட்
காதல்செய் காமங் கனற்ற
எதி லாளற் கிழந்தனெ னெழிலே. கங

### கச. மெலிவொடு வைகல்

பிறைபுரை வாணுதல் பீரரும்ப மென்றோள்
இறைபுனை யெல்வளை யேக - நிறைபுணையா
யாம நெடுங்கட னீந்துவேன்
காமவொள் ளெரி கனன்றகஞ் சுடுமே. கச

### கரு. காண்டல் வலித்தல்

வேட்டவை யெய்தி விழைவொழிதல் பொய்போலும்
மீட்டு மிடைமணிப் பூணானைக் - காட்டென்று
மாமை பொன்னிறம் பசப்பத்
தூமலர் நெடுங்கண் டுயிலுறந் தனவே. கரு

### கசு. பகன்முனிவுரைத்தல்

தன்க ணளியவாய் நின்றேற்குத் தார்விடலை
வன்கண்ண னல்கா னெனவாடும் - என்கண்
இடரினும் பெரிதா லெவ்வம்
படரினும் பெரிதாற் பாவியிப் பகலே. க

### கஎ. இரவுநீடு பருவரல்

பெண்மே னலிவு பிழையென்னுய் பேதுறீஇ
விண்மே லியங்கு மதிவிலக்கி - மண்மேல்
நினக்கே செய்பகை யெவன்கொல்
எனக்கே நெடியை வாழிய ரிரவே.

### கஅ. கனவின் அரற்றல்

அயர்வொடு நின்றே னரும்படர்நோய் தீர
நயம்வரும் பள்ளிமே னல்கிக் - கயவா
நனவிடைத் தமியேன் வைகக்
கனவிடைத் தோன்றிக் கரத்தனீ கொடிதே. கஅ

### கக. இதுவுமது

தோடவிழ்தார் யானுந் தொடர வவனுமென்
பாடகச் சீறடியின் மேற்பணிய - நாடகமா
வைகிய கங்கு றலைவரின்
உய்குவெ னுலகத் தளியேன் யானே. கக

### உ0. நெஞ்சோடு மெலிதல்

மல்லாடு தோளா னளியவாய் மாலிருட்கண்
செல்லா மொழிக செலவென்பாய் - நில்லாய்
புனையிழை யிழந்த பூசல்
நினையினு நினைதியோ வாழியென் னெஞ்சே. உ0

உக. இதுவுமது

நல்வளை யேக நலந்தொலைவு காட்டிய
செல்லல் வலித்தேனச் செம்மன்முன் - பில்லாத
வம்ப வுரையொடு மயங்கிய
அம்பற் பெண்டிரு மறைகவெம் மலரே.

# பெருந்திணைப் படலம்

## [பெண்பாற் கூற்று]

### க. வேட்கை முந்துறுத்தல்

எழுதெழின் மார்ப மெனக்குரித் தாகென்
றழுதழுது வைகலு மாற்றேன் - தொழுதிரப்பல்
வல்லிய மன்ன வயவேலோய் வாழ்கென
அல்லியந்தார் நல்க லறம். க

### உ. பின்னிலை முயறல்

மற்கொண்ட திண்டோண் மறவே னெடுந்தகை
தற்கண்டு மாமைத் தகையிழந்த - எற்காணப்
பெய்களி யானைப் பிணரெருத்திற் கண்டியான்
கைதொழுதேன் றன்கண் டிலன். உ

### ௩. பிரிவிடை யாற்றல்

ஓடுக கோல்வளையு மூரு மலரறைக
தோடவிழ் தாழை துறைகமழக் - கோடுடையும்
பூங்கானற் சேர்ப்பன் புலம்புகொண் மான்மாலை
நீங்காவென் னெஞ்சகத்து ணின்று. ௩

### ௪. வரவெதிர்ந்திருத்தல்

காம நெடுங்கட னீந்துங்காற் கைபுனைந்த
பூமலி சேக்கைப் புணைவேண்டி - நீமலிந்து
செல்லாய் சிலம்பன் வருதற்குச் சிந்தியாய்
எல்லாக நெஞ்ச மெதிர்.

### ௫. வாராமைக்கு அழிதல்

நுடங்கருவி யார்த்திழியு நோக்கருஞ் சாரல்
இடங்கழி மான்மாலை யெல்லைத் - தடம்பெருங்கண்
தாராா மார்பன் றமியே னுயிர்தளர
வாரான்கொ லாடும் வலம். ௫

### ௬. இரவுத்தலைச் சேறல்

பணையா வரைமுழங்கும் பாயருவி நாடன்
பிணையாா மார்பம் பிணையத் - துணையாய்க்
கழிகாம முய்ப்பக் கனையிருட்கட் செல்கேன்
வழிகாண மின்னுக வான். ௮

### ௭. இல்லவை நதுதல்

முற்றா முலையார் முயங்க விதழ்குழைந்த
நற்றா ரகல நகைதரலின் - நற்றார்
கலவே மெனநேர்ந்துங் காஞ்சிநல் லூர
புலவேம் பொறுத்த லரிது.

### ௮. புலவியுட் புலம்பல்

ஓங்கிய வேலான் பணியவு மொள்ளிழை
தாங்காள் வரைமார்பிற் றார்பரிந் - தாங்கே
அடும்படர் மூழ்கி யமைமென்றோள் வாட
நெடும்பெருங்க ணீந்தின நீர்.

### ௯. பொழுதுகண்டு இரங்கல்

இறையே யிறந்தன எல்வளை யுண்கண்
உறையே பொழிதலு மோவா - நிறையைப்
பருகாப் பகல்கரந்த பையுள்கூர் மாலை
உருகா வுயங்கு முயிர்.

### ௧௦. பரத்தையை ஏசல்

யாமுயங்கு மென்முலையால் யாணர் வயலூரன்
தேமுயங்கு பைந்தார் திரைமுயங்க - யாமுயங்க
எவ்வையர் சேரி யிரவு மிமைபொருந்தாக்
கவ்வை கருதிற் கடை.

## ௧௧. கண்டு கண் சிவத்தல்

கூடிய கொண்கன் குறுகக் கொடிமார்பின்
ஆடிய சாந்தி னணிதொடர்ந்து - வாடிய
தார்க்குவளை கண்டு தரியா இவண்முகத்த
கார்க்குவளை காலுங் கனல். ௧௧

## ௧௨. காதலிற் களித்தல்

காதல் பெருகிக் களிசெய்ய அக்களியாற்
கோதையுந் தாரு மிடைகுழைய - மாதர்
கலந்தாள் கலந்து கடைக்கண்ணுற் கங்குல்
புலந்தாள் புலரியம் போது. ௧௨

## ௧௩. கொண்டகம் புகுதல்

கண்டு களித்துக் கயலுண்க ணீர்மல்கக்
கொண்டகம் புக்காள் கொடியன்னாள் - வண்டினம்
காலையாழ் செய்யுங் கருவரை நாடனை
மாலையான் மார்பம் பிணித்து. ௧௩

## ௧௪. கூட்டத்துக் குழைதல்

மயங்கி மகிழ்பெருக மால்வரை மார்பின்
தயங்கு புனலூரன் றண்டார் - முயங்கியும்
பேதை புலம்பப் பிரிதியோ நீயென்னும்
கோதைசூழ் கொம்பிற் குழைந்து.

### கரு. ஊடலுணெகிழ்தல்

தெரிவின்றி யூடத் தெரிந்துநங் கேள்வர்
பிரிவின்றி நல்கினும் பேணாய் - திரிவின்றித்
துஞ்சே மெனமொழிதி தூங்கிருண் மான்மாலை
நெஞ்சே யுடைய நிறை.

### கசு. உரைகேட்டு நயத்தல்

ஆழ விடுமோ அலரொடு வைகினும்
தாழ்குர லேனற் றலைக்கொண்ட - நூழில்
விரையாற் கமழும் விறன்மலை நாடன்
உரையாற் றளிர்க்கு முயிர்.

### கஎ. பாடகச் சீறடி பணிந்தபின் இரங்கல்

அணிவரு பூஞ்சிலம் பார்க்கு மடிமேல்
மணிவரை மார்பன் மயங்கிப் - பணியவும்
வற்கென்ற நெஞ்சம் வணங்காய் சிறுவரை
நிற்கென்றி வாழியர் நீ.

### கஅ. பள்ளிமிசைத் தொடர்தல்

யானை தொடருங் கொடிபோல யானுன்னைத்
தானை தொடரவும் போதியோ - மானை
மயக்கரிய வுண்கண் மடந்தைதோ ளுள்ளி
இயக்கருஞ் சோலை யிரா.

### ௧௧. செல்கென விடுத்தல்

விலங்குநீங்கில்லை வெள்வேலோய் சென்றீ
இலங்கிழை யெவ்வ நலியக் - கலங்கிக்
குறியுள் வருந்தாமைக் குன்றுசூழ் சோலை
நெறியுள் விரிக நிலா.

## [இருபாற் பெருந்திணை]

### ௧. செலவழுங்கல்

நடுங்கி நறுநுதலா ணன்னலம்பீர் பூப்ப
ஒடுங்கி யுயங்க லொழியக் - கடுங்கணை
வில்லே ருழவர் விடரோங்கு மாமலைச்
செல்லே மொழிக செலவு. ௧

### ௨. மடலூர்தல்

இன்றிப் படரோ டியானுழப்ப வைங்கணையான்
வென்றிப் பதாகை யெடுத்தானும் - மன்றில்
தனிமடமா ஞேக்கி தகைநலம்பா ராட்டிக்
குனிமடன்மாப் பண்ணிமேல் கொண்டு. ௨

### ௩. தூதிடை யாடல்

வள்வாய்ந்த பண்ணுக திண்டேர் வடிக்கண்ணாள்
ஒள்வாள்போன் மாலை யுயல்வேண்டும் - கள்வாய
தாதொடு வண்டிமிருந் தாம வரைமார்ப
தூதொடு வந்தேன் றொழ. ௩.

### ௪. துயரவற் குரைத்தல்

உள்ளத் தவலம் பெருக வொளிவேலோய்
எள்ளத் துணிந்த விருண்மாலை - வெள்ளத்துள்
தண்டா ரகலந் தழீஉப்புணையா நீநல்கின்
உண்டாமென் றோழிக் குயிர்.

### ௫. கண்டு கைசோர்தல்

ஆம்ப லுடங்கு மணிவளையு மேகின
கூம்பன் மறந்த கொழுங்கயற்கண் - காம்பின்
எழில்வாய்ந்த தோளி யெவனாங்கொல் கானற்
பொழிலெல்லா மீயும் புலம்பு.

### ௬. பருவமயங்கல்

பெரும்பணை மென்றோள் பிரிந்தாரெம் முள்ளி
வரும்பருவ மன்றுகொ லாங்கொல் - சுரும்பிமிரும்
பூமலி கொன்றை புறவெல்லாம் பொன்மலரும்
மாமயிலு மாலு மலை.

### ௭. இதுவுமது

பொறிமயி லாலின பொங்க ரெழிலி
சிறுதுவலை சிந்தின சிந்த - நறிய
பவர்முல்லை தோன்றி பரியாம லீன்ற
அவர்வருங் காலமீ தன்று.

### ௮. ஆண்பாற் கிளவி

கயற்கூடு வாண்முகத்தாட் கண்ணிய நெஞ்சம்
முயற்கூடு முன்னதாக் காணின் - உயற்கூடும்
காணு மரபிற் கடும்பகலுங் கங்குலும்
நாணுரு மேயா நகை. ௮

### ௯. பெண்பாற் கிளவி

வானத் தியலு மதியகத்து வைகலும்
கானத் தியலு முயல்காணும் - தானத்தின்
ஒள்வளை யோடவு முள்ளான் மறைந்துறையும்
கள்வனைக் காணுதிவ் வூர். ௯

### ௧௦. வெறியாட்டு

வெய்ய நெடிதுயிரா வெற்ப னளிநினையா
ஐய நனிநீங்க ஆடினாள் - மையல்
அயன்மனைப் பெண்டிரோ டன்னைசொ லஞ்சி
வியன்மனையு ளாடும் வெறி. ௧௦

### ௧௧. பாண்வரவுரைத்தல்

அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையாய் தாநொடியும்
வஞ்சந் தெரியா மருண்மாலை - எஞ்சேரிப்
பண்ணியல் யாழொடு பாணனூர் வந்தாரால்
எண்ணிய தென்கொலோ வீங்கு. ௧௧

### கஉ. பரத்தை கூறல்

பலவுரைத்துக் கூத்தாடிப் பல்வய லூரன்
நிலவுரைக்கும் பூணவர் சேரிச் - செலவுரைத்து
வெங்கட் களியால் விறலி விழாக்கொள்ளல்
எங்கட் கவன்றூ ரெளிது. கஉ.

### கங. விறலி கேட்பத் தோழி கூறல்

அரும்பிற்கு முண்டோ அலரது நாற்றம்
பெருந்தோள் விறலி பிணங்கல் - சுரும்போ
டதிரும் புனலூரற் காரமிர்த மன்றோ
முதிரு முலையார் முயக்கு. கங

### கச. விறலி தோழிக்கு விளம்பல்

உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க
முளைத்த முறுவலார்க் கெல்லாம் - விளைத்த
பழங்க ளனைத்தாய்ப் படுகளி செய்யும்
முழங்கும் புனலூரன் மூப்பு. க

### கரு. பரத்தைவாயில் பாங்கிகண்டுரைத்தல்

மாணலங் கொள்ளு மகிழ்நன் றணக்குமேற்
பேணலம் பெண்மை யொழிகென்பார் - காணக்
கலவ மயிலன்ன காரிகையார் சேரி
வலவ நெடுந்தேர் வரும். க

### ௧௬. பிறர்மனைத் துயின்றமை விறலி கூறல்

தண்டா ரணியவாந் தையலார் சேரியுள்
வண்டார் வயலூரன் வைகினமை - உண்டால்
அறியே னடியுறை யாயிழையாற் பெற்றேன்
சிறியேன் பெரிய சிறப்பு. ௧௬

### ௧௭. குற்றிசை

கரிய பெருந்தடங்கண் வெள்வளைக்கை யாளை
மரிய கழிகேண்மை மைந்த - தெரியின்
விளிந்தாங் கொழியினும் விட்டகலார் தம்மைத்
தெளிந்தாரிற் றீர்வது தீது. ௧௭

### ௧௮. குறுங்கலி

பண்ணவாந் தீஞ்சொற் பவளத் துவர்ச்செவ்வாய்ப்
பெண்ணவாம் பேரல்குற் பெய்வளை - கண்ணவாம்
நன்னலம் பீர்பூப்ப நல்கார் விடுவதோ
தொன்னல மூண்டார் தொடர்பு. ௧௮

# ஒழிபு

## ௧. கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தல்

சீர்மிகு நல்லிசை பாடிச் செலவயர்தும்
கார்முகி லன்னார் கடைநோக்கிப் - போர்மிகு
மண்கொண்ட வென்மற மன்னரே யாயினும்
வெண்கொண்ட லன்னாரை விட்டு.

காடுங் கடுந்திரை நீர்ச்சுழியுங் கண்ணஞ்சான்
சாடுங் கலனும் பலவியக்கி - நீடும்
பலிசையாற் பண்டம் பகர்வான் பரியான்
கலிகையா னீக்கல் கடன். ௨

## ௩. மல்வென்றி

கண்டான் மலைந்தான் கதிர்வானங் காட்டியே
கொண்டான் பதாகை மறமல்லன் - வண்டார்க்கும்
மாலை துயலு மருவிய மாமலை
போலுந் திரடோள் புடைத்து. ௩

## ௪. உழவன் வென்றி

மண்பத நோக்கி மலிவயலும் புன்செய்யும்
கண்பட ஏர்பூட்டிக் காலத்தால் - எண்பதனும்
தத்துநீ ரார்க்குங் கடல்வேலித் தாயர்போல்
வித்தித் தருவான் விளைவு. ௪

### ரு. ஏறுகோள் வென்றி

குடைவரை யேந்தியநங் கோவலனே கொண்டான்
அடையவிழ் பூங்கோதை யஞ்சல் - விடையரவம்
மன்றங் கறங்க மயங்கப் பறைபடுத்
தின்று நமர்விட்ட ஏறு. ரு

### சா. கோழி வென்றி

பாய்ந்து மெறிந்தும் படிந்தும் பலகாலும்
காய்ந்தும்வாய்க் கொண்டுங் கடுஞ்சேவல் - ஆய்ந்து
நிறங்கண்டு வித்தகர் நேர்விட்ட கோழிப்
புறங்கண்டுந் தான்வருமே போர்க்கு. சா

### எ. தகர் வென்றி

அருகோடி நீங்கா தணைதலு மின்றித்
திரிகோட்ட மாவிரியச் சீறிப் - பொருகளம்
புக்கு மயங்கப் பொருது புறவாயை
நக்குமா னல்ல தகர். எ

### அ. யானை வென்றி

கஞ்சுகம் வாய்த்த கவளந்தன் கைக்கொண்ட
குஞ்சரம் வென்ற கொலைவேழம் - துஞ்சா
துழலையும் பாய்ந்திறுத் தோடாது தான்றன்
நிழலையுந் தான்சுளிக்கு நின்று. அ

### ௯. பூழ் வென்றி

சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக சொல்லுங்காற
சொல்லும் பலவுள சொன்னபின் - வெல்லும்
நலம்வர நாடி நடுங்காது நூற்கட்
புலவரா லாய்ந்தமைத்த பூழ்.

### ௧௦. சிவல் வென்றி

ஒடடியா ரெல்லா முணரார் புடைத்தபின்
விட்டோட வேண்டுமோ தண்ணுமை - விட்ட
சுவடேற்கு மாயிற் சுடரிழாய் சோர்ந்து
கவடேற்க வோடுங் களத்து.

### ௧௧. கிளி வென்றி

இலநா முறைப்பதன்க ணெல்வளை நாணப்
பலநாள் பணிபதமுங் கூறிச் - சிலநாளுள்
பொங்கரி யுண்கண்ணாள் பூவைக்கு மாறாகப்
பைங்கிளியைக் கற்பித்தாள் பாட்டு.

### ௧௨. பூவை வென்றி

புரிவொடு நாவினாற் பூவை புணர்த்துப்
பெரிய வரியவை பேசும் - தெரிவளை
வெள்ளெயிற்றுச் செவ்வாய் வரியுண்க ணாள்வளர்த்
கிள்ளை கிளந்தவைகேண் டிட்டு.

## ௧௩. குதிரை வென்றி

ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையும்
கர்து மறமுங் கறங்குளைமா - முந்துற
மேல்கொண் டவைசெலீஇ வென்வேலான் மேம்பட்டான்
வேல்கொண்ட கண்ணுளை மீட்டு. ௧௩

## ௧௪. தேர் வென்றி

ஒலிமணித் திண்டே ருடையாரை வெல்லும்
கலிமணித் திண்டேராற் காளை - கலிமாப்
பலவுடன் பூட்டிப் படர்சிறந் தைந்து
செலவொடு மண்டிலஞ் சென்று. ௧௪

## ௧௫. யாழ் வென்றி

பாலை படுமலை பண்ணி யதன்கூட்டம்
கோலஞ்செய் சீறியாழ் கொண்டபின் - வேலைச்
சுவையெலாந் தோன்ற வெழீஇயினான் சூழ்ந்த
அவையெலா மாக்கி யணங்கு.

## ௧௬. சூது வென்றி

கழகத் தியலுங் கவற்றி னிலையும்
அழகத் திருநுதலா ளாய்ந்து - புழகத்து
பாய வகையாற் பணிதம் பலவென்றாள்
ஆய வகையு மறிந்து.

## ௧௭. ஆடல் வென்றி

கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்
கொய்பூங்கொம் பன்னாள் குறிக்கொண்டு - பெய்பூப்
படுகளி வண் டார்ப்பப் பயில்வளைநின் றாடும்
தொடுகழன் மன்னன் துடி. ௧௭

## ௧௮. பாடல் வென்றி

வண்டுறையுங் கூந்தல் வடிக்கண்ணாள் பாடினாள்
வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக் - கண்டறியக்
கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடையாழ்
அந்நரம்பு மச்சுவையு மாய்ந்து. ௧௮

## ௧௯. பிடி வென்றி

குவளை நெடுந்தடங்கட் கூரெயிற்றுச் செவ்வாய்
அவளொடு மாமையொப் பான - இவளொடு
பாணியுந் தூக்கு நடையும் பெயராமைப்
பேணிப் பெயர்ந்தாள் பிடி. ௧௯

புறப்பொருள் வெண்பாமாலை

முற்றும்.